மனந்தளர்ந்து கைசோர்வார்க்கு அவர் பூர்வார்ஜிதப் பெருமையேகேடு விளைவிப்பதாக வன்றோ முடியும். அந்தோ! இக்கேட்டிற்கோ நம்முன்னோர் நமக்காக வருந்தியுழைத்துப் பொருளீட்டிவைக்கின்றார்கள்! பிதிர்களாய்நிற்கும் அம்முன்னோர் இவ்விபரீத விளைவைக் கண்டால் நம்மை எங்ஙனம் வாழ்த்துவர்? இக்கூறிய உண்மை செல்வப்பொருளுக் கன்றி கல்விப்பொருளுக்கும் ஒரு குடும்பத்துள்வந்த ஒருவனுக்கன்றி ஒரு தேசத்திற்பிறந்த ஒவ்வொரு தலைமுறையாருக்கும் ஒன்றுபோலவே பொருத்தமுடைய தாதலால்

"குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்."

என்னும் திருக்குறளை நம்பி நம்முன்னோர் யாதேனும் ஒருவழியில் அபரிமிதமான சிறப்படைந்தா ராயின் நாமும் அவர் போலவே இயன்ற அளவும் முயன்று பெருமைபெறக் கருதுவதன்றோ அம்முன்னோர்க்குரிய மக்கள் நாமென முன்னிற்றற் கேற்ற முறைமை!

"தீங்கரும் பீன்ற திரள்கா லுளையலரி
தேங்கமழ் நாற்ற மிழந்தாஅங்—கோங்கு
முயர்குடி யுட்பிறப்பி னென்னும் பெயர்போறிக்கும்
பேராண்மை யில்லாக் கடை."

ஆதலால் அருமையாகிய பூருவநூல்களைப் பாதுகாத்துப் பயின்று வருதலாகிய் முதற்கடமையோடு அவ்வழியே முயன்று அந்த அந்தக் காலநிலைக்கேற்றவாறே புதுநூல்களை இயற்றமுயலுதல் தமிழ் நாடென்னும் உயர்குடியிற் பிறக்கும் ஒவ்வொரு தலைமுறையாருக்கும் உரித்தான இரண்டாம் கடமையாய் ஏற்படுகின்றது.

4. மேற்கூறிய இரண்டாம் கடமையைச் சிரமேற்கொண்டு தமிழோர்என்னும்பெரியகுடும்பத்துள்ளேதற்காலத்துள்ளதலைமுறையாருட் கல்விகேள்வி அறிவு முதலிய யாவற்றுள்ளும் கனிஷ்டனாகிய சிறியேன்,

"இசையா தெனினு மியற்றியோ ராற்றா
லசையாது நிற்பதாமாண்மை."

என்னும் முதுமொழியைக் கடைப்பிடித்து நவீனமான பலவழிகளுள்ளும் என் சிறு மதிக் கேற்றதோர் சிறுவழியிற் சிலகாலம் முயன்று வடமொழி முதலிய பாஷைகளிலுள்ள நாடகரீதியைப் பின்தொடர்ந்து இயற்றிய "மனோன்மணீயம்" என்னும் இந்நாடகம், பூர்வீக இலக்கி

யங்களுடன் சற்றேனும் உவமிக்க இயையாதெனினும், ஆஞ்சனேயராதி வானரவீரர்கள் சேதுபந்தனஞ் செய்யுங் காலத்தில் கடல் நீரிலே தோய்ந்து மணலிற்புரண்டு அம்மணலைக் கடலில் உகுத்த சிறு அணிற்பிள்ளையின் நன்முயற்சி அங்கீகரிக்கப்பட்டவாறே, கல்விகேள்வியால் நிறைந்த இத்தலைமுறைச் சிரேஷ்டர் அங்கீகரித்து எனது இச்சிறு முயற்சியும் தமிழ்மாதாவுக்கு அர்ப்பிதமாம்படி அருள்புரியாதொழியார் என நம்பிப் பிரகடனம் செய்யப்படுகின்றது.

5. இந்நாடகம் வடமொழி ஆங்கிலேயம் முதலிய பாஷைகளில் உள்ள நாடகவழக்கிற் கிசையச் செய்திருப்பதால் இதனுள்ளடங்கிய கதை அங்கங்கே நடந்தேறும் சம்பாஷணைகளாலும் அவாய் நிலைகளாலும் கோவைப் படுத்தி யறிந்துகொள்ள வேண்டியதா யிருக்கின்றது. இக்கதை புதிதாக இருப்பதினால் அவ்விதம் கோவைப் படுத்தி யறிந்து கொள்ளுவோர்க்கு அனுகூலமாகச் சுருக்கி ஈண்டு கூறப்படுகின்றது.

கதாசங்கிரகம்.

6. முற்காலத்தில் மதுரைமா நகரில் ஜீவகன் என ஒரு பாண்டியன் அரசு புரிந்து வந்தான். அவன் பளிங்குபோலக் களங்கமில்லாத நெஞ்சினன். அவன் மந்திரி குடிலன் என்பவன், ஒப்பற்ற சூழ்ச்சித் திறமை யுடையவனாயினும், முற்றும் தன்னயமொன்றே கருதும் தன்மையனா யிருந்தான். அதனால் அரசனுக்கு மிகவும் உண்மையுடையவன்போல நடித்து அவனை எளிதிலே தன்வசப் படுத்திக்கொண்டான். அங்ஙனம் சுவாதீனப்படுத்திய பின்பு, தன் மனம்போன படியெல்லாம் அரசனை யாட்டித் தன் செல்வமும் செல்வாக்கும் வளர்த்துக்கொள்ளத் தொன்னகராகிய மதுரை இடங் கொடாதென உட்கொண்டு அந்நகரின் மேற் பாண்டியனுக்கு வெறுப்புப் பிறப்பித்து, திருநெல்வேலியென்னும் பதியிற் கோட்டை கொத்தளம் முதலியன இயற்றுவித்து, அவ்விடமே தலைநகராக அரசன் இருந்து அரசாளும்படி செய்தான். முதுநகராகிய மதுரை துறந்து கெடுமதியாளனாகிய குடிலன்கைப்பட்டு நிற்கும் நிலைமையால் ஜீவகனுக்கு யாதுவிளையுமோ என இரக்கமுற்று அவனுடைய குலகுருவாகிய சுந்தரமுனிவர் அவனுக்குத் தோன்றாத்துணையாயிருந்து ஆதரிக்க எண்ணித் திருநெல்வேலிக்கருகிலுள்ள ஒரு ஆச்சிரமம் வந்தமர்ந்தருளினர். முனிவர் வந்து சேர்ந்தபின் நிகழ்ந்த கதையே இந்நாடகத்துட் கூறப்படுவது.

7. முனிவர் எழுந்தருளியிருப்பதை யுணர்ந்து ஜீவகன் அவரைத் தன் சபைக்கழைப்பித்து, தனது அரண்மனை கோட்டை முதலியன

வற்றைக் காட்டி அவை சாசுவதம் என மதித்து வியந்துகொள்ள, அவ் விறுமாப்பைக் கண்ணுற்ற முனிவர், அவற்றின் நிலையாமையைக் குறிப்பாகக் கூறியும் அறியாதொழிய, அவன் குடும்பத்திற்கும் கோட்டை முதலியவற்றிற்கும் க்ஷேமகரமாகச் சில கிரியாவிசேஷம் செய்யும் பொருட்டுஅவன் அரண்மனையில் ஓரறை தம் சுவாதீனத்து விடும்படிகேட்டு அதன் திறவுகோலை வாங்கிக்கொண்டு, தம் ஆச்சிரமம் போயினர். ஜீவக வழுதிக்குச் சந்ததியாக மனோன்மணி என்னும் ஓரே புத்திரிதான் இருந்தனள். அவள் அழகிலும் நற்குண நற்செய்கைகளிலும் ஒப்புயர்வற்றவள். அவளுக்கு அப்பொழுது வயது பதினாறாக இருந்தும் அவள் உள்ளம் குழந்தையர் கருத்தும் துறந்தோர் நெஞ்சும் போல யாதொரு பற்றும் களங்கமுமற்று நின்மலமாகவே யிருந்தது. அவளுக்கு உற்ற தோழியாக இருந்தவள் வாணி. இவள் ஒழுக்கம் தவறா உளத்தள்; தனக்கு நன்றெனத் தெள்ளிதில் தெளிந்தவையே நம்புந் திறத்தள். அல்லனவற்றை யகற்றும் துணிபுமுடையள். இவ்வாணி நடராஜனென்ற ஒரு அழகமைந்த ஆனந்தபுருஷனை யறிய அவர்களிருவர் உள்ளமும் ஒருவழிப்படர்ந்து காதல் நேர்ந்தது. அதற்குமாறாக, இவ்வாணியினது பிதா மிகப்பொருளாசை யுடையோனாதலால், குடிலனுடைய மகன் பலதேவன் என்னும் ஒரு துன்மார்க்கனுக்குத் தன்மகளை மணம் புரியில், தனக்குச் செல்வமும் கௌரவமும் உண்டாமென்ற பேராசை கொண்டு அவ்வாறே அரசன் அனுமதி பெற்று விவாகம் நடத்தத் துணிந்தனன். அதனால் வாணிக்கு விளைந்த சோகம் அளவற்றதாயிருந்தது. இச்சோகம் நீங்க மனோன்மணி பலவாறு ஆறுதல் கூறும் வழக்கமுடையளாயிருந்தாள். இவ்வாறிருக்கும்போது முனிவர் கோட்டை காணவந்தநாளிரவில் ஈடுமெடுப்புமற்ற சேரதேசத்தரசனாகிய புருடோத்தம வர்மனை பூருவகருமபரிபாகத்தால் மனோன்மணி கனாக்கண்டு மோஹம் கொள்ள அவட்குக் காமசுரம் நிகழ்ந்தது. அச்சுரம் இன்னதன்மையதென்றுணராது வருந்தும் ஜீவகனுக்குத் தெய்வகதியாய்த் தம் அறைக்கு மறுநாட்காலமே வந்த முனிவர் மனோன்மணிநிலைமை காமசுரமே எனக் குறிப்பாலுணர்ந்து அவள்நோய் நீங்குமருந்து மணவினையே எனவும் அதற்கு எவ்விதத்திலும் பொருத்தமுடையோன் சேரதேசத்துப் புருடோத்தமனே யெனவும் அவ்வரசனது கருத்தினை நன்குணர்ந்து அம் மணவினை எளிதில் முடிக்க வல்லோன் நடராஜனே யென்வும் உபதேசித்தகன்றார். வாணியினது காதலனாகிய நடராஜன் மேல் அவள்பிதா ஆரோபித்திருந்த அபராதங்களால் வெறுப்புக்கொண்

டிருந்த பாண்டியன் அக்குருமொழியை உட்கொள்ளாதவனாய்க் குடிலனுடைய துன்மந்திரத்தை விரும்பினன். குடிலனோ, தன்னயமே கருதுவோனாதலால், சேரதேசத்தரசன் மருமகனாக வருங்காலத்தில் தன் சுவர்தந்தரியத்திற்கு எங்ஙனம் கெடுதிவருமோ என்ற அச்சத்தாலும் ஒருகால் தன்மகனாகிய பலதேவனுக்கே மனோன்மணியும் அவட்குரிய அரசாட்சியும் சித்திக்கலாகாதா என்றபேராசையாலும் முனிவர்கூறிய மணத்தைத்தடுப்பதற்குத் துணிந்து, தொடக்கத்திற் பெண்வீட்டார் மணம்பேசிப்போதல் இழிவென்னும் வழக்கத்தைப் பாராட்டிப் புருடோத்தமன் மனக்கோள் அறிந்தே அதற்கு யத்தனிக்கவேண்டுமென்றும், அப்படியறிதற்குப் பழைய சிலவிவாதங்களை மேற்கொண்டு ஒரு தூது அனுப்பவேண்டுமென்றும் அப்போது கலியாணத்திற்குரிய சங்கதிகளையும் விசாரித்து விடலாமென்றும் ஒரு சூதுகூற அதனை யரசன் நம்பி, குடிலன் மகன் பலதேவனையே இவ்விஷயத்திற்குத் தூதனாக அனுப்பினான்.

8. சேரதேசத்திலே புருடோத்தமன் தனக்குச் சிலநாளாக நிகழ்ந்துவரும் கனாக்களில் மனோன்மணியைக் கண்டு காமுற்று அவள் இன்னாளென வெளிப்படாமையால் மனம்புழுங்கி யாருடனேனும் போர் நேர்ந்தால் அவ்வாரவாரத்திலாயினும் தன்மனதைக் கொள்ளை கொள்ளும் கனாவொழியாதா என்ற நோக்கமுடனிருக்கும் சந்தியாக இருந்தது. அதனாற் பலதேவன் சென்று தன் பிதா தனக்கு இரகசியமாகக் கற்பித்தனுப்பியபடி சேரன் சபையில் அகௌரவமான துர்வாதம் சொல்லவே புருடோத்தமன் கோபம் கொண்டு போர்க்கோலம்பூண்டு பாண்டி நாட்டின்மேற் படையெடுத்துப் புறப்பட்டான். அச்செய்தியறிந்து ஜீவகனும் போருக்கு ஆயத்தமாகவே இருபடையும் திருநெல்வேலிக் கெதிரிலே கைகலந்தன. அப்படிப்போர் நடக்கும்போது பாண்டியன் சேனையின் ஒரு வியூகத்திற்குத் தலைவனாக இருந்த பலதேவனை அவன் கீழிருந்த ஒருசேவகன் தன் வேலாலே தாக்க, அதனால் அவன் மூர்ச்சிக்கவும் படைமுழுதும் குழம்பவும் சங்கதி ஆயிற்று. அப்படித் தாக்க நேரிட்டகாரணமேதென்றால், பலதேவன் களவுவழிக் "காமம் துய்க்கும் துன்மார்க்கனாதலால் அப்படைஞனது சகோதரியைக் கற்பழித்துக் கெடுத்துவிட்டதுபற்றியுண்டான வைரமே என்பது, படைஞன் வேலாற் பலதேவனைத் தாக்கியபொழுது கூறிய வன்மொழியாலும் அவன் தங்கைக்கு அரண்மனையினின்றும் பலதேவன் திருடிப் பரிசாக அளித்த ஒருபொற்றொடி அவன்கையில் அக்காலம் இருந்தமையாலும் வெளிப்

படுகின்றது. படைநியதி கடந்த அச் சேவகனை யருகு நின்ற வீரர் அக்கணமே கொன்றுவிட்டார்கள். பலதேவனும் மூர்ச்சைதெளிந்து கொண்டான். ஆயினும் படையிற் பிறந்த குழப்பம் தணியாது பெருகி விட்டதனால் பாண்டியன் சேனை சின்னபின்னப்பட்டுச் சிதறுண்டு ஜீவகன் உயிர் தப்புவதும் அரிதாகும்படி தோல்வி நேர்ந்தது. சத்தியவாதியாகிய நாராயணன் என்னும் ஒரு சுத்தவீரன் அக்காலம் வந்து உதவி செய்யாவிடில் அப்போர்க்களத்தில் ஜீவகன் மாண்டேயிருப்பன்.

9. இந்நாராயணன் யாரென்றால் நடராஜனுடைய நண்பன். இவன் குடிலனுடைய சூதுகள் தெரிந்தவன். அரசன் நிந்தித்துத் தள்ளினும் அவனைக் காப்பாற்றும் பொருட்டு அவனை விட்டுநீங்காது மதுரையினின்றும் அவனோடு தொடர்ந்து வந்த பரோபகாரி. குடிலன் இவன் திறமும் மெய்மையும் அறிந்துளா னாதலால், இந்நாராயணன் போர் முகத்திருக்கில், தான் எண்ணியபடி ஜீவகனுயிருக்குக் கேடுவரவொட்டான் எனக்கருதி, சண்டையாரம்பிக்குமுன்னமே அவனைக் கோட்டைக் காவலுக்காக நியமித்தனுப்பினான். ஆயினும் போர்க்களமே கண்ணாக இருந்த நாராயணன் சேனையிற்குழப்பம்பிறந்தது கண்டு சிலகுதிரைப் படைகளைத்திரட்டிக் கொண்டு திடீரென்று பாய்ந்துசென்று அரசனையும் எஞ்சின சேவகரையும் காப்பாற்றிக் கோட்டைக்குட் கொண்டுவந்து விடுத்தான். சுத்தவீரனாகிய அரசன் இங்ஙனம் தான் பகைவருக்கு முதுகிட்ட இழிவை நினைந்து நினைந்து துக்கமும் வெட்கமும் தூண்டவே தற்கொலைபுரிய யத்தனிக்கும் எல்லை நாராயணன் மனோன்மணியது ஆதரவின்மையை அரசனுக்கு நினைப்பூட்டி அக்கொடுந் தொழிலிலிருந்து விலக்கிக்காத்தான். அவனது நயவுரையால் அரசன் ஒருவாறு தெளிவடைந்திருக்கும்போது சேரன் விடுத்த ஒரு தூதுவன் வந்து, ஒரு குடம் தாமிரவர்ணிநீரும் ஓர் வேப்பந் தாரும் போரிலே தோற்றதற்கு அறிகுறியாகக் கொடுத்தால் சமர் நிறுத்துவதாகவும் அன்றேல், மறுநாட்காலையிற் கோட்டைமுதலிய யாவும் வெற்றிடமாம்படி தும்பை சூடிப்போர்முடிப்பதாகவும் கூறினான். போரில் ஒருமுறைதான் புறங்கொடுத்த புகழ்க்கெடுதியை உயிர்விடுத்தேனும் நீக்கத் துணிவுகொண்ட ஜீவகன் அதற்குடன்படாமல் மறுத்துவிட்டு, பின்னும் சமருக்கே யத்தனித்துத் தனது அரண்களைச் சோதித்துநோக்குங்கால் அவை ஒருநாள் முற்றுகைக்கேனும் தகுதியற்றபடி அழிந்திருப்பதைக்கண்ணுற்று, அவ்வளவாகத் தன்படை முற்றும் தோற்க நேரிட்ட காரணம் குடிலனோடு வினவலாயினான். தன் கருத்திற் கெதிராக அரசனைக் காப்பாற்றி வரும்

நாராயணன்மேல் தனக்குள்ள பழம்பகை முடிக்க இதுவே தருணம் எனக்கண்டு அரண் காவலுக்கு நியமிக்கப்பட்ட நாராயணன் காவல் விடுத்துக் கடமை மீறி யுத்தகளம் வந்ததே காரணமாகக் காட்டிக் கோபமூட்டிப் படையிற் பிறந்த குழப்பத்திற்கு ஏதுவாகப் பலதேவனை ஒரு சேவகன் வேலால் தாக்கினதும் தெரிவித்து, அதுவும் வியூகத் தலைவனுக ஆக்கப்பெருத பொருமையால் நாராயணன் ஏவிவிட்ட காரியமே எனவும் அத்தொழிலிற்குப் பரிசாக அவன் அரண்மனையினின்றும் திருடிக் கொடுத்ததே அவன் கையிலிருந்த அரண்மனை முத்திரை பொறித்த பொற்றொடி எனவும் குடிலன் ஒரு பொய்க் கதை கட்டி அதனை அரசன் நம்பும்படி செய்தான். அவ்வாறே களவு கொலை ஆஞ்ஞாலங்கனம் முதலிய குற்றங்களை நாராயணன்மேற் சுமத்தி அவற்றிற்காக அவனைக் கழுவேற்றும்படி விதியும் பிறந்தது.

10. இத்தருணத்தில் சுந்தரமுனிவர் அத்தியந்த ஆவசிகமான ஓரிரகசியாலோசனைக்கு அரசனை யழைப்பதாகச் செய்தி வந்தமையால் நாராயணனை அவ்விதிப்படி கழுவேற்றவில்லை. முனிவர் இப்போது வந்த காரணம் என்னவென்றால், ஜீவகன் குடிலன் வசத்தனுய் நெல்வேலிக் கோட்டையே சாசுவதமென இறுமாந்திருந்தமை கண்டு பரிதாபம் கொண்டு, தமக்கென இரந்து வேண்டிக் கொண்ட அறை முதல், தமதாச்சிரமவெளிவரையும், ஆபத்காலோபயோகமாக அதிரகசியமான ஒரு சுருங்கைபுழைத்துச் சமைத்துக்கொண்டு, பற்றுக்கோடற்று நின்ற ஜீவகனையும் அவன் மகளையும் கேடுற்ற கோட்டையினின்றும் தமது ஆச்சிரமத்திற்கு அச்சுருங்கைவழி யழைத்துச் செல்லவுன்னியே சுந்தரர் இத்தருணம் எழுந்தருளினர். கோட்டையின் நிலையாமை யுணர்ந்தும் அதின்மேல் வைத்த அபிமானம் ஒழியாமையால் அஃதுடன் தான் முடியினும் இன்னும் ஒரு முறைபோருக்கஞ்சிப் புறங்கொடுத்தல் தகாதென ஜீவகன் துணிந்து மறுக்க, மனோன்மணி, பாண்டியர் குலத்திற்கு ஏகசந்ததியாக இருப்பதனுல் மற்றையர் எக்கேடுறினும் அவளையேனும் காப்பாற்றுதல் தம் கடமையென ஒரு தலையா ஒறுத்து முனிவர் கூற, மன்னவன் அங்ஙனம் இயைந்து நடுநிசியில் முனிவரோடு தன் மகளை ஆச்சிரமம் அனுப்புவதாக ஒப்புக்கொண்டான். முனிவரும் சம்மதித்து அகன்ருர். உடனே நிசாமுகம் தோன்றிற்று. தன் அருமை மகளைப் பிரியும் வருத்தம் ஒருபுறமும் பிரியாதிருக்கில் அவட்குண்டாம் கெடுதியைக் குறித்த அச்சம் மற்றொரு புறமுமாக ஜீவகன் சித்தத்தைப் பிடித்தலைக்கக் கலக்கமுற்று குருமொழியிலும் ஐயம்பிறந்து, குடிலனை வர

வழைத்து; முனிவர் அதி ரகசியமாகக் கூறிய சுருங்கைமுதல் சகல சங்கதியும் தெரிவித்து அவனது அபிப்பிராயம் உசாவுவானாயினன். அதற்கு அப்பாதகன் இதுவே தன் மனக்கோள் நிறைவேற்றற்குரிய காலமெனத் துணிந்துகொண்டு மனோன்மணியை யிடம்பெயர்ப்பது தற்கால நிலைமைக்கு எவ்விஷயத்திலும் உத்தமமெனவும் ஆயினும் மணவினை முடியா முன்னம் அனுப்புதலால், கன்னியாகிய அவளுக்குப் பழிப்புரைக் கிடமாவதே யல்லால் அரசனுக்குச் சற்றும் சித்த சமாதானத்திற் கிடமில்லை யெனவும் அவன் நெஞ்சில் சஞ்சலம் விளைவித்து, ஜீவகன் தானாகவே பலதேவனுக்கு மனோன்மணியை அன்றிரவே கலியாணம் செய்துகொடுத்து முனிவர் ஆச்சிரமத்திற்கு மகளையும் மருமகனையும் சேர்த்து அனுப்புவதாகத் துணியும்படி தூண்டி விட்டு, தான் நெடுங்காலமாகக் கொண்டிருந்த அபிலாஷைத்தைப் பூர்த்திப் படுத்திக் கொண்டான்.

11. ஆயினும் அவ்வளவோடு நில்லாமல், தன்னை யறியாமல் முனிவர் வகுத்த கள்ளவழியைக் கண்டறிய வேண்டுமென்று விருப்புற்று, அது அவர் வந்த அன்றே தமக்காகப் பெற்றுக் கொண்ட அறைக்குச் சம்பந்தப் பட்டிருப்பதே இயல்பென ஊகித்து, அவ்வறையிற்சென்று நோக்கி அச்சுருங்கையைக் கண்டு பிடித்து அவ்வழியேபோய் வெளியேறிப் பார்க்குங்கால், சத்துரு பாசறை அருகே தோன்றிற்று. அன்று பகலில் தன் மகனுக்குச் சண்டையில் நேரிட்ட மோசடி போலத் தனக்கும் இனி வரக் கிடக்கும் கொடும் போரில் உட்பகையாலோ வெளிப் பகையாலோ யாதேனும் அபாயம் நேரிட்டுவிடலாமென்ற பயத்தாலும் மனோன்மணிவிவாகம் எப்படியும் அன்றிரவே நடந்தேறுமென்ற துணிவாலும் நடந்தேறில் ஜீவகனது பிரீதியால் சித்திக்கத் தக்கது வேறொன்றுமில்லையென்ற உறுதியாலும், கோட்டைக்குத் திரும்பவேண்டுமென்ற எண்ணம்விடபட, தான்வருந்திக்கண்டுபிடித்த கற்படையைச்சேரனுக்குக் காட்டி அவ்வழியே அவனை அழைத்துச் சென்று யாதொரு உயிர்ச்சேதத்திற்கு மிடமில்லாமல், பாண்டியனையும் அவன் கோட்டையினையும் சுலபமாகப் பகைவன் கையில் ஒப்பித்து விட்டால், ஒருகுடம் ஜலத்திற்கும் ஒருபூமாலைக்குமாகச் சமரை நிறுத்தித் தன்னூருக்குத் திரும்ப எண்ணின சேரன், தன்னையே முடிசூட்டிச் சிங்காதனம் சேர்க்காதொழிவனோ என்ற பேராசை பிடர்பிடித்துந்தவும் ஊழ்வலி யொத்து நிற்கவும் செய்ததினால், அத்துரோகியாகிய குடிலன் மெள்ள மெள்ளப் பாசறை நோக்கிப் போகவே, கனவில் மனோன்மணியினது உருவங் கண்டு காமுற்று நாள் முதலாக யாதொன்றிலும் மனஞ் செல்லாதவ

ளுய் இரவெல்லாம் நித்திரையற்றுத் தனிமையே திரிந்து வருந்தும் புரு டோத்தமனை நடுவழியிற் சந்தித்துக் கொண்டான். அதுவும் தனது பாக்கியக் குறியாகவே மதித்து மகிழ்ந்த குடிலன், எதிர்ப்பட்ட சேர னிடம் தனது துரோகசிந்தனையை வெளிப்படுத்த, தன்னயங் கருதாச் சதுரனாகிய புருடோத்தமன், தனது சேவகரைக் கூவிக் குடிலன் காலி லும் கையிலும் விலங்கிடுவித்து "வீரமே புயிராகவுடைய வஞ்சி வேந்த ருக்கு வெற்றியன்று விருப்பு, இவ்வித இராஜ துரோகிகளைக் காட்டிக் கொடுத்து மாற்றலராகிய மன்னவரையும் இரக்ஷித்துப் பின்பு வேண்டு மேல் பொருது தமது வீரம் நாட்டலேயாம்" என அவனுக்கு விடை கூறி, அவன் கூறிய சுருங்கை வழியே ஜீவகன் சபைக்கு வழிகாட்டி வரும்படி கட்டளையிட்டான். இம்மொழி கேட்ட பாவி இடியொலிகேட்ட பாம்புபோலத் திடுக்கிட்டுத் திகைத்துநின்றான். ஆயினும் தானிட்ட கட் டளை மீறில் சித்திரை வதையே சிக்ஷையாமென்று சேரன் சினத்துக்கூற, அதற்கு அஞ்சி அவ்வாறே கற்படைக்கு வழிகாட்டிநடப்பானாயினன்.

12. இப்பால் ஜீவகன் தன் மகளைப் பலதேவனுக்கு மணஞ்செய் வித்து இருவரையும் முனிவர் ஆச்சிரமம் அனுப்புவதே தகுதியெனத் தெளிந்தவாறே அச் செய்தியை மனோன்மணிக் கறிவிக்க அது அவள் செவிக்குக் காய்ச்சின நாராசம்போ லிருந்ததாயினும் தன் பிதாவுக்கு நேர்ந்த ஆபத்காலத்தை நன்குணர்ந்து அவனுக் கேற்றபடி நடந்து அவ னைத் தேற்றுவதே தற்கால நிலைக்கேற்ற தனது கடமைப்பாடெனத் தெளிந்து அங்ஙனம் ஒப்புக்கொண்டதுமன்றி, தன்பாடு எங்ஙனம் ஆயி னும் தன்னைச் சார்ந்தவர் சுகத்தைப் பாராட்டும் பெருங்குணத்தால், காதல் கொண்டிருக்கும் வாணி, தன் கருத்திற் கிசைய நடராஜனை மணஞ் செய்து கொள்ளவும், நெடுங்காலமாகத் தன் குடும்ப ஊழியம் தலைக்கொண்டு நின்ற நாராயணன் செய்த தவறு யாதே யாயினும் அத னைப் பொறுத்து அவனைச் சிறைவிடவும் தன் பிதாவினிடம் விரும்பிக் கேட்டுக் கொண்டனள். அப்படியே ஜீவகன் அனுமதி கொடுத்து அக மகிழ்ந்து மணவினைக் காயத்தம் செய்யவே, நடுநிசி சமீபிக்க முனிவரும் நடராஜனும் வந்து சேர்ந்தார்கள். தாம் போய் மீளுவதற்குள்ளாகக் கு டிலன் செய்த துராலோசனையும் அதற்குடன்பட்ட மன்னவனுடைய ஏழைமையும் கருணைவிலாசம் இருந்தமையும் கண்டுவியந்து அரசன் நிச் சயித்த விண்ணமே நடத்தச் சுந்தரர் இசைந்தார்.

13. கற்படைக் கருகில் உள்ள மணவறையை விவாகமுகூர்த்தத் திற் கிசைந்தவாறு அலங்கரித்து, அதில் குடிலன் ஒழிய மற்ற மந்திரி பிரதானிகளுடன் முனிவர் ஜீவகன் நடராஜன் பலதேவன் நாராயணன் முதலிய அனைவரும் கூடிக் குடிலன் வரவிற்குச் சற்று எதிர்பார்த்திருந்

தும் வரக் காணாமையால் மணவினைச் சடங்குகள் தொடங்கி, பலதேவ னுக்கு மாலைசூட்ட மனோன்மணியை வரவழைக்கும் எல்லை, குடிலன் வழிகாட்டக் கற்படைவழி வந்த புருடோத்தமனும் முனிவரறையில் வந்து சேர்ந்து அடுத்த அறையாகிய மணவறையில் நடக்கும் ஆகோ ஷம் என்னவென்று நோக்கவே, தன் திரைவிட்டு, வெளிவந்து பலதே வனெதிரே மணமாலையும் கையுமாய்ச் சித்திரப் பிரதிமை போல உணர் வற்றுச் செயலற்றுநின்ற தன் காதலியாகிய மனோன்மணியைக் கண்ணி ரண்டும் களிக்கக் காணலும், பள்ளத்துட் பாயும் பெரு வெள்ளம்போல் அவாப்பெருகி யீர்த்தெழ, திடீரென்று கடிதிற் குதித்து யாரும் அறி யாது சபையுட்புகுந்து கையற்ற சோகத்தால் மனமிறந்துநின்ற மனோன் மணி தன் கண்முன் சென்று நின்றனன். தன்னுள்ளத் திருந்த தலை வன் இங்ஙனம் பிரத்தியக்ஷப்படலும் அக்கணமே ஆனந்த பரவசப் பட்டு மனோன்மணி, தான் கைக்கொண்ட மணமாலையை அவன் கழுத் தொடு சேர்த்துத் தற்போதமிழந்து அவன் தோள்மேல் வீழ்ந்து மூர்ச் சை யாயினள். இங்ஙனம் அயலான் ஒருவன் சபையுட் புகுந்ததும் மனோன்மணி அவனுக்கு மாலை சூட்டி மூர்ச்சித்ததும் கண்டு ஜீவகனாதி யர் திடுக்கிட்டுச் சூதெனக் கருதிப் பொருதற் கெழுங்கால், சுந்தரமுனி வர் கை யமைத்துச் சமாதானம் பிறப்பிக்கப் புருடோத்தமன், குடிலன் தன்னிடத்தில் வந்து கூறிய துரோகச் சிந்தனையும் தான் அதற்கிசை யாது அவனையே கால் யாப்பிட்டு ஜீவகனிடம் ஒப்புவிக்கக் கொணர்ந்த மையும் கூறிக் குடிலனை விலங்கும் காலுமாகச் சபைமுன்நிறுத்திவிட்டு தனக்குயிர்நிலையாநின்ற மனோன்மணியுடன் தன் பாசறைக்கு மீள யத் தனிக்குமளவில், சுந்தரமுனிவர் ஆஞ்ஞையால் ஜீவகன் மனந்தெளிந்து மகளையும் மருமகனையும் வாழ்த்த அது கண்ட யாவரும் கண்படைத்த பெரும் பயனடைந்து அருட்டிறம் புகழ்ந்து ஆனந்தம் அடைந்தனர்.

14. இதுவே இந்நாடகத்துள் வரும் கதையின் சுருக்கம். இக் கதையை வேண்டுழி வேண்டுழி விரித்து ஆங்கிலேய நாடகரீதியாக ஜீவக னாதியாகிய கதா புருஷர்களுடைய குணாதிசயங்கள் அவர் அவர் வாய் மொழிகளால் வெளிப்படும்படி செய்திருப்பது மன்றி, "வாழ்த்து வணக் கத்துடன்" தொடங்கி, "நாற்பொருள் பயக்கும் நடை" பிணைக்கூடிய அளவும் தழுவி, "தன்னிகரில்லாத் தலைவனையும்" தலைவியையும் உடை த்தாய், "மலைகடல் நாடு வளநகர் பருவம் இருசுடர்த்தோற்றம்" என்றின் னவும் பிறவும் ஏற்புழிப் புனைந்து, "நன்மணம் புணர்தலே" முடிவா கக்கொண்டு "மந்திரம் தூது செலவிகல்வென்றி" எனச் சந்தியில் தொ டர்ந்து, "அங்கம் களம்" என்னும் பாகுபாடுடைத்தாய் நிற்கும் இந் நாடகத்தில் தமிழ்க் காவியவுறுப்புகள் பற்பல ஆங்காங்கு வருவித்திருப்ப தும் அன்பொடு பார்ப்போர் கண்ணுக்குப் புலப்படலாம்.

15. இல்லறம் துறவறம் பத்தி ஞானமுதலிய மோக்ஷசாதனங்கள் பொருத்தமுடைய சந்திகளில் வெளிப்படையாக அமைந்திருப்பதுமல்லாமல் இக்கதையினையே ரூபகமாலாலங்காரமாகக் கருதில், தத்துவசோதனைசெய்யும் முமுக்ஷுக்களுக்கு அனுகூலமாகப் பலிக்கவும் கூடும். அப்படி உருவக மாலையாகக் கொள்ளுங்கால், ஜீவகனைச் சார்போதமான ஜீவாத்மா ஆகவும், அவனைத் தன்வசப்படுத்தி யாட்டுவித்த குடிலனை மாயா சக்தியாகவும், மனோன்மணியை ஜீவாத்மாவின் பரிபக்குவ காலத்துதிக்கும் முத்திக்குரிய உத்தம பாகமான சுத்த தத்துவமாகவும், அவள் தோழிவாணியைப் புத்திதத்துவமாகவும், அவள் காதலனாகிய நடராஜனை ஞானதாதாவான உபாசனா மூர்த்தியாகவும், புருடோத்தமனை அனுக்கிரஹ சக்தியாகவும், சுந்தரமுனிவரைக் கருணாநிதியாகிய ஞானாசாரியாராகவும், ஜீவகனுக்குத் தலைநகராகக் கூறிய முத்திபுரம் என்னும் மதுரையை ஜீவாத்மா உதித்தொடுங்கும் மூலஸ்தானமாகவும், அவனும் குடிலனும் சேர்ந்து கட்டிய நெல்வேலிக் கோட்டையை மாயாகாரியமான அன்னமயாதி பஞ்சகோசத்தாலமைந்த சரீரமாகவும், அதிலிருந்து மனோன்மணிகண்ட கனவைச் சுத்தாந்தக்கரண ஜநிதமான பரோக்ஷ ஞானமாகவும், சேரதேசத்தில் புருடோத்தமன் கண்ட கனவை பரமபசுபதியான ஈசுவரனது அருளின் ஸ்புரணமாகவும், மனோன்மணியும் புருடோத்தமனும் சந்திக்கக்காரணமாக முடிந்த முனிவர் கட்டிய சுருங்கையை பிரத்தியக்ஷானுபூதிக் கேதுவான பாசவிமோசன பந்தாவாகவும், பிறவும் இம்முறையே பாவித்து உய்த்துணர்ந்து கொள்ளவேண்டியது.

16. ஏறக்குறைய வாசக நடைக்குச்சமமான அகவற் பாவால் இந்நாடகம் பெரும்பாலும் ஆக்கப்பட்டிருக்கிறதினால் ஒருவர் மொழியாக வரும் ஒரு வரியில் அகவல் அடியும் முடியாவிடங்களில் அடுத்த வரியில் வரும் சீரோடுசேர்த்து ஆசிரிய அளவடி யாக்கி முடித்துக்கொள்க.

17. பலவேறு தொழில்களிடையிலும் பிணி கவலை யாதிகள் நடுவிலும் ஆங்காங்கு அகப்பட்ட அவகாசங்களிற் செய்யப்பட்டமையால் இந்நாடகத்துள் பலபாகங்கள் என்சிற்றறிவிற்கே திருப்திதருவன அல்ல. ஆயினும் கல்விகேள்விகளிற்சிறந்த கனவான்கள் இக்கூறிய குறைவுகளைப்பாராட்டாது என்னையிம் முயற்சிக்குத் தூண்டிவிட்ட நன்னோக்கத்தையே கருதி இந்நவீன நாடகத்தை அநாதரவு செய்யாது கடைக்கணித்து அருள்புரியப் பலமுறை பிரார்த்திக்கின்றேன்.

["பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி"

குரு சுந்தர சரணாலயம்.

ஓம்.

கடவுள் துணை.

# மனோன்மணீயம்.

---

## பாயிரம்.

---

### கடவுள் வணக்கம்.

நேரிசை வெண்பா.

வேத சிகையும் விரிகலையும் மெய்யன்பர்
போதமும் போய்த்தீண்டாப் பூரணமே—பேதமற
வந்தென்னை நீ கூடுங்கால் வாழ்த்துவர் யார் வாராக்கால்
சிந்தனை யான் செய்முறையென் செப்பு.

---

### தமிழ்த் தெய்வ வணக்கம்.

பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா.

இவை யிரண்டும் ஆறடித்தரவு.

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகுஞ்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலுந் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க விருந்தபெருந் தமிழணங்கே! (க)

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும் ஓர்
எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே. (உ)

இவை பன்னிரண்டும் தாழிசை.

கடல்குடித்த குடமுனியுன் கரைகாணக் குருநாடில்
தொடுகடலை யுனக்குவமை சொல்லுவதும் புகழாமே. (க)

ஒருபிழைக்கா அரனார் முன் னுரையிழந்து விழிப்பாரேல்
அரியதுன திலக்கணமென் றறைவதுமற் புதமாமே. (உ)

சதுமறையா ரியம்வருமுன் சகமுழுது நினதாயின்
முதுமொழி நீ யனாதியென மொழிகுவதும் வியப்பாமே. (ங)

வேகவதிக் கெதிரேற விட்டதொரு சிற்றேடு
காலந்தி நினைக்கரவாக் காரணத்தி னறிகுறியே. (ச)

கடையூழி வருந்தனிமை கழிக்கவென்றோ அம்பலத்துள்
உடையாருன் வாசகத்தி லொருபிரதி கருதினதே. (ரு)

தக்கவழி விரிந்திலகுஞ் சங்கத்தார் சிறுபலகை
மிக்கநலஞ் சிறந்தவுன்றன் மெய்ச்சரித விபஞ்சனமே. (சு)

வடமொழி தென்மொழி யெனவே வந்தவிரு விழியவற்றுள்
கெடுவழக்குத் தொடர்பவரே கிழக்கொடு மேற்குணராரே. (எ)

வீறுடைய கலைமகட்கு விழியிரண்டு மொழியானால்
கூறுவட மொழிவலமாக் கொள்வர் குணதிசையறியார். (அ)

கலைமகள்தன் பூர்வதிசை காணுங்கா லவள்விழியுள்
வலதுவிழி தென்மொழியா மதியாரோ மதியுடையார். (கூ)

பத்துப்பாட் டாதிமனம் பற்றினர் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையு மிலக்கணமில் கற்பனையே. (கய)

வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மநுவாதி யொருகுலத்துக் கொருநீதி. (கக)

மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடையென் றுநேவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ. (கஉ,

எனவாங்கு (தனிச்சொல்)

ஆசிரியச்சுரிதகம்.

நிற்புகழ்ந் தேத்து நின்னெடுந்தகை மைந்தர்
பற்பலர் நின்பெரும் பழம்பணி புதுக்கியும்
பொற்புடை நாற்கவிப் புதுப்பணி குயிற்றியும்
நிற்பவர் நிற்க நீ பெறும் புதல்வரில்
அடியேன் கடையே னறியாச் சிறியேன்
கொடுமலையாளக் குடியிருப் புடையேன்
ஆயினும் நீயே தாயெனுந் தன்மையின்
மேயபே ராசையென் மீக்கொள வோர்வழி
உழைத்தலே தகுதியென் றிழைத்தவிந் நாடகம்
வெள்ளியதெனினும் விளங்குநின் கணைக்காற்கு
ஒள்ளிய சிறுவிர லணியாக்
கொண்மதி யன்பே குறியெனக் குறித்தே.

அவையஞ்சின நெஞ்சோடு கிளத்தல்.

நேரிசை வெண்பா.

அமைய வருளணைத்து மாட்டேமே னெஞ்சே
சுமை நீ பொறுப்பதெவன் சொல்லாய்-நமையுமிந்த
நாடகமே செய்ய நயந்தா லதற்கிசைய
ஆடுவம் வா நாண மவம்.

பாயிரம் முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| வெண்பா | உ-க்கு | அடி | 8 |
| கலிப்பா | க-க்கு | அடி | 49 |
| ஆகப்பாயிரம் | க-க்கு | அடி | 57 |

# மனோன்மணீயத்தில்

வரும்

நாடகபாத்திரங்கள்.

———;0;———

| | |
|---|---|
| ஜீவகவழுதி : | பாண்டி நாட்டரசன். |
| குடிலன் : | ஜீவகனது முதல்மந்திரி. |
| சுந்தரமுனிவர் : | ஜீவகவழுதியின் குலகுரு. |
| நிஷ்டாபரர் : / கருணாகரர் : | சுந்தரமுனிவரின் இரண்டு சீடர்கள். |
| நடராஜன் : | வாணியின் காதலன். |
| நாராயணன் : | ஜீவகனது துணைவன். |
| பலதேவன் : | குடிலன் புத்திரன். |
| சகடன் : | வாணியின் பிதா. |
| முருகன் : | ஜீவகனது படைவீரருள் ஒருவன். |
| புருடோத்தமவர்மன் : | சேரதேசத் தரசன். |
| அருள்வரதன் : | சேரதேசத்துச் சேனாபதி. |
| மனோன்மணி : | ஜீவகனது புத்திரி. |
| வாணி : | மனோன்மணியின் தோழி. |

சேவகர், படைவீரர், ஒற்றர், உழவர், செவிலித்தாய், தோழியர், நகரவாசிகள் முதலியோர்.

| | |
|---|---|
| நாடகநிகழ்ச்சி : | திருநெல்வேலியிலும் திருவனந்தபுரத்திலும். |

கடவுள் துணை

# மனோன்மணீயம்

## முதல் அங்கம்.

### முதற்களம்.

---

இடம்: பாண்டியன் கொலுமண்டபம். காலம்: காலை.

சேவகர்கள் கொலுமண்டபம் அலங்கரித்து நிற்க.

(நேரிசையாசிரியப்பா.)

முதற் சேவகன். புகழ்மிக அமைதரு பொற் சிங்காதனந்
திகழ்தர இவ்விடஞ் சேர்மின். சிறி

௨-ம் சேவ. அடியிணை யருச்சனைக் காகுங் கடி
எவ்விடம் வைத்தனை ?

௩-ம் சேவ. ஈதோ !

௪-ம் சேவ. 5. அவ்விடத் திருப்பதேன் ?

௩-ம் சேவ. ஆரம். பொறு !
விழவறா வீதியில் மழையொலி யென்னக்
கழைகறி களிறுகள் பிளிறு பேரொலியும்,
கொய்யுளைப் புரவியின் குரத்தெழும் ஓதையும்
மொய்திரள் முரசின் முழக்கும் அவித்துச்
10. 'சுந்தர முனிவா ! வந்தனம் வந்தனம்'
எனுமொலியே சிறந் தெழுந்தது. கேண்மின் !

௨-ம் சேவ. முனிவரர் என்றிடிற் கனிவுறுங் கல்லும் !

௪-ம் சேவ. எத்தனை பத்தி ! எத்தனை கூட்டம் !
எள்விழற் கிடமிலை. யான் போய்க் கண்டேன்.

௩-ம் சேவ. 15. உனக்கென் கவலை ? நினைக்குமுன் ஓடலாம்.

முதற் சேவ. அரசனும் ஈதோ அணைந்தனன். காணீர் !
ஒருசா ரொதுங்குமின். ஒருபுறம் ! ஒருபுறம் !

(ஜீவகன் வர.)

யாவரும்: ஜய! ஜய! விஜயீபவ ராஜேந்திரா!!
(தொழுது) (சுந்தரமுனிவர், கருணாகரர், குடிலன் நகர்வாசிகள் முதலியோர் வர.)
ஜய! ஜய! விஜய நவராஜேந்திரா!!

ஜீவகன். 20. வருக! வருக! குருகிரு பாநிதே!
திருவடி தீண்டப் பெற்ற இச் சிறுகுடில்
அருமறைச் சிகரமோ ஆலநன் னீழலோ
குருகுல விஜயன் கொடித்தேர்ப் பீடமோ
யாதென ஓதுவன். திதற ஆதனத்
25. திருந்தருள் இறைவ! என்பவ பாசம்
இரிந்திட நின்பதம் இறைஞ்சுவல் அடியேன்.
(ஜீவகன் பாதபூசைசெய்ய.)

[முனி]வர். வாழ்க! வாழ்க! மன்னவ! வருதுயர்
சூழ்பிணி யாவுந் தொலைந்து வாழ்க!
சுகமே போலும், மனோன்மணி?

சுகம், சுகம்.

[3]0. இங்க ருளாரும் யாவரும் க்ஷேமம்?
உன்னரு ளுடையோர்க் கென்குறை? க்ஷேமம்.
கூடல் மாநகர் குடிவிட் டிப்பால்
பீடுயர் நெல்லையில் வந்தபின் பேணி
அமைத்தனன் இவ்வரண். இமைப்பறு தேவருங்
35. கடக்கரும் இதன் திறங் கடைக்கண் சாத்தி
ஆசீ யருள வேண்டித்தேன் முனி.
எத்தனை புரிதான் இருக்கினும் எமக்கெலாம்,
அத்த! நின் அருள்போல் அரணெது? குடில!
இவ்வழி யெழுந்தநம் இறைவர், கடிபுரி
40. செவ்விதின் நோக்கக் காட்டுக தெரிந்தே.

குடிலன். ஊன்வரு பெருநோய் தான் விட அடைந்த
அன்பரின்புற இவ் அருளுருத் தாங்கி
வந்தருள் கிருபா சுந்தரமூர்த்தி!
நீ யறியாத தொன்றில்லை: ஆயினும்,
45. உன் னடி பரவி யுரைப்பது வேண்டு'மோ.
தென்பாண்டி நாடே சிவலோக பாமென
மூன் னாதவூரர் மொழிந்தனர். அன்றியும்

தரணியே பசுவெனச் சாற்றலும் மற்றதில்
பரதமே மடியெனப் பகர்வதுஞ் சரதமேல்,
50. பால் சொரி சுரை தென் பாண்டி யென்பது
மேல் விளம்பாதே விளங்கும். ஒருகால்
எல்லா மாகிய கண்ணுத லிறைவனும்
பல்லாயிரத்த தேவரும் பிறரும்
நிலைபெற நின்ற பனிவரை துலையின்
55. ஒரு தலையாக, உருவஞ் சிறிய
குறுமுனி தனியா யுறு மலை மற்றோர்
தலையாச் சமமாய் நின்றதேல், மலைகளில்
மலையமோ அலது பொன் வரையோ பெரிது?
சந்து செவிவழித் தந்த கங்கையும்,
60. பின்னொரு வாயசங் கவிழ்த்த பொன்னியும்,
வருந்திய தேவரோ டருந்தவர் வேண்ட,
அமிழ்தினுஞ் சிறந்த தமிழ் மொழி பிறந்த
மலையம் நின்றிழிந்து, விலை யுயர் முத்தும்
வேழ வெண் மருப்பும் வீசிக் காழகிற்
65. சந்தன டவியுஞ் சாடி வந்துயர்
குங்குமம் முறித்துச் சங்கினம் அலறும்
கடம்பணை தவழ்ந்து, மட மயில் நடம் பயில்
வளம் பொழில் கடந்து குளம் பல நிரப்பி,
இருகரை வாரமுந் திருமகள் உறையுளாப்
70. பண்ணும் இப் புண்ணிய தாமிர வர்ணியும்,
எண்ணிடில் ஏயுமென் றிசைக்கவும் படுமோ ?
இந் நதி வலம் வர இருந்த நந் தொன் னகர்
பொன்னகர் தன்னிலும் பொலிவுறல் கண்டனை.
தொடு கடலோ எனத் துணுக்குறும் அடைபலர்
75. கலக்கத் தெல்லையுங் கட்செவிச் சுடிகையும்
புலப்பட அகன் றூழ் புதுவகழுடுத்த
மஞ்சு கண் துஞ்சு நம் இஞ்சி புரிஞ்சி
உதயனும் உடல் சிவந்தனனே! அதன் புறம்
நாட்டிய பதாகையில் கட்டிய மீனம்,
80. உவாமதிக் குறு மாசு அவாவொடு நக்கும்.
வெயில் விரி மெயி லினங் காக்க இயற்றிய

எந்திரப் படைகளுந் தந்திரக் கருவியும்
பொறிகளும் வெறிகொளும் கிறிகளும் எண்ணில.—

சுந்தரமுனிவர். சம்போ! சங்கர! அம்பிகா பதேள!
(எழுந்து) 85. நன்று மன்னவ! உன்றன் தொல் குலங்
காக்க நீ யாக்கிய இவையெலாங் கண்டுளேம்.
அல்லாது உறுதியுளதோ? சொல்லுதி!

ஜீவக. என்னே! என்னே! எமக் கருள் குரவ!
இன்னும் வேண்டிய திபரதோ? துன்னலர்
90. வெருவுவர் கேட்கினும்; பொருநிவை வென்று கைக்
கொள்ளுவ ரென்பதும் உள்ளற் பாற்றோ?
ஆயினும் அரணி னுளபுரை நோக்கி
நீயினி யியம்பிடில் நீக்குவன் தொடிபே.

சுந்தர. காலமென்பது கறங்குபோற் சுழன்று
95. மேலது கீழாக் கீழது மேலா
மாற்றிடுந் தோற்றம் என்பது மறந்தனே.
வினை தெரிந்தாற்றும் வேந்தன் முனமுனம்
ஆயபற்றாற்ற தழிவும் அஃதொழி
வாயினு மா மென வையகம் புகலும்.
100. உன்னையும் உன் குலத் துதித்த நம் மனோன்மணி
தன்னையுஞ் சங்கரன் காக்க! தயாநிதே!
அன்பும் அறமுமே யாக்கையாக் கொண்ட
நின் புதல்வியை யான் காண நேசித்தேன்.
அத்திருவுறையும் அப்புறம் போதற்கு
105. ஒத்த தாமோ இக் காலம்? உணர்த்தாய்.

ஜீவக. ஆம்! ஆம்! சேவக! அறைதி சென்று
தேமொழிக் கன்னிதன் சேடியர் தமக்கு
நங்குல முனிவர் இங்குள ரெனவே.
(அரசனும், முனிவரும், சீடரும் அப்புறம் போக.)

குடில. (தனதுள்) நங் காரியம் ஜயம் எங்காகினுஞ் செல!
(சேவகனை 110. சேவக! முனிவர் சிவிகையுஞ் சின்னமும்
நோக்கி) யாவும் அவ் வாயிலிற் கொணர்தி.

சேவ. சுவாமி.
(குடிலன் முதலோர் போக.)

முதல் நகர் வாசி. கடல் மடை விண்டெனக் குடிலன் கழறிய
நயப்புரை! ஆ! ஆ! வியப்பே மிகவும்!
நாட்டைச் சிறப்பித் துரைத்தது கேட்டியோ?

உ-ம் நக. 115. கேட்டோம், கேட்டோம். நாட்டிற் கென் குறை?
விடு! விடு! புராணம் விளம்பினன் வீணாய்.

ங-ம் நக. குடிலன் செய்யும் படிறுகள் முனிவர்
அறியா தவரோ? சிறிதாயினும் அவன்
உரைத்தது கருத்திடைக் கொண்டிலர் உவர்க்கே.

க-ம் நக. 120. ஆம்! ஆம்! அவன்முகம் எமாறினதே.
விரசமா யரசனும் வியர்த்தனன். கண்டேன்.

உ-ம் நக. முனிவ ரங் கோதிய தென்னை? முற்றும்
துனிபடு நெருக்கிற் கேட்டிலன்.

ங-ம் நக. யாதோ—
மனோன்மணி யெனப் பெயர் வழங்கினர், அறிவை

ச-ம் நக. 125. வாழ்த்தினர் போலும். மற்றென்? [கொல்?

உ-ம் நக. பாழ்த்த இத்
தந்தையிற் பரிவுளர் மனோன்மணி தன்மேல்.

ங-ம் நக. ஐயம் மற் றதற் கென்? யார் பரிவுறார்கள்?
வையகத் தவள்போல் மங்கைய ருளரோ?
அன்பே யுயிரா அழகே யாக்கையா
130. மன்பே ருலகு செய் மாதவ மதனால்
மலைமகள் கருணையுங் கலைமகளுணர்வும்
கமலையி னெழிலும் அமைய வோ ருருவாய்ப்
பாண்டியன் தொல் குல மாகிய பாற்கடல்
மீண்டெழு மதியென ஈண்டவ தரித்த
135. மனோன்மணி யன்னையை வாழ்த்தார் யாரே?

உ-ம் நக. அன்றியு முனிகட் கவள்மேல் வாஞ்சை
இன்று மற்றன்றே. இமையவர்க் காக
முன் னொரு வேள்வி முயன்றுழி வன்னி
தவசிகள் தனித்தனி யவிசு சொரிந்தும்
140. தழையா தவிதல் கண்டுளம் தளர்ந்து
மன்னனுங் குடிலனுந் துன்னிய யாவரும்

வெய்துயிர்த் திருக்க, விளையாட்டாக
மைதிகழ் கண்ணி பேதை மனோன்மணி
நெய் பெய் போழ்தில் நெடுஞ்சுழி சுழித்து
145. மங்கிய அங்கி வலமாய்ப் பொங்கிப்
புங்கவர் மகிழ்ச்சியைப் பொறித்தது முதலா
முனிவர் யாவரும் மணியென மொழியில்
தங்கள் தலைமிசைக் கொள்வர், தரணியில்
எங்குள தவட் கொப் பியம்புதற் கென்றே.

சும் நக. 150. ஒக்கும்! ஒக்கும்! இக்குங் கைக்கும்
என்னும் இன் மொழிக் கன்னிக் கெங்கே
ஒப்புளதுரைக்க! ஓ! ஓ! முனிவர்
அவ்வழி யேகுநர் போலும்.
இவ்வழி வம்மின் காண்குதும் இனிதே.

(நகர்வாசிகள் போக.)

முதல் அங்கம் : முதற்களம்

முற்றிற்று.

# முதல் அங்கம்.

## இரண்டாங்களம்.

---

இடம்: கன்னிமாடம். காலம்: ஏற்பாடு.

மனோன்மணியும் வாணியும்
கழல் விளையாடி இருக்க.

(ஆசிரியத்தாழிசை.)

**மனோன்மணி.** (கழல் விளையாடிப்பாட)
துணையறும் மகளிர்மேற் சுடுகணை தூர்ப்பவன்
அணைகிலன் அரன்முன்னென் றாடாய் கழல்
அணைந்து நீறானானென் றாடாய் கழல். (க)

**வாணி.** (ஷை)
நீறாயினு மென்னை நேர் மலர் பட்டபுண்
ஆறா வடுவேயென் றாடாய் கழல்
அழலாடுந் தேவர்க்கென் றாடாய் கழல். (உ)

**மனோ.**
இருளில் தனித்துறை யேழையர் தங்கள் மேல்
பொருதலோ வீரமென் றாடாய் கழல்
போயெரிந் தான்பண்டென் றாடாய் கழல். (௩)

**வாணி.**
எரிந்தனன் ஆயிலென் என்றென்றுந் தம்முடல்
கரிந்தது பாதியென் றாடாய் கழல்
கடிவுண்ட கண்டார்க்கென் றாடாய் கழல். (ச)

**மனோ.**
தெருவிற் பலிகொண்டு திரிதரும் அம்பலத்
தொருவர்க் குடைந்தானென் றாடாய் கழல்
உருவங் கரந்தானென் றாடாய் கழல். (ரு)

**வாணி.**
உருவங் கரந்தாலென் ஓர்மல ரம்பினால்
அரையுரு வானாரென் றாடாய் கழல்
அந்நடராஜரென் றாடாய் கழல். (சு)

(பெருமூச்செறிய)

(நேரிசை யாசிரியப்பா)

**மனோன்மணி.** (சிரித்து)
ஏதடி வாணி! ஓதிய பாட்டில்
ஒருபொரு ளொளித்தனை பெருமூச் செறிந்து?
நன்று! நன்று! நின் நாணம்.
மன்றலும் ஆனது போலும் வார்குழலே! (க)

வாணி. 5. ஏதம்மா நீ சூது நினைத்தனை ?
ஒருபொருளும் யான் கருதினேன் அல்லேன்.
இச்சகத் தெவரே பாடினும்,
உச்சத் தொனியில் உயிர்ப் பெழ லியல்பே. (உ)

மனோ. மறையேல்! மறையேல்! பிறைபழி நுதலாய்!
10. திங்கள் கண்டு பொங்கிய கடலெனச்
செம்புனல் பரக்கச் செந்தாமரைபோற்
சிவந்தவுன் கபோலம் நுவன்று நின்மனக்
களவெலாம் வெளியாக் கக்கிய பின்னர்
ஏது நீ ஒளிக்குதல்? இயம்பாய்
15. காதலன் றேற்றுனக் கோதிய தெனக்கே. (ஙு)

வாணி. ஐயோ கொடுமை! அம்ம! அதிசயம்!
எருதீன் றெனுமுனம் என்ன கன்றென்று
திரிபவ ரொப்ப நீ செப்பினை!
நான்கண் டே நாள் நாலைந்தாமே. (சு)

மனோ. 20. ஏதடி! நுமது காதல் கழிந்ததோ?
காணு தொருபோ திரேமெனுங் கட்டுரை
வீணாயினதோ? பிழைத்தவர் யாவர்?
காதள வோடிய கண்ணாய்!
ஓதுவாய். என்பா லுனைக்கற் பாற்றே. (ரு)

வாணி. 25. ஏதனை யான் இயம்புகோ? என் தலைவிதியே.
(கண்ணீர்சிந்தி) வா: விளையாடுவோம் வாராய்.
யார்முறை யாடுதல் வார்குழல் திருவே! (சா)

மனோ. எனிது! எனிது! வாணீ! எட்பூ
ஏசிய நாசியாய்! இயம்புக.
30. மனத்திடை யடக்கலை! வழங்குதி வகுத்தே. (எ)

வாணி. எப்படி யுனக்கியான் செப்புவேன் அம்மா?
தலைவிதி தடுக்கற் பாற்றோ? தொலைய
அனுபவித் தன்றோ அகலும்? மனையில்
தந்தையுங் கொடியன்; தாயுங்கொடியள்!
35. சிந்தியார் சிறிதும் யான் படும் இடும்பை.

என்னுயிர்க் குயிராம் என் காதலர்க்கும்
இன்னல் இழைத்தனர். எண்ணிய எண்ணம்
முதலையின் பிடிபோல் முடிக்கத் துணிந்தனர்.
யாரொடு நோவேன்? யார்க்கு எடுத் துரைப்பேன்?
40. வார்கட லுலகில் வாழ்கிலன்.
மாளுவன் திண்ணம். மாளுவன் வறிதே. (அ)

மனோ. முல்லையின் முகையும் முருக்கின் இதழும்
காட்டுங் கைரவ வாயாய்! உனக்கும்
முரண்டேன்? பலதேவனுக்கே மாலை
45. சூடிடிற் கேடென்? காதால்
வள்ளையின் அழகெலாங் கொள்ளைகொள் அணங்கே!

வாணி. அம்மொழி வெம்மொழி. அம்ம! ஒழிதி.
நஞ்சும் அஞ்சிலேன்: நின்சொல் அஞ்சினேன்.
இறக்கினும் இசையேன். தாமே துறக்கினும்
50. மறப்பனோ என்னுளம் மன்னிய வொருவனை?
ஆடவராக மற் றெவரையும்
நாடுமோ நான் உளவளவும் என்னுளமே?

மனோ. வலம்புரிப் புறத் தெழு நலந் திகழ் மதியென
வதியும் வதன மங்காய்! வாணீ!
55. பேய் கொண்டனையோ? பித்தேறினையோ?
நீ யென் நினைத்தனை? நிகரில் குடிலன்
தன்மக னாகிச் சாலவும் வலியனாய்
மன்னனுக் கினியனாய் மன் பலதேவனும்
உன்னுளங் கவர்ந்த வொருவனும் ஒப்போ?
60. பேய் கொண்டனையோ! பேதாய்
வேய்கொள்தோளி விளம்பாய் எனக்கே! (யக)

வாணி. அறியா யொன்றும், அம்ம! அரிவையர்
நிறை யழி காதல் நேருந் தன்மை.
ஒன்றுங் கருதியன்று அவருள்ளம்
65. சென்று பாய்ந்து சேருதல். திரியுங்
காற்றும் பெட்புங் காரணம் இன்மையில்
ஆற்றவும் ஒக்கும் என்றறைவர்.
மாற்றம் என்? நீயே மகி மனோன்மணியே!

மனோ. புதுமை நீ புகன்றது. பூவைமார் காதல்
70. இதுவே யாமெனில் இகழ்தற் பாற்றே!
காதல் கொள்ளுதற்கு ஏதுவு மிலையாம்!
தான் அறியாப் பேயாட்டந்தானும்!
ஆயினும் அமைந்து நீ யாய்ந்துணர்ந் தோதுதி.
உண்டோ இவர் தமில் ஒப்பு?
75. கண்டோ எனு மொழிக் காரிகை யணங்கே! (௰௩)

வாணி. ஒப்பு யான் எப்படிச் செப்புவன்? அம்ம!
என்னுளம் போ யிறந்ததுவே
மன்னிய ஒருவன் வடிவுடன் பண்டே. (௰௪)

மனோ. பித்தே பிதற்றினை. எத் திறமாயினும்
80. தாந்தம் உளத்தைத் தடைசெயில் எங்ஙனம்,
காந்தள் காட்டுங் கையாய்!
தவிர்ந்தது சாடி போடிடும் வகையே? (௰௫)

வாணி. ஈதெலாம் உனக்கு யார் ஓதுதற்கு அறிவர்!
மாதர்க் குரிய இக் காதல்,
85. என்பதொன் றறியும் மன்பதை யுலகே. (௰௬)

மனோ. மின்புரை யிடையாய்! என்கருத் துண்மையில்
வனத்தி லெய்தி வற்கலை புனைந்து
மனத்தை யடக்கி மாதவம் செயற்கே.
சுந்தர முனிவன் சிந்துர அடியும்,
90. வாரிசம் போல மலர்ந்த வதனமும்,
கருணை அலையெறிந் தொழுகுங்கண்ணும்,
பரிவுடன் முகிழ்க்கு முறுவலும், பால் போல்
நரை தரு தலையும், புரை யறும் உரையும்,
சாந்தமுந் தயையுந் தங்கிய வுடலும்,
95. மாந்தளிர் வாட்டு மேனி வாணி!
எண்ணுந் தோறுங் குதித்து
நண்ணும் என்னுளம் மன்னிய தவத்தே. (௰௭)

வாணி. சின்னாள் செலுமுனம் தேர்குவன் நீ சொல்
கட்டுரைத் திண்ணம். மட்டள வின்றிக்
100. காதல் கதுவுங் காலை
ஓதுவை நீயே யுறும் அதன் சுவையே. (௰௮)

மனோ. வேண்டுமேற் காண்டி. அவையெலாம் வீண். வீண்
காதல் என்பது என்? பூதமோ? பேயோ?
வெருட்டினால் நாய்போல் ஓடிடும். வெருவில்
105. துரத்தும் குரைக்கும் தொடரும் வெகுதொலை.
அடிக்கடி முனிவர் இங் கணுகுவர். அஃதோ
அடுத்த அவ் அறையில் யாதோ சக்கரம்
இருத்திடத் திறவுகோல் வாங்கினர்: கண்டனை.
படர்சுழியோடு பாய்திரை காட்டும்
110. வடதள வுதர வாணீ! மங்காய்!
வரும் பொழுது அரும்பொருள் கேட்போம்
வாசிட்டாதி வைராக்கிய நூற்கே. (யகூ)

வாணி. நூறுக் கேட்கினும் நூலறிவு என்செயும்?
நீறுகின்ற தென் நெஞ்சம். நாளை
115. என்னுயிர் தாங்குவ தெவ்விதம்?
மன்னவன் கட்டளை மறுப்ப தெவ் விதமே? (உ0)

மனோ. உன்றன் சிந்தையும் உந்தைதன் கருத்தும்,
மன்றல் வழுதிக் குரைக்க வருவதும்,
ஆலையின் புறச்சார்பு அலவ னொதுங்குவது
120. ஏயும் எழிற் கால் வாணீ!
நீ யுரைத்தனையோ நின் நேசனுக்கே? (உக)

வாணி. அதுவே அம்ம! என்னுளம் நின்றறுப்பது.
வதுவையும் வேண்டிலர். வாழ்க்கையும் வேண்டிலர்.
ஒருமொழி வேண்டினர்; உரைத்திலேன் பாவி!
125. நச்சினேன் எனுமொழிக்கே அவர்க் கிச்சை.
பிச்சி யான், ஓகோ! பேசினேன் இலையே!
இனியென் செய்வேன்? என் நினைப்பாரோ?
மனைவரா வண்ணம் என் அனையும் உரைத்தாள்.
ஊர்வரா வண்ணம் குடிலனும் ஓட்டினன்.
130. யார்பால் உரைப்பன்? யார் போய் உரைப்பர்?
உயிரே எனக்கிங்கு ஒரு துணை.
அயிரா வதத்தனும் அறியா அமுதே! (அழ) (உஉ)

மனோ. அழுங்கலை! அழுங்கலை! அனிச்சமும் நெரிஞ்சிலா
அஞ்சிய அடியாய்! அழுங்கலை! அழுதுகண்

135. அஞ்சனங் கரைந்து நின் கஞ்சனக் கதுப்பும்
கறுத்ததே. ஏனிது? கருணைக் கடவுள் நின்
கருத்ததே முடிப்பக் காண்டி. அஃதோ
மணங் கமழ் கோதையர் வந்தனர்.
அணங்குறல் பொன்னிகர் சுணங்கார் அணங்கே!

(செவிலியும் தோழிப்பெண்களும் வர.)

செவிலி. 140. தாயே! வந்துபார்! நீயே வளர்த்த
முல்லையும் நறுமுகை முகிழ்த்தது. வல்லை
காதலிற் கவிழ்வை போலும்!
போது நீத் தெம்மனை புகுந்த நல் திருவே! (உச)

மனோ. போடி! நீ யாது புகன்றனை? தவத்தை
145. நாடி நானிருக்க நணுகுமோ என்மனந்
துச்சமாம் இச்சையாற் சோர்வு?
நெருப்பையுங் கறையான் அரிக்குமோ நேர்ந்தே!

முதற்றோழி. பொய்யன்று அம்ம! மையுண் கண்ணால்
வந்து நீ நோக்கு சந்தமார் முல்லை
150. நிரம்ப அரும்பி நிற்குந் தன்மை.
இன்றிரா அலரும் எல்லாம்,
துன்றிரா நிகர் குழல் தோகாய்! வருகவே. (உரு)

(எல்லாரும் போக.)

முதல் அங்கம் : இரண்டாங்களம்

முற்றிற்று.

# முதல் அங்கம்.

## மூன்றாங்களம்.

---

இடம்: கொலுமண்டபம். காலம்: காலை.

ஜீவகன், குடிலன், நாராயணன்
சம்பாஷித்திருக்க.

(நிலைமண்டில ஆசிரியப்பா.)

ஜீவக. நடக்கதனால் என்? நன்றேயாம் எனத்
தமக்குச் சரியாம் இடத்தில் தங்குக.
எங்கே யாகினுந் தங்குக. நமக் கென்?
ஆவலோ டமைத்த நம் புரிசையை அவர் மிகக்
5. கேவலம் ஆக்கினர். அதற்குள கேடென்?
குறைவு என்? குடில! கூறாய் குறித்தே.

குடில. குறை யான் ஒன்றுங் கண்டிலன். கொற்றவ!
நறையார் வேப்பந் தாராய்! நமது இடம்
கூடல் அன்றெனுங் குறையொன்று உளது.
10. நாடில் அஃதலால் நானொன் றறியேன்.
மேலுந் தவசிகள் வேடந் தாங்கினோர்
ஆலயம் ஒன்றையே அறிவர். முன்னொரு
கோவில் அமைத்து அதிற் குறைவிலா வுற்சவம்
ஓவ விலாதே யுஞற்றுமின் என்றவர்
15. ஏவினர். அஃதொழித் தியற்றினம் இப்புரி.
ஆதலால் இங்ஙனம் ஓதினர். அதனை
அழுக்கா றென்று நாம் ஐயமற் றறைதல்
ஒழுக்கம் அன்றே, குரு அன்றோ அவர்?

ஜீவக. ஐயரும் அழுக்கா றடைந்தார். மெய்ம்மை.
20. கோவில் தானா காவலர் கடமை?
கேவலம்! கேவலம்! முனிவரும்! ஆ! ஆ!

குடில. அதிசயம் அன்று பூபதியே! இதுவும்.
துறந்தார் முற்றுந் துறந்தவ ரல்லர்.
மறந்தார் சிற்சில. வறிதே தமக்கு
25. மனோகரம் ஆகிய சினகரம் ஒன்றில்

உலகுள பொருளெலாம் உய்ப்பினும் பின்னும்
நிலைபெற நிரம்பாது அவர்க்குள ஆசை.
வசிட்டர் முன்னர் வாளாப் புகைத்தனர்
முசிப்பிலா மன்னர் திரவிய முற்றும்.
30. கௌசிகன் இரக்க வோர் மௌலி வேந்தன்
பட்ட பாடு உலகில் யாவரே பட்டுளர் ?
சிட்ட முனிவர்கள் செயலாற் பலகால்
புரந்தரன் தனதுருக் கரந்து திரிந்தனன்.
முனிவரே யாயினும் மனிதரே மீண்டும்.
35. இச்சை யற்றவர் இச்சகத்து யாவர் ?

ஜீவக. ஒவ்வும்! ஒவ்வும் நீ யுரைத்தது முற்றும்.

நாராயணன். (தனதுள்) ஐயோ! பாவி! அருந்தவ முனிவரைப்
பொய்யன் ஆக்குவன். புரவலனோ எனில்
எடுப்பார் கைப்பிள்ளை. தடுப்பார் யாரே ?

(நேரிசைவெண்பா.)

நாராயணன். (அரசனை நோக்கி.) கொல்லா யெனப்பகைஞர் கோற்றொடியார் கும்பிட்டுப்
பல்லிளிக்கக் கண்சிவக்கும் பார்த்திபனே—பொல்லா
வெறும் எலும்பை நாய்கௌவும் வேளை நீ செல்ல
உறுமுவதென் நீயே யுரை.

(சேவகன்வர.)

(நிலைமண்டில ஆசிரியப்பா தொடர்ச்சி.)

சேவ. 40. மன்னிய கலைதேர் சகடர் வந்தனர்.

ஜீவகன். வரச் சொல் சேவக !

(நாராயணனை நோக்கி) உரைத்த நின் உவமையிற்
சற்றே குற்றம் உள்ளது நாரணா.

குடிலன். (தனதுள்) அரசன் மாறுப் பொருள் கிரகித்தனன்.
(அரசனை நோக்கி) வெற்றுரை வீணாய் விளம்பினன். அதனிற்
45. குற்றங் காணக் குறுகுதல் முற்றும்
மணற் சோற்றிற் கல் தேடுதல் மானும்.

(சகடர் வர)

ஜீவகன். (சகடரை நோக்கி) சுகமோ யாவரும்? முதிய சகடரே!
மகிழ்வுற உம்மை நோக்கி வெகு நாள்
ஆயின தன்றே ?

| | |
|---|---|
| சகடர். | ஆம்! ஆம்! அடியேன். |
| ஜீவக. | 50. யேயின விசேடமென்? விளம்புதிர். என்குறை? |
| சகட. | அறத்தா றகலாது அகலிடங் காத்துப் |
| | பொறுத்த கோட் புரவல! உன் குடை நீழற் |
| | பொருந்தும் எங்கட்கு அரந்தையும் உளதோ? |
| | சுகம் இதுகாறும். அக மகிழ்வுற்று உன் |
| | 55. மந்திரத் தலைவன் குடிலன் மகற்கே |
| | எந்தன் புதல்வி வாணியை வதுவையிற் |
| | கொடுக்க ஓர் ஆசை கொற்றவ! மற்றது |
| | முடிக்க நின் கருணையே முற்றும் வேண்டுவனே. |
| ஜீவக. | சீலஞ் சிந்தை கோலம் அனைத்தாஞ் |
| | 60. சாலவும் பொருந்தும். சகடரே! அதனால் |
| | களித்தோம் மெத்த. ஏ! ஏ! குடில! |
| | ஒளித்த தென் நீ யுரையா தெமக்கே? |
| குடில. | ஆவ தாயின் அறிவியா தொழிவனோ? |
| ஜீவக. | இடையூ றென்கொல்! இடியே றன்ன |
| | 65. படை யடு பலதேவன் தான் வதோ |
| | விரும்பினன்போலும் வேறோர் கரும்பே! |
| குடில. | இல்லை யெம் இறைவ! எங்ஙனம் உரைக்கேன்! |
| | சொல்லிற் பழிப்பாம். சகடரே சொல்லுக. |
| ஜீவக. | என்னை? சகடரே! இடையூ றென்னை? |
| சகட். | 70. பரப்பரையா யுன் தொழும்பு பூண்டொழுகும் |
| | அடியேன் சொல் பழுதாயின தில்லை. |
| | முடிவிலாப் பரிவுடன் வளர்த்த என் மொய்குழல் |
| | ஒருத்தியே யென் சொல் வியர்த்தம் ஆக்குவள். |
| | ஒருதலையாய் இம்மணத்திற்கு உடன்படாள். |
| | 75. விரிதலைப் பேய்போல், வேண்டிய விளம்பியும், |
| | ஓரா ளொன்றும்: உணராள் தன் நயம்: |
| | நேரா ளொரு வழி: பாராள் நெறி முறை: |
| | என்ன யான் செய்கேன்? இதன்மேல் எனக்கும் |
| | இன்னல் தருவ தொன்றில்லை. தாதையர் |
| | 80. மாற்றங் கேளா மக்கள் கூற்றுவர் |

எனுமொழி யெனக்கே அனுபவம் இறைவ!
உரைத்த என் கட்டுரை பிழைத்திடப் பின் உயிர்
தரித்திருந் தென் பயன்? சாவோ சமீபம்.
நரைத்த தென் சிரம்: திரைத்த தென்னுடல்:
85. தள்ளருங் காலம்: பிள்ளையும் வேறிலை.
என் னுரை காத்து நீ யிம்மண முடிக்க
மன்னவ! கிருபையேல் வாழ்தும் இவ் வயின்.
இல்லையேல் முதிய என் இல்லாளுடன் இனி
(கண்ணீர் துளிக்க.)
செல்ல விடை யளி. செல்லுதுங் காசி.

ஜீவக. 90. எனிது சகடரே! என் காரியம் இது!
தேன்மொழி வாணி செவ்விய குணத்தாள்.
காணில் உரைப்பாம். வீண் இவ் அழுகை.

நாராயணன். பாதகன் கிழவன் பணத்திற்காக
(தனதுள்) எதுஞ் செய்வன். இறைவனோ அறியான்.
95. ஓதுவம் குறிப்பாய். உணரில் உணர்க.
(நேரிசைவெண்பா.)

(அரசனை நோக்கி.) மாற்றலர்தம் மங்கையர்க்கு மங்கலநாண் அங்கவிழ
ஏற்றியநாண் விற்பூட்டு மேந்தலே—சோற்றதற்காய்த்
தன்மகவை விற்ற அரிச்சந்திரனும் உன் அவையில்
என் மகிமை யுள்ளான் இனி.

(நிலைமண்டில ஆசிரியப்பா தொடர்ச்சி.)

ஜீவக. தனி மொழி யென்னை?

நாரா. சற்றும் பிசகிலை.
நீட்டல் விகாரமாய் நினையினும் அமையும்.

ஜீவக. காட்டுவ தெல்லாம் விகாரமே. காணாய்
கிழவரின் அழுகை.

நாரா. சில வருடந்தான்.
100. நெடு நாள் நிற்கும் இளையவர் அழுகை.

ஜீவக. விடு. விடு. நின் மொழி யெல்லாம் விகடம்.
(நாராயணன்போக.)

(சகடரை நோக்கி) அறிவிர்கொல் அவ ருளம்?

சகட. சிறிது யான் அறிவன்.
திருநடராஜன் என்றொருவன் இங்கு உள்ளான்.
பொருவரும் புருடன் மற் றவனே யென்று அவள்
105. சொல்வது கேட்டுளர் சிற்சில தோழியர்.

குடில. நல்லது அப்படியே நடக்கிலென்? இவர்க்கும்
(அரசனை நோக்கி) பொல்லா முரண்டேன்?

சகட. போம்! போம்! உமது
(குடிலனை நோக்கி) குழந்தையேல் இங்ஙனங் கூறீர்! முற்றும்,
இழந்திடவோ எனக்கு இத்தனை பாடு?
110. பூவையை வளர்த்துப் பூனைக்கு ஈயவோ?
(அரசனைநோக்கி.) காவலா! அவனைப் போல யான் கண்டிலன்
சுத்தமே பித்தன். சொல்லுக்கு அடங்கான்.
தனியே உரைப்பன். தனியே சிரிப்பன்.
எங்கெனும் ஒரு பூ இலை கனி யகப்படில்
115. அங்கங்கு அதனையே நோக்கி நோக்கித்
தங்கா மகிழ்ச்சியில் தலை தடுமாறுவன்.
பரற் கலும் அவனுக்கு அகப்படாத் திரவியம்:
ஆயிரந் தடவை யாயினும் நோக்குவன்.
பேயனுக்கு அளிக்கவோ பெற்றனம் பெண்ணை?

ஜீவக. 120. ஆமாம்! யாமும் கண்டுளேம் சிலகால்
நின்றால் நின்ற படியே. அன்றி
இருக்கினும் இருப்பன் எண்ணிலாக் காலம்.
சிரிக்கினும் விழிக்கினும் நலமிலை நியதே.
அவன் அன்றோ முன் னஞ்சைக் களத்தில்—

குடில. 125. அவன்தான்! அவன்தான்! அழகன்! ஆனந்தன்.

ஜீவக. அழகிருந்து என்பயன்? தொழிலெலாம் அழிவே.
எங்கு அவன் இப்போது?

குடில. இங்குளன் என்றனர்.
சிதம்பரத் தனுப்பினேன்: சென்றிலன். நின்றான்,
இதந்தரு நின்கட்டளை எப்படியோ?

ஜீவக. 130. மெத்தவும் நன்மை. அப்படியே செய்.

குடில. சித்தம். ஆயினுஞ் செல்கிலன். முனிவர்

பிரியன் ஆதலினாற் பெயர்ந்திலன் போலும்.

ஜீவக. சரிபல. இராச்சிய தந்திரத்து அவர்க் கென்?
(சகடரை நோக்கி) நல்லது சகடரே! சொல்லிய படியே
135. மொழிகுவம் வாணியாக். மொய் குழற் சிறுமி
அழகினில் மயங்கினள். அதற்கென்? நம் மனப்
படி யிது நடத்துவம். விடும் இனித் துயரம்.

சகட. இவ் வுரை யொன்றுமே யென்னுயிர்க்கு உறுதி.
திவ்விய திருவடி வாழுக சிறந்தே!
(சகடர்போக, செவிலிவர.)

ஜீவக. (செவிலியின் முகம் நோக்கி.)
140. என்னை இவள் முகம் இப்படி யிருப்பது?
தோற்றம் நன் றன்றே!

சேவிலி. நேற்றிரா முதலா—

ஜீவக. பிணியோ என் கண்மணிக்கு?

சேவிலி. பிணியா
யாதும் ஒன்று இல்லை: ஏதோ சிறு சுரம்.

ஜீவக. சுரம்! சுரம்! ஓ! ஓ! சொல்லுதி யாவும்
145. அரந்தை யொன்று அறியாள்! ஐயோ! விளைந்தவை
உரைபாய் விரைவில். ஒளிக்கலை யொன்றும்.
வந்தவா றென்னை? நடந்தவா றென்னை?

சேவிலி. அறியேம் யாங்கள், ஐய! அம் மாயம்.
நறவுமிழ் நளினம் பொலிவு இழந்திருப்ப
150. நம் மனை புகுந்த செல்வி, எம்முடன்
மாலையி லீலைச் சோலை யுலாவி
அமுதம் ஊற்றிருக்குங் குமுதவாய் விண்டு
நயவுரை பலவும் குயிலின் மிழற்றி
மலைய மாருதம் வந்துவந்து உந்த
155. நிலவொளி நீந்தி நம் நெடுமுற்றத்துப்
பந்துவந்தாடி. மேல் மந்திரம் அடைந்தே
துணைபுணர் அன்னத் தூவி யணைமிசைக்
கண்படும் எல்லை—கனவோ நினைவோ—
'நண்ப! என்னுயிர் நாத' என்று ஏங்கிப்
160. புண்படுமவள் போற் புலம்புறல் கேட்டுத்
துண்ணென யாம் துயில் அகற்றிப் புக்குழி,

குழலும் சரியும், கழலும் வளையும்;
மாலையும் கரியும், நுலியும் பொரியும்;
விழியும் பிறழும், மொழியும் குழறும்;
165. கட்டழல் எரியும், நெட்டுயிர்ப்பு எறியும்;
நயனநீர் மல்கும், சயனமேல் ஒல்கும்;
இவ்வழி யவ்வயிற் கண்டு கைநெரியா,
தெய்வம் நொந்தேம், செய்கடன் நேர்ந்தேம்;
அயினி நீர் சுழற்றி யணிந்தேம் பூதி;
170. மயிலினை மற்றோர் அமளியிற் சேர்த்துப்
பனிநீர் சொரிந்து நனி நேர் சாந்தம்
பூசினேம்; சாமரை வீசினேம்; அவையெலாம்,
எரிமேல் இட்ட இழுதாய் அவட்கு
வரவர மம்மர் வளர்க்கக் கண்டு
175. நொந்து யாம் இருக்க, வந்தன வாயசம்
'கா கா இவளைக் கா' எனக் கரைந்து;
சேவலுந் திகைத்துத் திசைதிசை கூவின;
கங்குல் விடிந்தும் அங்கு அவள் துயரம்
சற்றும் சாந்தம் உற்றிலது அதனால்
180. அரச! நீ அறிகில் எம் சிரசிரா என்றே
வெருவி யாங்கள் விளைவது உரைக்கும்
நிமித்திகர்க் கூஉய்க் கேட்டோம் நிமித்தம்;
பெண்ணை யந்தார் சூடிட நுந்தம்
பெண்ணை யந்தார் சூட்டெனப் பேசினர்;
185. எண்ணம் மற்று அவர்க்கு யாதோ அறியேம்;
பனம்பூச் சூடியும் முனம்போலவே சுரம்.
ஏதும் அறியாப் பேதை! நேற்றுத்
தவஞ்செய ஆசை யென்றவள் தனக்குக்
காதல்நோய் காண ஒரேதுவும் இல்லை.
190. எம் தாய் இருக்கும் நிலைமை யினி நீ
வந்தே காண்குதி மன்னவ ரேறே!

ஜீவக. ஆ! ஆ! நோ இதுகாறுமொன்று அறிகிலன்.
இதுவென் புதுமை? என்செய்கோ யான்?

குடில. தவஞ்செய ஆசை யென்று தாய் நவின்ற

195. வாக்கு நோக்கின் முனிவர் மந்திரச்
செய்கையோ என்று ஓரையம் ஜனிக்கும்;
நேற்றங்கு அவட்கு அவர் சாற்றிய மாற்றம்
அறியலாந் தகைத்தோ?

ஜீவக. வறிது அவ் ஐயம்.
மொழி யொருசிறிதும் மொழிந்திலர். கண்டுழி
200. அழுதனர். அழுதாள் உடன் நம் அமுதும்.
ஆசி பேசி யங்கு அகலுங் காலை
ஏதோ யந்திரம் எழுதி வைத்திட வோர்
அறையுடன் அங்கணந் திறவுகோலோடு
தமக்கென வேண்டினர். அளித்தனம் உடனே.
205. நமக்கு அதிலென்? நாம் அறியாததோ?
என்னோ அறியேன் இந் நோய் விளைவு?

(ஜீவகனும் செவிலியும் போக.)

குடில. (தனதுள்) யந்திரத் தாபனமோ அவர் எண்ணினர்?
அவ்வளவு அறிவிலாரோ முனிவர்?
அவ்வளவே தான். அன்றி யென்! ஆயினும்,
210. எத்தனை பித்தன் இவ் அரசன்! பேதையின்
இத்திறங் காமம் என்பதிங்கு அறியான்.
உரைக்குமுன் கருதுவம் நமக்குறு நலமே.

(குடிலன்போக.)

முதல் அங்கம் : மூன்றும் களம்
முற்றிற்று.

# முதல் அங்கம்.

## நான்காங்களம்.

---

இடம் : கன்னிமாடம். காலம் : மாலை.

மனோன்மணி சயனித்திருக்க ;
ஜீவகன் வாணி செவிலி சுற்றி நிற்க.

(நேரிசை யாசிரியப்பா.)

ஜீவக.

உன் அன்பு இதுவோ ? என்னுயி ரமிர்தே !
உனக்குறு துயரம் எனக்கு உரையாததென் ?
விரும்பிய தென் என்றுரைக்கில் விசும்பில்
அரும்பிய அம்புலியாயினுங் கொணர்வன்.
5. வருத்துவதென் எனவழங்கின் மாய்ப்பன்
உறுத்துங் கூற்றுவனாயினும் ஒறுத்தே.
தாய்க்கும் ஒளித்த சூலோ ? தையால் !
வாய்க்கும் ஒளித்த உணவோ ? மங்காய் !
ஏதாயினும் எனக்கு ஓதா துளதோ ?
10. பளிங்கும் பழித்த நெஞ்சாய் ! உனக்கும்
களங்கம் வந்த காரணம் ஏதுவோ ?
பஞ்ச வனக்கிளி செஞ்சொல் மிழற்றி
இசையது விரித் தோர் பிசித மரமேல்
இருந்து பாடும் எல்லை, ஓர் வானவன்,
15. திருந்திய இன்னிசை அமுதிற் செப்பிப்
போயது கண்டு, சேயதோர் போங்கையில்
தனியே பறந்துபோய்த் தங்கி, அங்கு அவன்
பாடிய இசையே கூவிட வுன்னி
நாடி நாடிப் பாடியும் வராது,
20. வாடி வாயது மூடி, மௌனமாய்
வருந்தி யிருந்ததாய்க் கண்ட கனவும்
நேற்றன்றோ எனக்கு இயம்பினை ! நெஞ்சில்
தோற்றிய தெல்லாம் இங்ஙனஞ் சொல்லும்
பேதாய் ! இன்றெனக்கு என்னோ
25. ஓதாய் உன்றன் உளமுறு துயரே ?

சேவிலி. உன் பிதா உலகாள் வேந்தன் அன்பாய்ச்
சொல்லா யென்னில் துப்பிதழ் துடித்துச்
சொல்ல வுன்னியுஞ் சொல்லாது அடக்கில்
யாம் படுதுயரம் அறிந்தும்,
30. காம்படு தோளீ! கருதாய் போன்மே. (உ)

ஜீவக. ஐயோ! இதற்கு என் செய்வேன்! ஆ! ஆ!
பொய்யோ பண்ணிய புண்ணியம் அனைத்தும்!
பிள்ளையில்லாச் செல்வம் கள்ளியிற்
சோறே போலப் பேரே யன்றி
35. வேறே யென்பயன் விளைக்கும் என்றுனி
நெடுநாள் நைந்து நொந்து, கெடுவேன்!
பட்ட பாடெல்லாங் கெட்டுப் பரிதி
வந்துழி யகலும் பனி யெனச் சுந்தர
முனிவன் முயன்ற வேள்வியாற் பிள்ளைக்
40. கனியென உனை யான் கண்ட நாள்தொட்டு,
நின் முகம் நோக்கியும் நின் சொற் கேட்டும்
என் மிகை நீக்கி யின்பம் எய்தி,
உன் மன மகிழ்ச்சிக்கு உதவுவ உளுற்ற
உயிர் தரித்திருந்தேன். செயிர்தீர் அறமும்
45. வாய்மையும் மாறாநேசமுந் தூய்மையுந்
தங்கிய வுன்னுளம் என்னுளந் தன்னுடன்
எங்கும் கலந்த இயல்பால் அன்றோ
மறந்தேன் உன் தாய் இறந்த பிரிவும்!
உன்னை யன்றி யென்னுயிர்க்கு உலகில்,
50. எதுவோ உறுதி யியம்பாய்?
மதி குலம் விளங்க வரு மனோன்மணியே! (௩)

மனோன்மணி. (கண்ணீர் ததும்பி) எந்தையே! எனது அன்பினுக்கு ஓர் இழுக்கு
வந்த தன்று. மேல் வருவது மில்லை. இலை.
உரைக்கற் பாற்ற தொன் றில்லை.
55. உரைப்பது எப்படி யான் உறாத தொழியிலே? (௪)

ஜீவக. குழந்தாய்! என்குலக் கொழுந்தே! அழாய் நீ.
அழுவையேல் ஆற்றேன். நீ யழ லிதுவரைக்
கண்டது மில்லை. யான் கேட்டது மில்லையே.

பெண்களின் பேதைமை யென்னே! தங்களைப்
60. பெற்றார் உற்றார்களுக்கும் தமக்கும்,
விழுமம் விளைத்துத் தாமே அழுவர்.
(வாணியை நோக்கி) என்னே அவர்தம் ஏழைமை! மின்னேய்
மருங்குல் வாணி! வாரா யிப்புறம்.
அருங்கலை யாய்ந்த நின்தந்தைசொல் மதியும்
65. உன் புத்தியும் உகுத்து உழல்வதென் வம்பில்?
நலமே சிறந்த குலமே பிறந்த
பலதேவனும் ஒரு பாக்கிய சிலாக்கியன்
தன்னை நீ விடுத்துப் பின்னையோர் பித்தனை
நச்சிய தென்னை! சிச்சி!
70. நகையே யாகும் நீ செயும் வகையே. (ரு)

வாணி. அகலிடந் தனி புரந்தாளும் வேந்தே
நிகழும் என் சிறிய நினைவெலாம் விரித்து
விநயமாய் நின்பால் விளம்ப எனது
நாணம் நாவெழாது அடக்கு மாயினும்
75. பேணி யொரு மொழி பேசுவன்.
நேசமில் வதுவை நாச காரணமே. (சு)

ஜீவக. புதுமை நீ புகன்றாய்! வதுவை மங்கையர்க்குப்
பெற்றார் ஆற்றுவர். ஆற்றிய வழியே
தையலார் மையலாய் நேயம் பூண்டு
80. வாழ்வது கடமை. அதனில்
தாழ்வது தகுதியோ தருமமோ? சாற்றே. (எ)

வாணி. கற்பனைக்கு எதிராய் அற்பமும் மொழியேன்.
ஆயினும் ஐயமொன் றுண்டு. நேயமும்
ஆக்கப்படும் பொருள் ஆமோ? நோக்கில்
85. துன்பே நிறையும் மன்பே ருலகாம்
எரியுங் கானல் விரியும் பாலையில்
திரியு மனிதர் நெஞ்சஞ் சிறிது
தங்கி அங்கு அவர் அங்கங் குளிரத்
தாருவாய்த் தழைத்தும், ஓயாத் தொழிலில்
90. நேருந் தாகம் நீக்குவான் நிமல
ஊற்றா யிருந்து அவ ருள்ளம் ஆற்றியும்,

ஆறலைக் கள்வர் அறு பகை மீறில்
உறு துணையாய் அவர் நெறி முறை காத்தும்,
முயற்சியாம் வழியில் அயர்ச்சி நேரிடில்
95. ஊன்று கோலாய் அவருக்கம் உயர்த்தியும்,
இவ்விதம் யாரையுஞ் செவ்விதிற் படுத்தி,
இகத்துள சுகத்திற்கு அளவு கோலாகி,
பரத்துள சுகத்தை வரித்த சித்திரமாய்,
இல்லறம் என்பதன் நல்லுயிரே யாய்,
100. நின்ற காதலின் நிலைமை, நினையில்,
இரும்பும் காந்தமும் பொருந்துந் தன்மைபோல்,
இருவர் சிந்தையும் இயல்பா யுருகி
ஒன்றாந் தன்மை யன்றி, ஒருவரால்
ஆக்கப் படும் பொருள் ஆமோ?
105. வீக்கிய கழற் கால் வேந்தர் வேந்தே. (அ)

ஜீவக. ஆமோ அன்றோ யாம் அஃது அறியேம்.
பிஞ்சிற் பழுத்த பேச் சொழி. மிஞ்சலே.
மங்கையர் என்றுஞ் சுதந்தர பங்கர்.
பேதையர். எளிதிற் பிறழ்ந்திடும் உளத்தர்.
110. முதிய வுன் தந்தை மதியில் உன் மதியோ
பெரிது? மற் றவர்தமில் உன் நயம் பேண
உரியவர் யாவர்? ஓதிய படியே
பலதேவனுக்கே யுடன்படல் கடமை.

வாணி. இலை யெனில்?—

ஜீவக. கன்னியாய் இருப்பாய் என்றும்.

வாணி. 115. சம்மதம்.

ஜீவக. கிணற்றில் ஓர் மதிகொடு சாடில்
எம்மதி கொண்டு நீ யெழுவாய்? பேதாய்!
கன்னியா யிருக்கில் உன் அழகு என்னும்?
அரைக்கில் அன்றோ சந்தனங் கமழும்?

வாணி. விரை தருமோ சிறுகறையான் அரிக்கில்?

ஜீவக. 120. நானே பிடித்த முயற்கு மூன்று கால்
ஆனல் எங்ஙனம்?

வாணி. அரிவையர் பிழைப்பர்?

(சேடிவர)

சேடி. சுந்தர முனிவர் வந்தனர் வாயிலில்.
காலம் நோக்கினர்.

ஜீவக. சாலவும் இனிதே;
ஆசனங் கொணர்தி.

(வாணியைநோக்கி) போர்சனை வேண்டாம்;

125. எப்படியாயினுஞ் சகடர் சொற்படி
நடத்துவம் மன்றல். நன்கு நீ யுணர்தி.
ஆயினும் தந்தனம் ஐந்து நாள்.
ஆய்ந்து அறிவிப்பாய் வாய்ந்த உன் கருத்தே. (௯)

வாணி. இறக்கினும் இறைவ! அதற்கு யான் இசையேன்.
130. பொறுத்தருள் யான் இவண் புகன்ற
மறுத்துரை யனைத்தும் மாற்றலர் ஏறே. (௰)

(சுந்தரமுனிவர் வர)

ஜீவகன். வணங்குதும் உன்றன் மணங்கமழ் சேவடி.
(முனிவரைத் தொழுது.) இருந் தருளுதி யெம் இறைவ!
பரிந்து நீ வந்தது எம் பாக்கியப் பயனே. (௰௧)

சுந்தரமுனிவர். தீதிலை யாதும்? க்ஷேமமே போலும்.
(மனோன்மணியை நோக்கி.) ஏதோ மனோன்மணி! ஓதாய்
வேறுபாடாய் நீ விளங்கு மாறே. (௰௨)

மனோன்மணி. கருணையே யுருவாய் வரு முனீசுரரே!
(வணங்கி) எல்லாம் அறியும் உம்பால்
140. சொல்ல வல்லதொன் றில்லை. சுகமே. (௰௩)

சேவிலி. கரும்பே! யாங்கள் விரும்புங் கனியே!
(மனோன்மணியை நோக்கி) முனிவர் பாலும் நீ யொளிப்பையேல் இனி யிங்கு
யார் வயின் உரைப்பாய்! ஐயோ! இது வென்?
(முனியைநோக்கி.) ஆர்வமும் ஞானமும் அணிகலனுக் கொள்
145. தேசிக வடிவே! செப்புமா றறிகிலம்
மாசறு மனோன்மணி தன்னுரு மாறி
நேற்றிரா முதலாத் தோற்றுந் தோற்றம்.
மண்ணாள் மேனியும்; உண்ணாள் அமுதும்;
நண்ணாள் ஊசலும்; எண்ணாள் பந்தும்;
150. முடியாள் குழலும்; படியாள் இசையும்;
தடவாள் யாழும்; நடவாள் பொழிலும்;

அணியாள் பணியும் ; பணியாள் எவனும் ;
மறந்தாள் கிளியும் ; துறந்தாள் அனமும் ;
தூங்குவள் போன்றே யேங்குவள் ; எளிமை !
155. நோக்குவள் போன்றே நோக்குவள் வெளியை ;
மீகேட்டுங் கேட்கிலள் ; பார்த்தும் பார்க்கிலள் ;
மீட்டுங் கேட்பள் ; மீட்டும் பார்ப்பள் ;
தனியே யிருப்பள் ; தனியே சிரிப்பள் ;
விழி நீர் பொழிவள் ; மெய்விதிர்த்து அழுவள் ;
160. இங்ஙனம் இருக்கில் எங்ஙனம் ஆமோ ?
வாணியும் யானும் வருந்திக் கேட்டும்
பேணி யிதுவரை யொருமொழி பேசிலள்.
அரசன் கேட்டும் உரைத்திலள். அன்பாய்
முனிவ ! நீ வினவியும் மொழியாளாயின்
165. எவருடன் இனிமேல் இசைப்பள் ?
தவ வுருவாய் வரு தனி முதற் சுடரே ! (௰௪)

சுந்தரமுனிவர். (ஜீவகனை நோக்கி) குழவிப் பருவம் நழுவுங் காலை
களி மிகு கன்னியர் உளமும் வாக்கும்
புளியம் பழமுந் தோடும் போலாம்.
170. காதல் வெள்ளம் கதித்துப் பரந்து
மாத ருள்ளம் வாக்கெனும் நீண்ட
இரு கரை புரண்டு பெரு மூச்சு எறியில்,
எண்ணம் எங்ஙனம் நண்ணும் நாவினை ?
தாதா அன்பு போதா தாகுங்
175. காலம் கன்னியர்க்கு உளதெனும் பெற்றி
சாலவும் மறந்தனை போலும். தழைத்துப்
படர் கொடி பருவம் அணையில், நட்ட
இடமது துறந்து நல் லின்பம் எய்த
அருகுள தருவை அவாவும். அடையின்
180. முருகவிழ் முகையுஞ் சுவை தரு கனியும்
அகமகிழ்ந்து அளித்து மிக வளர்ந்து ஓங்கும்.
இலையெனில் நலமிழந்து ஒல்கும். அதனால்
நிசித வேல் அரசாடவியில்
உசிதமாம் ஒருதரு விரைந்து நீ புணரே. (௰௫)

ஜீவக. 185. எங்குல குருவே! இயம்பியது ஒவ்வும்.
எங்குளது இக்கொடிக்கு இசைந்த
பொங்கு எழில் பொலியும் புரையறு தருவே? (யசு)

சுந்தர. உலகுள மற்றை யரசெலாம் நலமில்
கள்ளியுங் கருவேற் காடுமாய் ஒழிய,
190. ஜகமெலாந் தங்க நிழலது பரப்பித்
தொலேவிலாத் துன்னலர் வரினும் அவர்நலே
இலேயெனும் வீரமே இலேயாய்த் தழைத்து,
புகழ் மணங் கமழுங் குணம் பல பூத்து,
துனி வரும் உயிர்க்குள துன்பந் துடைப்பான்
195. கனியுங் கருணையே கனியாய்க் காய்த்து,
கருமாடி என்னும் ஒரு நாமங் கொள்,
திரு வாழ் கோடாந் சேர தேசத்துப்
புருடோத்தமன் எனும் பொருவிலாப் புருடன்
நீங்கில் இல்லே நினது
200. பூங்கொடி படரப் பாங்காந் தருவே. (யஎ)

ஜீவக. நல்லது! தேவரீர் சொல்லியபடியே,
இடுக்கண் களைந்த இறைவ!
நடத்துவன் யோசனை பண்ணி நன்றே. (யஅ)

சுந்தர. யோசனை வேண்டிய தன்று. நடேசன்
205. என்றுளன் ஒருவன். ஏவில்,
சென்று அவன் முடிப்பன் மன்றல் சிறக்கவே. (யகூ)

ஜீவக. கெடலறு சூழ்ச்சிக் குடிலனேடு உசாவி—

சுந்தர. (எழுந்து) அரஹர! குருபர! கிருபாநிதியே!
காவாய் காவலன் ஈன்ற
210. பாவையை நீயே. காவாய் பசுபதே! (உய)

(சுந்தரமுனிவர் போக.)

ஜீவக. தொழுதோம்; தொழுதோம். செவிலி அவ்அறைக்கு
எழுதுங் கருவிகள் கொணராய்.
பழுதிலாக் குடிலற்கு உணர்த்துவம் பரிந்தே. (உக)

(ஜீவகன் முதலியோர் போக)

முதல் அங்கம் : நான்காம் களம் முற்றிற்று.

# முதல் அங்கம்.

## ஐந்தாங்களம்.

---

இடம் : குடிலன் மனை.   காலம் : மாலை.

குடிலன் உலாவ.

(இணைக்குறளாசிரியப்பா.)

**குடிலன்.**
(தனிமொழி)

புத்தியே சகல சத்தியும்! இது வரை
நினைத்தவை யனைத்தும் நிறைவே றினவே.
உட்பகை மூட்டிப் பெட்பு உற்றிருந்த
மதுரையாம் முதுநகர் விடுத்து மன்னனைப்
5. புதியதோர் பதிக்குக் கொணர்ந்து புரிசையும்
கட்டுவித் தோம் நம் இட்டமாம் வகையே.
நாமே யரசும், நாமே யாவும்.
மன்னவன் நமது நிழலில் மறைந்தான்.
பிடித்தாற் கற்றை விட்டாற் கூளம்.
10. மதுரையை நெல்லை யினிமேல் வணங்குமோ?
இது நனக் கிறைவன் இறக்கில் யாரே
அரசர் ஆகுவர் ?—

(மௌனம்.)

புரவலன் கிளைஞர் புரிசையைக் கேட்கினும்
வெருளுவர். வெல்லார். ஆயினும்—
15. முழுதும் நம்மையே தொழும் வகை இலையோ?
கருவியுங் காலமும் அறியில் அரியதென் ?
ஆ! ஆ! அயர்த்தோம் அயர்த்தோம்!
மயக்கம் மனோன்மணி கொண்டதை முற்றும்
அயர்த்தோம்! ஆ! ஆ! ஆயிழை யொருவனைக்
20. கண்டு காமங் கொண்டவள் அல்லள்.
பருவம் வருதலாற் பற்றல் விழைந்தனள்.
அருகுளது எட்டியே யாயினும் முல்லைப்
படர்கொடி படரும். பலதேவனை யவள்
இடமே பன்முறை யேகில் உடன்படல்
25. கூடும். கூடில் என் கூடா?

யாவன் அஃதோ வரு மொரு சேவகன்?

(சேவகன் வர.)

சேவ. ஜய! ஜய! விஜயீபவ! குடிலேந்திரா!

(திருமுகம் கொடுக்க.)

குடிலன். நல்லது அப்புறம் நில்லாய். ஓ! ஓ!

(வாசித்து நோக்கி.) சொல்லியது ஆர் கொல்? சுந்தரனே யாம்.

(சேவகன் ஒருசார் இருந்து தூங்க.)

30. அடுத்தது போலும் இம்மணம். அவசியம்
நடக்கும். நடக்கின் என்? நமக்கது நன்றே.
அரசர்கட்கு ஆயுள் அற்பம் என்றறைவர்.
பிரியமாந் தன்மகட் பிரிந்து வெகுநாள்
வாழான் வழுதி. வஞ்சி நாட்டார்க்குத்
35. தாழார் இந் நாட்டுள்ள ஜனங்களும்.
அதுவும் நன்றே.—ஆயினும்
கால தாமசஞ் சாலவும் ஆகும்.
வேறொரு தந்திரம் வேண்டும். ஆ! ஆ!
மாறன் மாண்டான்; மன்றலும் போனது.
40. சேரன் இறுமாப் புடையதோர் வீரன்
ஆமெனப் பலரும் அறைவர். அதனால்
நாம் அவன்பால் விடுந் தூதுவர் நலம் போல்
மெள்ள அவன்றன் செருக்கினைக் கிள்ளிற்
படைகொடு வருவன். திண்ணம். பாண்டியன்
45. அடைவது அப்போது யாம் அறிவம்.
போர் வந்திடில் இவண் நேர் வந்திடும் எலாம்.
யார் இறவார்கள்? யார் அறிவார்கள்?
முடி தன் அடிவிழில் யாரெடுத்து அணியார்?
அரச வமிசக் கிரமம் ஓரில்
50. இப்படியே முதலுற்பவம் இருக்கும்.
சில தலைமுறையாப் பல வருடஞ் செலில்
இந்துவில் இரவியில் வந்தோர் எனவே,
மூட வுலகம் மொழியும். யாரே
நாடுவர் ஆதியை. நன்று நன்றிது!
55. தோடம்!—சுடு! சுடு!
தீது நன்றென ஓதுவ எல்லாம்

அறியார்க்கு அறையும் வெறு மொழி யலவோ?
பாச்சி பாச்சி யென்றழும் பாலர்க்குப்
பூச்சி பூச்சி யென்பது போலாம்.

60. மன்னரை யுலகம் வணங்கவும் பார்ப்பார்க்கு
அன்னங் கிடைக்கவும் அங்ஙனம் அறைந்து
மதியிலாரை மயக்குவர் வஞ்சமாய்.
அதினால் நமக் கென்? அப்படி நினைக்கில்
இதுவரை யித்தனை நன்மை யெப்படி வரும்?

65. பார்க்குதும் ஒருகை. சுந்தரன் யந்திரம்
காக்கும் வகையுங் காண்போம்; சுவான
சக்கரங் குக்கனைத் தடுத்திடும் வகையே
யந்திரத் தந்திரம் இருப்பதென்று அறியான்.
பித்தன் மெத்தவும். நமக்கு இனி யிதுவே

70. உத்தம வுபாயம். ஓ கோ! சேவக!
சித்தம் மெத்தக் களித்தோம் இந்த
மணவுரை கேட்டென மன்னன் துணிபப்
பாவனை பண்ணுவோம். ஏ! ஏ! சேவக!

(சேவகன் எழுந்து வர.)

இன்று நாம் உற்ற இவ் இன்பம் போல

75. என்றும் பெற்றிலம். இணை யறு மாலை
இந்தா! தந்தோம். இயம்பாய்,
வந்தோம் விடியுமுன் மன்னவைக் கென்றே. (க)

(நேரிசை யாசிரியப்பா.)

சேவ. வாழ்க! வள்ளால்! நின் உதாரம் போல்
ஏழுல கெவற்றிலும் உண்டோ?

80. வாழ்க! எப்போதும் மங்கலம் வரவே. (உ)

குடிலன். நல்லது! விரைந்து செல்லாய்! நொடியில்.

(சேவகன் போக.)

(தனிமொழி) மதியிலி! என்னே மனிதர் மடமை!
இதுவும் உதாரமாய் எண்ணினன். இங்ஙனம்
தருமம் தானம் என்று உலகறியுங்

85. கருமம் அனைத்துஞ் செய்பவன் கருத்தைக்
காணில் நாணமாம். அரரவர் தமக்கர்

எண்ணிய எண்ணம் எய்துவான் பலவும்
பண்ணுவர் புண்ணியம்போல. எல்லாந்
தந் நயங் கருதி யன்றித் தமைப் போற்
90. பின்னொருவனை யெனிப் பேணுவர் உளரோ
புண்ணியஞ் சீவ காருண்ணியம் எனப் பல
பிதற்றுதல் முற்றும் பித்தே. அலதேல்
யாத்திரை போன நூற்றுவர், சோறடு
பாத்திரந் தன்னிற் பங்கு பங்காக
95 ஒருவரை யொருவர் ஒளித்துப் பருமணல்
இட்ட கதையாய் இருக்குமோ? அவ்வளவு
எட்டுமோ உலகின் கட்டைச் சிறுமதி? —
ஆயினும், அரசனைப் போல் இலை
பேயர் பெரிய மேதினி யெங்குமே. (௩)

முதல் அங்கம் : ஐந்தாம் களம் முற்றிற்று.

---

கலித்துறை.

சீரும் வதுவையுஞ் சேர்முறை செப்பியுஞ் சீவகன்தான்
போரும் நிதனமும் புந்திசெய் மந்திரம் போற்றினனே
சாருந் தனு கரணங்களைத் தாமெனுந் தன்மைவந்தால்
யாரும் அருள்வழி நிற்கிலர் மாயை யடைவிதுவே.

## முதல் அங்கம் முற்றிற்று.

---

| | | | |
|---|---|---|---|
| ஆசிரியப்பா | 52-க்கு | அடி | 830 |
| ஆசிரியத்தாழிசை | 6-க்கு | ,, | 18 |
| வெண்பா | 2-க்கு | ,, | 8 |
| கலித்துறை | 1-க்கு | ,, | 4 |

ஆக அங்கம்-1-க்கு: பா-61-க்கு அடி 860

# இரண்டாம் அங்கம்.

## முதற் களம்.

---

இடம் : அரண்மனை. காலம் : வைகறை.

ஜீவகனும் குடிலனும் மந்திராலோசனை.

(நேரிசை ஆசிரியப்பா.)

ஜீவகன். சொல்லிய தெல்லாஞ் சுந்தரமுனிவரே !
புருடோத்தமன் எனும் பொறையனை நமக்கு
மருமானாக மதித்ததும் அவரே.
என்றுங் குழந்தை யன்றே. மன்றல்
5. விரைவில் ஆற்ற வேண்டும். நாம் இது
வரையும் மறதியா யிருந்தது தவறே
ஆம். இனித் தாமச மின்றி இம்மணமே
கருமமாய்க் கருதி முடிப்பாம்.
வருமுன் கருது மந்திர அமைச்சே ! (க)

குடிலன். 10. இறைவ ! இது கேட்டு எனக்குள இன்பம்
அறைவது எப்படி யான் ? அனேக நாளாப்
பலமுறை நினைந்ததுண்டு இப்பரிசே.
நலமுறப் புரிசை நன்கு முடியும்
அற்றம் நோக்கி யிருந்தேன் அன்றிச்
15. சற்றும் மறந்தேன் அன்று. தனியே
கட்டளை பிறந்துங் கடிமணந் தன்னை
விட்டுளதோ இனி வேறொரு காரியம் ?
புருடோத்தமன் எனும் பொருநைத் துறைவன்
காண்டகும் ஆண்டகை யென்றும், ஞானம்
20. மாண்ட சிந்தையன் என்றும், யாண்டும்
திரியுந் தவசிகள் உரைசெய யானும்
கேட்ட துண்டு. மற் றவன் நாட்டிற்கு
இன்றே தூதுவர் ஏவின், மங்கையை
மன்றல் செய்வான் மனதோ அன்றோ
25. என்று யாம் அறியலாம் எளிதில். அறியார்

பலவும் பழிப்பர். நமக் கதில் ஒன்றும்
இலை. இன்றே தூது ஏவுவம்
பனந்தார் வேய்ந்தோன் அனந்தைப் பதிக்கே. (உ)

ஜீவக. பழிப்பர் என்ற மொழிப்பயன் என்னை ?
30. பகருதி வெளிப்படப் பண்பாய்.
நிகரிலாச் சூழ்ச்சி நெடுந் தகையோனே ! (ங)

குடில. எண்ணுதற் கில்லை இறைவ ! அவையெலாம்.
கண்ணகல் ஞாலங் கழறும் பல விதம்.
மணஞ்செய முதல் முதற் பேசி வருதல்
35. இணங்கிய ஆடவர் இல்லுள் ளாரே.
அன்றி ஆடவர்த் தேடி மன்றல்
சாற்றுதல் தகாதெனப் போற்றும் இவ் வுலகம்.
முன்னை வழக்கும் அன்னதே. ஆயினும்,
ஆத்திரந்தனக்குச் சாத்திரம் என்னை ?

ஜீவக. 40. கூடாது அஃதொருகாலும், குடில !
கேடாம் நமது கீர்த்திக்கு என்றும்.
மாசறு மனோன்மணி தனக்கும் மாசாம்.
என்னே ஆத்திரம் ? நமது
கன்னியை விழையும் மன்னருங் குறைவோ ? (ச)

குடில. 45. குறைவோ அதற்கும் இறைவ ! ஓஹோ !
மூவருந் தேவரும் யாவரும் விரும்பு நம்
கொழுந்தை விழைந்து வந்த வேந்தரைக்
கணக்கிடலாமோ ? கலிங்கன், சோழன்,
கன்னடன் வடிவில் ஒவ்வார்; காந்தர்
50. மன்னவன் வயதிற்கு இசையான்; மச்சன்
குலத்திற் பொருந்தான்; கோசலன் பலத்திற்கு
இணங்கான்; விதர்ப்பன் வீரம் இல்லான்;
குணங்களில் நிடதன், மராடன், கல்வியில்
நேரார்; மகதன் தீராத் தரித்திரன்;
55. இன்னம் பலரும் இங்ஙனம் நமது
கன்னியை விழைந்துங் கல்வி வடிவு
குணம் பலம் குலம் பொருள் என்றிவை பலவும்
இணங்கார் ஏமாந்திருந்தார். அரசருள்

கொங்கன் தனக்கே யிங்கிவை யாவும்
60. பொருத்தம் ஆயினும் இதுவரைப் பாலியன்
ஆகையில் இவ்வயின் அணைந்திலன். எங்ஙனம்
திருத்தமாய் அவன் கருத்து அறிந்திடு முனம்
ஏவுதுந் தூதரை? ஏதிலன் அன்றே.

ஜீவக. படுமோ அஃதொருகாலும்? குடில!
65. மற் றவன் கருத்தினை யுணர
உற்ற தோர் உபாயம் என்னுளது உரையே. (ரு)

குடில. உண்டு பலவும் உபாயம். பண்டே
இதனைக் கருதியே யிருந்தேன். புதிய
கடிபுரி முடியும் முன்னர்க் கழறல்
70. தகுதி அன்றெனக் கருதிச்
சாற்று தொழிந்தேன் மாற்றலர் ஏறே! (சு)

ஜீவக. நல்லது! குடில! இல்லை யுனைப்போல்
எங்குஞ் சூழ்ச்சித் துணைவர்.
பங்கமில் உபாயம் என்கொல்? பகரே. (எ)

குடில. 75. வஞ்சி நாடதனில் நன் செய் நாடெனச்
செந்தமிழ் வழங்குந் தேயமொன்று உளது. அதன்
அந்தமில் பெருவளம் அறியார் யாரே?
மருதமும் நெய்தலும் மயங்கி அங்கெங்கும்
புரையறு செல்வம் நிலைபெற வளரும்.
80. மழலை வண்டானம் புலர் மீன் கவர,
ஓம்புபு நுளைச்சியர் எறிகுழை, தேன் பொழி
புன்னை நுண் தாதாற் பொன் நிறம் பெற்ற
எருமையின் புறத்திருந்து இருஞ் சிறை புலர்த்தும்
அலைகடற் காக்கைக்கு அலக்கண் விளைக்கும்.
85. கேதகை மலர்நிழல் இனமெனக் கருதித்
தாராத் தழுவிடச் சார்தரச் சிரித்த
ஆம்பல்வாய் கொட்டிடும் கோங்கு அலர்த் தாதே;
வால்வளை சூல் உளைந்து ஈன்றவெண் முத்தம்
ஓதிமக் குடம்பையென்று உன்னுபு காலாற்
90. பருந்தினம் கவர்ந்துசென்று அடம்பிடைப் புதைக்
கரும்பு அடி சாலையின் பெரும்புகை மண்டக் [கும்;

கூம்பிய நெய்தற் பூந்தளிர் குளிர
மேய்ந்து அகல் காரா தீம்பால் துளிக்கும்;
அலமுகம் தாக்குழி அலமரும் ஆமை
95. நுளைச்சியர் கணவரோடு இழைத்திடும் ஊடலில்
வழித்து எறி குங்குமச் சேற்றிடை யொளிக்கும்;
பூஞ்சினை மருதிடை வாழ்ந்திடும் அன்றில்
நளிமீன் கோட்பறை விளிகேட்டு உறங்கா;
வேயென வளர்ந்த சாய்குலைச் சாலியில்,
100. உப்பார் பஃறி பொரு நிரை பிணிப்பர்.
இப்பெருந் தேயத்து எங்கும் இராப் பகல்
தப்பினும் மாரி தன்கடன் தவறு.
கொண்மூ என்னுங் கொள்கலங் கொண்ட
அமிழ்தினை அவ்வயிற் கவிழ்த்தபின் செல்புழி
105. வடியும் நீரே நம் மிடிதீர் சாரல்.
நன்னீர்ப் பெருக்கும் முந்நீர் நீத்தமும்
எப்பாது என்றும் எதிர்த்திடும் பிணக்கில்
நடுக்கடல் நன்னீர் சுவைத்திடும் ஒருகால்;
மரக்கலம் வந்திடும் வயற்கரை யொருகால்;
110. வாய்த்தலை விம்மிய மதகுபாய் வெள்ளம்
ஓமென ஓவிறந்து ஒலிக்கப் பிரணவ
நாதமே தொனிக்கும் அந் நாட்டிடை யொருசார்;
நறுமலர்க் குவளையும் நானிறத் திரணமும்
படர்தரும் பழனக் கம்பளம் பரப்பித்
115. தாமரைத் தூமுகை தூமமில் விளக்கா,
நிலவொளி முத்தும் கவடியும் பணமா,
அலவன் பல விரலால் ஆய்ந்து எண்ண,
துகிர்க்கால் அன்னமும் புகர்க்காற் கொக்கும்
செங்கட் போத்தும் கம்புட் கோழியும்
120. கனைகுரல் நாரையும் சினமிகு காடையும்
பொய்யாப்புள்ளும் உள்ளான் குருகும்
என்று இவை பலவும் எண்ணில குழீஇச்
சிரஞ் சிறிது அசைத்துஞ் சிறகையடித்தும்,
அந்தி அங்காடியின் சந்தங் காட்டித்
125. தந்தங் குழூஉக்குரல் தமைவிரித்து எழுப்பும்

பேரொலி யொன்றுமே ஆர்தரும் ஒருசார்;
வீறுடை யெருத்தினம் வரிவரி நிறுத்தி
ஈறிலாச் சகரர் எண்ணிலர் ஆமெனப்
பொன்னேர் பூட்டி நின்றவர் தம்மைப்
130. போற்றிய குரவையே பொலிதரும் ஒருசார்;
சேற்றிடை யடர்ந்த நாற்று அடைத்து எடுக்குநர்
நாறு கூறுக்குநர் வேறுபுலம் படுக்குநர்
நடுபவர் களைப்பகை அடுபவர் ஆதியாக்
கள்ளுண் கடைசியர் பள்ளும் பாட்டும்
135. தரும் ஒலி பரந்தே தங்குவது ஒருசார்;
குன்றென அரிந்து குவித்திடுஞ் செந்நெற்
போர்மிசைக் காரா காரெனப் பொலியக்
கறங்குங் கிணைப்பறை முழவுடன் பிறங்கு
மங்கல ஒலியே மல்குவது ஒருசார்;
140. தூவியால் தம்முடல் நீவிடிற் சிரிக்குஞ்
சிறுமியர் என்ன அச் செழுநில நங்கை
உழுபடைக் கொழுமுனை தொடுமுனங் கூசி
உடல்குழைந்து எங்கும் உலப்பறு செல்வப்
பயிர்மயிர் சிலிர்த்துப் பல்வளம் நகுவள்,
145. எனில் இனி யான் இங்கு இயம்புவது என்னை?
அனைய அந் நாடெலாம் அரச! மற்று உனக்கே
உரித்து என அங்குள பாடையே உரைக்கும்.
சின்னாளாகச் சேரன் ஆண்டிடினும்
இந்நாள் வரையும் அந் நாட்டு உரிமை
150. கொடுத்ததும் இல்லை. நாம் விடுத்ததும் இல்லை.
பண்டை நம் உரிமை பாராட்டிட என்றே
கண்டனன் இப் புரி. ஆயினும் அது இம்
மணத்திற்கு உதவியாய் வந்தது நன்றே.
ஆதலில் அவன்பால் தூதரை விடுத்துக்
155. கிழமையும் பழமையும் எடுத்துக் கிளத்தில்,
நாட்டிய நமது நகர் வலி கருதி
பீட்டும் விடுப்பினும் விடுப்பன். அன்றி
வாதமே பலவும் ஓதினும் ஒருவிதம்
ஒப்புரவாகாது ஒழியான். பின்னர்,

160. அங்கியோங்கிய சமாதானச் சின்னம்
ஆக ஓர் விவாகம் ஆபின் நன்றெனக்
குறிப்பாற் பொதுவாய்க் கூறிடின்,
மறுத்திடான் உடன் மணமுடிக்குதும் நன்றே. (அ)

ஜீவக. மெத்தவும் களித்தோம்! உத்தமோபாயம்
165. இதுவே! குடில! இதனால்
வதுவையும் நடந்ததா மதித்தேம் மனத்தே. (கூ)

குடில. அப்படியன்றே! செப்பிய உபாயம்
போதுமாயினும் ஏகுந் தூதுவர்
திறத்தாற் சித்தியாக வேண்டியதே.
170. வினைதெரிந்து உரைத்தல் பெரிதல. அஃது
தனை நன்கு ஆற்றலே ஆற்றல். அதனால்,
அன்பும் குடிமைப் பிறப்பும் அரசவாம்
பண்பும் அறிவும் பரவு நூலுணர்வும்
தூய்மையும் மன்னவை யஞ்சாத் திண்மையும்
175. வாய்மையும் சொல்லில் வழுவா வன்மையும்
துணிவும் காலமும் களமுந் துணியுங்
குணமும், மந்திரத் தலைவர் துணைமையும்
உடையனே வினையாள் தூதன் என்று ஓதினர்.
அன்ன தூதரை யனுப்பின் மன்னவ!
180. உன்னது எண்ணம் உறுமே யுறுதி.
அன்றெனில் அன்றே. அதனால்
வென்றி வை வேலாய் விடுவாய் தெரிந்தே. (ய)

ஜீவக. அத்திறம் முற்றும் ஒத்தவனுப் நமக்கு
உரிமை பூண்ட நின் அருமை மகன் பல-
185. தேவனே யுள்ளான். மேவலர் பலர்பால்
முன்னம் பன் முறை தூதிலும் முயன்றுளான்.
அன்னவன் தன்னை யமைச்ச!
ஏவிடத் தயையா இசைவாய் நீயே. (யக)

குடில. ஐயம் அதற் கென்? ஐய! என்னுடல்
190. ஆவியும் பொருளும் மேவிய சுற்றமும்
நினதே யன்றே! உனது ஏவலுக்கு யான்
இசையாது ஒழிவனோ! வசையறு புதல்வன்

பாவியன் மிகவும். காரியம் பெரிது.

ஜீவக. பெரி தென்? அங்கு அவன் பேசவேண்டியவெலாம்
195. விரிவா யெடுத்து நீ விளம்பி விடுக்கில்,
நலமா உரைப்பன் நம் பலதேவன்.
வருத்த மிவை யெலாம் கருத்தில் உணராது
உரைத்தனர் முனிவர். உதியன் அவைக்கே
யோசனையின்றி நடேசனை யேவில்
200. நன்றாய் முடிப்பன் இம் மன்றல்
என்றார். அவர்கருத்து இருந்த வாறே! (௰உ)

குடில. குற்றமோ அதுவுங் கொற்றவ! முனிவர்
அறிந்தது அவ்வளவே யாகும். ஏழை!
துறந்தார் அறிவரோ தூதின் தன்மை.
205. இகழ்ச்சியும் புகழ்ச்சியும் இன்பமுந் துன்பமும்
எல்லா மில்லை; ஆதலால் எவரும்
கட்டுக கோயில், வெட்டுக ஏரி,
என்று திரிதரும் இவர்களோ நமது
நன்றும் தீதும் நாடி யுரைப்பர்.
210. இராச்சிய பரண சூத்திரம் யார்க்கும்
நீச்சே யன்றி நிலையோ? நடேசன்!
யோசனை நன்று! நடேசன்! ஆ! ஆ!
ஏதோ இவ் வயின் சூதாப் பேதையர்
உள்ளம் மெள்ள உண்டு மற்று அவர்
215. அம்மை யப்பரை யணுகாது அகன்று
தம்மையும் மறந்தே தலை தடுமாறச்
செய்யும் ஓர் சேவகம் உண்டு மற் றவன்பால்.
ஐய மொன்றில்லை. அதனால் மொய்குழல்
மாதர் பால் தூது செல் வல்லமை கூடும்.
220. பித்தன் எப்படிச் சுந்தரர்க்கு
ஒத்த தோழனு யுற்றனன்! வியப்பே! (௰௩)

ஜீவக. முனிவரும் வர வர மதி யிழந்தனரே.
இருக்கும். இருக்கும். இணை யறு குடில!
பொருக் கெனப் போய் உன் புதல்வற்கு உணர்த்தி
225. விடுத்திடு தூது விரைந்து.

காலவிளம்பனஞ் சாலவுந் தீதே. (௰௪)

குடில. ஏதோ அனுப்பினேன். இன்று இம்மாலையில்
தூது செல்வான் தொழுது உன் அநுமதி
பெற வருவான் நீ காண்டி.
230. இறைவ! மங்கலம் என்றும் உன் னடிக்கே! (௰௫)

(குடிலன்போக)

ஜீவக. (தனதுள்) நல்லது! ஆ! ஆ! நமது பாக்கியம்
அல்லவோ இவனை நாம் அமைச்சனுப் பெற்றதும்?
என்னே! இவன்மதி முன் நிற்பவை யெவை?

(சில பிரபுக்களும் நாராயணனும் வந்து வணங்க.)

(பிரபுக்களை நோக்கி) வம்மின். வம்மின். வந்து சிறிது
235. காலம் ஆனது போலும். நமது
மந்திரி யுடன் சில சிந்தனை செய்து இங்கு
இருந்தோம் இதுவரை. குடிலன் மிகவும்
அருந் திறற் சூழ்ச்சியன்.

முதற் பிரபு. அதற்கென் ஐயம்?
சுரகுரு பிரசுரன் முதலவர் சூழ்ச்சி
240. இரவலா யிவன் சிறிது ஈந்தாற் பெறுவர்.
எல்லை யுளதோ இவன் மதிக்கு இறைவ!
வல்லவன் யாதினும்.

நாராயணன். (தனதுள்) நல்லது கருதான்.
வல்லமை யென் பயன்!

உ-ம் பிரபு. மன்னவ! அதிலும்
உன் தொல் குலத்தில் உன் திருமேனியில்
245. வைத்த பரிவும் பத்தியும் எத்தனை!
குடிலன் உன் குடிக்கே அடிமை பூண்ட
ஆஞ்சனேயனே அறியேம்!

நாரா. (தனதுள்). முழுப் பொய்.
வாஞ்சையாய் மன்னன் இவ்வாயுறை முகமன்
விடுப்பனோ விடமென? குடிப்பனே!

சேவகன். கொற்றவ!

250. நேற்று மாலையில் நின் திரு வாணையிற்
சென்றுழித் திருமுகம் நோக்கி ஏதோ
சிந்தனை செய்து தன் சித்த மகிழ்ச்சியால்
தந்தனன் எனக்கு இத் தரள மாலை.

நாரா. (தனதுள்) எதுவோ பொல்லாங்கு எண்ணினன். திண்ணம்.

ஜீவக. 255. பார்மின். பார்மின். நம்மிசை வைத்த
ஆர்வமும் அன்பும். ஆ! ஆ!

நாரா. (தனதுள்) யாதும்
பேசாது இருக்கில் ஏசுமே நம் மனம்.
குறியாற் கூறுவம். அறிகில் அறிக.

(நாராயணன் செல்ல).

ரு-ம் பிரபு. சாட்சியுமோ கண் காட்சியாம் இதற்கும்!
260. அங்கைப் புண்ணுக்கு ஆடியும் வேண்டுமோ?
எங்கும் இல்லையே இவன்போற் சுவாமி
பத்தி பண்ணுநர். சுமித்திரை பயந்த
புத்திரன் வீரவாகு இவர்முதற் போற்றிய
எத்திறத்தவரும் இறைவ! இவனுக்கு
265. இணையோ தன்னயம் எண்ணப் பெருமையில்?

(நாராயணன் மூக்கில் கரி தேய்த்து வர.)

ஜீவக. (நாராயணனை நோக்கி) ஏ! ஏ! நாரண கரியாய் உன் மூக்கு
இருந்தவாறு என்னே? ஏ! ஏ! இது என்!

நாரா. மூக்கிற் கரியர் உளர் என நாயனார்
தூக்கிய குறளின் சொற்படி, எல்லாம்
270. உள்ள நின் அருகு அவர் இல்லா ராவரோ?

ஜீவக. ஓகோ! ஓகோ! உனக்கென் பைத்தியம்!

யாவரும். ஓகோ! ஓகோ! ஓகோ! ஓகோ! (யாவரும் நகைக்க)

ஜீவக. (பிரபுக்களைநோக்கி) நாரண! நீயும் நடேசன் தோழனே.
நல்லது; விசேட மொன்றில்லை போலும்.

முதற்பிரபு. 275. இல்லையெம் இறைவ! எல்லாப் புவியும் நின்
வாகுவே தாங்க! மங்கலம் வரவே!

(பிரபுக்கள்போக)

ஜீவக. நாராயணா ! உனக்கு ஏன் இப் பித்து ?
தீரா இடும்பையே தெளிவில் ஐயுறல்.

நாரா. எனை வகை தேறியக்கண்ணும், வினைவகை
280. கோடிய மாந்தர் கோடியின் மேலாம்.

ஜீவக. எதற்கும் திருக்குறள் இடந் தரும் ! விடு விடு.
விரும்பி யெவருந் தின்னும்
கரும்பு கைப்பது உன் வாய்க் குற்றம்மே. (யசு)
(அரசனும் சேவகர்களும் போக.)

நாரா. ஐயோ ! இதற்கு என்செய்வன் ! அரசன்,
(தனிமொழி) 285. உறுதியா நம்பினன். சிறிதும் பிறழான்.
வெளுத்த எல்லாம் பாலெனும் மெய்மை
உளத்தான். களங்கம் ஓரான். குடிலனோ
சூதே உருவாய்த் தோற்றினன். அவன் தான்
ஓதுவ வுன்னுவ செய்குவ யாவும்
290. தன் னயங்கருதி யன்றி மன்னனைச்
சற்றும் எண்ணான். முற்றுஞ் சாலமர்
நல்லவன் போலவே நடிப்பான், பொல்லா
வஞ்சகன். மன்னன் அருகுளோர் அதனை
நெஞ்சிலும் நினையார். நினையினும் உரையார்.
295. இறைவன் குறிப்பிற்கு இசைய அறைவர்
வடித்து வடித்து மாற்றொலி போன்றே.
தடுத்து மெய்மை சாற்றுவர் யாரே ?
என்னே அரசர் தன்மை ! மன்னுயிர்க்கு
ஆக்கமும் அழிவும் அவர்தம் கடைக்கண்
300. நோக்கில் உண்டாம் வல்லமை நோற்றுப்
பெற்றார் ; பெற்ற அப் பெருமையின் பாரம்,
உற்று நோக்குவரேல் உடல் நடுங்காரோ ?
கிருப்போ தேனோ என்று அவர் களிப்பது
நெருப் பாறும் மயிர்ப் பாலமும் அன்றோ ?
305. விழிப்பா இருக்கிற் பிழைப்பர். விழியிமை
கொட்டில் கோடி பிறழுமே. கொட்டும்
வாலால் தேளும் வாயால் பாம்புங்
காலும் விடமெனக் கருதி யாவும்

அடி முதல் முடிவரை ஆய்ந்து ஆராய்ந்து
310. பாரார் ஆளும் பார் என் படாவே ?
யாரை யான் நோவ ! அதிலுங் கொடுமை !
அரசர்க்கு அமைச்சர் அவயவம் அலரோ ?
உறுப்புகள் தாமே யுயிரினை யுண்ண
ஒருப்படில் விலக்குவ ருளரோ ? தன் னயம்
315. மறந்து மன்னுயிர்ச் சுகமே மதித்து அங்கு
இறந்த சிந்தையனே இவனே அமைச்சன் ?
குடிலன் செய்யும் படிறுகள் வெளியாப்
பொய்யும் மெய்யும் புலப்பட வுரைக்க
என்றால், நோக்க நின்றார் நிலையில்
320. தோன்றுஞ் சித்திர வொளிபோல் யார்க்குஞ்
சான்றொடு காட்டுந் தன்மைய அலவே.
சித்திரப் பார்வை யழுந்தார்க்கு எத்தனை
காட்டினுங் கீறிய வரையலாற் காணார்.
என் செய ? இனி யான் எப்படிச் செப்புவன்.
325. நிந்தையா நடேசனைப் பேசிய குறிப்பும்
சிந்தனை செய்ததாய்ச் செப்பிய செய்தியும்
ஓரில் யாதோ பெரிய உறுகண்
நேரிடும் என்று என் நெஞ்சம் பதறும்.
என்னை யொருவன் வல்லமை !
330. இன்னும் பிழைப்பன் மன்னன் விழிக்கிலே. (யஎ)

(நாராயணன் போக)

இரண்டாம் அங்கம் : முதற் களம்

முற்றிற்று.

# இரண்டாம் அங்கம்.

## இரண்டாங்களம்.

---

இடம்: ஊர்ப்புறத்து ஒருசார். காலம்: வைகறை.

நடராஜன் அருணோதயங்கண்டு நிற்க.

(இணைக்குறளாசிரியப்பா)

நடராஜன்.
(தனிமொழி)

பரிதியின் உதயம் பார்க்கக் கருதில்
இவ்விடஞ் சாலவும் இனிதே. உதயஞ்
செவ்விதிற் கண்டு பின் செல்வோம்.
ஓவியத் தொழில் வலோன் நீவியக் கிழியில்
5. தீட்டுவான் புகுந்த சித்திரம், நீட்டும்
தூரியந் தொடத் தொடத் துலங்குதல் போல,
சூரியன் பன்னிறக் கதிர்கள் தொடத் தொட
உருவு தோன்றா வணம் ஒன்றாய்ச் செறிந்து
கருகு இருள் மயங்கிய காட்சி கழிந்து
10. சிறிது சிறிதா உறுப்புகள் தெளியத்
தோன்றும் இத் தோற்றம் நன்றே!
சூட்டுடைச் சேவல் சுனைக்கொடி படர்ந்த அவ்
வீட்டு உச்சியின்மேல் வீம்பாய் நடந்து பின்
இரு சிறை யடித்து நெடுவாய் அங்காந்து
15. ஒரு முறை கூவி யுழையுளார் புகழ
உற்று நோக்குவர்போற் சுற்றும் நோக்குதலும்,
இருட் பகை யிரவி இருள் எனத் தம்மையும்
கருதிக் காய்வனோ என் றயிர்த்து இரு சிறைக்
கையால் மார்பிற் புடைத்துக் கலங்கி
20. மெய்பாந் தம் பெயர் விளம்பி வாயசம்
பதறி யெத் திசையிலுஞ் சிதறி யோடுதலும்,
பன்னிறச் சிறகர்ப் பறவைத் தொழுதி
தம்மினந் தழுவிச் சூழ்ந்து வட்டமாய்
அங்கங்கு இருந்து தங்கள் முறை முறை
25. அஞ் சிறை யொத்தறுத்து அடியா, எஞ்சலில்
இசை யறி மாக்களின் ஈட்டம் போல

வசை யறு பாடல் வழங்கலும் இனிதே !
அது வென் ! ஆஹா ! அலகால் அடிக்கடி
தனையுந் தஞ் சிறை தடவி விளக்கிக்
30. கதுவுங் காதல் ஆணையிட்டு அறைந்து
பின்பு சென்று ஓயாது அன்பு பாராட்டும்
இவ் விரு குருகும் காதலர்.
கண்டும் அவர் நிலை காணார்போல் துகிர்த்
துண்டங் கொண்டு பரலைச் சொரிந்த
35. பழமெனப் பாவனை பண்ணிக் கொத்தி
உழை யுழை யொதுங்கி யோடிப் போலிக்
கூச்சங் காட்டும் இக் குருகு காதலியே.
ஆடவர் காதல் அறைதலுந் தையலர்
கூடமாய்க் கொள்ளலும் இயல்பே போலும்.
40. வாணீ ! மங்காய் ! வாழி நின் குணம்!
ஒரு தினம் இவ் வயின் உனை யான் கண்டுழி
முருகவிழ் குவளை நின் மொய் குழற் சூட்டத்
தந்ததை அன்பாய் மந்தகாசத் தொடு
வாங்கியும், மதியாதவள் போல் ஆங்கே
45. ஓடும் அவ் வாய்க்கால் நீரிடை விடுத்துச்
சிறுமியர் குறும்பு காட்டிச் சிரித்தனை.
ஏது யான் எண்ணுவனோ என வுடன் நீ
கலங்கிய கலக்கம் என் கண்ணுளது இன்றும்.
அழுங்கலை வாணீ ! அறிவேன் ! அறிவேன் !
50. உளத்தோடு உளஞ்சென்று ஒன்றிடிற் பின்னர்
வியர்த்தமே செய்கையும் மொழியும்.—
(உற்றுச்செவி கொடுத்து) "வாணி" என்ற பேர் கேட்டனன் ! யார் அது ?
காணில் நன்றாம். காரிகை யார் கொல்?

(பலதேவனும், ஒரு
நற்றாயும், தோழனும் தொலையில் வர.)

சொல்வதென்? சூழ்ச்சியென்? கேட்குதும் மறைந்து.

(ஆசிரியத்துறை)

நற்றாய். நாணமும் என் மகள் நன்னலமும் உகுத்து உன்னைநம்பி
வீணில் விழைந்த இக் கேடு அவள் தன்னுடன் வீவுறுமே.

பேணிய என்குடிப் பேர் பெரிது ஆதலினால்
வாணியின் வம்புரை யாம் இனி அஞ்சுதும் வாரலையோ. (1)

(ஆசிரியப்பாவின் தொடர்ச்சி)

நட. (தனதுள்) 55. ஐயோ ! இது என் ! கட்டம் ! கட்டம் !

(ஆசிரியத்துறை)

நற்றாய். நாணிக் கவிழ்த்தவள் தன்தலை தொட்டு நவின்று உன்றன்
ஆணைக்கு அவள் சிரம் அற்று இனிவீழினும் அஞ்சிலம்
காணப் பிறர் பொருள் கள்ளலம் ஆதலினால் [யாம்.
வாணிக்கு உரித்தெனக் கேட்டபின் வெளவலம்வாரலையோ.

(ஆசிரியப்பாவின் தொடர்ச்சி.

நட. (தனதுள்) நாராயணன் அன்று உரைத்தது மெய்யே !

(ஆசிரியத்துறை)

நற்றாய். நாணமிலா மகள் சாவுக்கு இனி வெகு நாள்களில்லை
காணிய நீயும் விரும்பலை யோலையிற் கண்டுகொள்வை.
பேணிய நின்வாழ்வே பெரிது ஆதலினால்
வாணியொளித்து நீ வாசித்து அறிந்துகொள் வாரலையோ.(3)

(ஆசிரியப்பாவின் தொடர்ச்சி)

நட. (தனதுள்) ஆயினும் இத்தனை பாதகனோ இவன் !

புலதேவன். எவர் உனக்கு உரைத்தார் இத்தனை பழங் கதை ?
சவம் அவள் எனக்கு ஏன் ? இவள் சுகம் எங்கே ?
60. பொய் பொய் நம்பலை. ஐயமெலாம் விடு.
பணத்திற்காக் கிழப் பிணந் துடிக்கின்றது.
சேரன் பதிக்கு ஓர் செய்தி சொல்லுதற்காச்
சென்று இதோ இரண்டு நாளையில் திரும்புவன்.
இச் சிறு பொற் றொடி மைச்சினிக்குக் கொடு.
65. வருகுவன் ஈதோ ! மறக்கன்மின் என்னை !

(நற்றாய் போக. பலதேவனும் தோழனும் நடக்க.)

தோழன். செவ்விது ! செவ்விது ! இவ்விடம் எத்தனை ?
ஐந்தோ ? ஆறோ ?

பலதே. அறியேன். போ ! போ !
இச்சுகமே சுகம், மெய்ச் சுகம் விளம்பில்.

தோழன். வாணியை மணந்தபின் பூணுவை விலங்கு.

பலதே. 70. வாணி யாயின் என் ? மனோன்மணி யாயின் என்?
அதை விடப்படித்த அலகை யாயினும் என்?
கணிசத்திற்கு அது. காரியத்திற்கு இது.
வா வா போவோம். வழிபார்த்திருக்குஞ்
சேவக ராதியர் செய்குவர் ஐயம்.
75. எத்தனை பொழுதிங் கானது வீடு விட்டு?
ஏகுவம் விரைவில். இனித் தாமதம் இலை.

(பலதேவனும் தோழனும்போக.)

நட. கொடுமை! கொடுமை! இக்கொடும் பாதகன் சொல்
கடுவெனப் பரந்து என் கை கால் நடுக்கின.
கைத்தது என் கண்ணும் காதும்.
80. இத்தனை துட்டரும் இருப்பரோ உலகில்?
ஐந்தோ! ஆரோ! அறியான்! பாதகன்!
நொந்தது புண்ணு யென்னுளம் கேட்க!
மெய்ச்சுகம் இதுவாம். விளம்புவது என் இனி!
இச் சண்டாளனும் வாணியும்! ஏற்கும்!
85. ஒரு பிடியாய் அவ னுயிரினை வாங்க
ஓடியது எண்ணம். உறுத்தினது என் கை!
தீண்டவும் வேண்டுமோ தீயனை.
என் இவன் அனந்தைக்கு ஏகுங் காரியம்?
யாருடன் வினவ? நாரணனோ அது?

(நாராயணன் வர.)

90. வா வா நாரணா!

நாரா. ஏ! ஏ! என்னை!
சினந்தனை தனியாய்?

நட. என் இத் தீயவன்
அனந்தைக்கு ஏகுங் காரணம்?

நாரா. யார்? யார்?

நட. அறிவை! நீ விளையாடலை. அறைதி.

நாரா. வதுவை மனோன்மணி தனக்கு வழங்கிட—

நட. 95. அதுவும் நன்றே! கெடுவன் இவ் அரசன்!

நாரா. அடுத்தது வாணியின் மணமும். அறைந்துளேன்.

நட. விடுத்திடு அவ் எண்ணம். தடுக்க யான் அறிவன்.
விடுத்தனன் கண்டும். எரித்திடுவேன் நொடி.
உறுதி யொன்று உளதேல்! உரையாய் நடந்தவை.

நாரா. 100. முதியவர் உசிதனுக்கு உரைக்க மற் றவன்
வதுவை அவ்வழியே ஆற்றிட வாணியை
அதட்டினன்.

நட. அதற்கவள்?

நாரா. மறுத்தனள்.

நட. எங்ஙனம்?

நாரா. 'இறக்கினும் அதற்கு யான் இசையேன்' என்றாள்.

நட. அரைக்கண முன்னம் அறிந்திலேன் இம்மொழி.

நாரா. 105. என்னே யுன் மதி! ஏந்திழையார் சொல்
நீர்மேல் எழுத்தாம். யார் அறிவார் உளம்?
மாறி நாள்தொறும் வேறுபாடு உறுமதி
யெண்ணுட்பட்டு நிண்ணயங் கூடலால்
பெண்கள் நிலையிற் பெரிதுந் திடனே.
110. புண்கொள் நெஞ்சொடு புலம்புகின்றாய் மிக.
காதலாம் ஊழிக் கனல் முன் வைபாய்
மாதரார் கட்டுரை மாயாது என் செயும்?
அக்கணம் உற்ற துக்கந் தூண்டக்
கன்னியா யிருப்பன் என்றாள் அன்றி
115. அன்னது அவள் கருத்து ஆமோ?

நட. அறியாய்!
புருடரே புலையர். நிலையிலாப் பதடிகள்.
இருளடை நெஞ்சினர். ஈரமில் உளத்தர்.
ஆணையும் அவர்க்கு ஒரு வீணுரை. அறிந்தேன்.
தந்நயம் அன்றிப் பின் ஒன்று அறியாக்
120. காதகர், கடையர், கல்வியில் கசடர்.

நாரா. ஓதி யுணரினும் மாதர் உள்ளம்
அலை பெறு கடலினுஞ் சலனம் என்ப.

நட. திரை பொரால் கரையிலும் வெளியிலும் அன்றி,
கயத்திலும் அகத்திலுங் கலக்கம் அவர்க்கிலை.

125. தியக்கமும் மயக்கமுஞ் செறிவது அரிவையர்,
உள்ளப்பரப்பில் ஒரு புறத் தன்றி,
பள்ளத் தாழ்ச்சியிற் பரிவும், கொள்கை
விள்ளா முரணும், மெய்ம்மையில் தெளிவும்,
உள்ளார். அவர் தம் உறுதி நீ யுணராய்.
130. சுற்றிச் சுழலினுங் கறங்கு ஒரு நிலையைப்
பற்றியே சுழலும்; அப்படி யலர் புருடர்.
கேடு அவர் உறுவது இங்கு ஆடவ ருருவு கொண்டு
அலைதருங் கொடிய இவ் அலகைகள் வழியே.
புருடரோ இவரும்! கருவுறுங் குழவிமெய்
135. மென்றிட நன்றெனக் கொன்று தின்றிடுவர்.
அவாவிற்கு அளவிலை. அன்போ அறியார்.
மணமும் அவர்க்கு ஒரு வாணிகம்! அந்தோ!
சீ! சீ! என் இத் தீயவர் செய்கை!
மாசிலா வையகத்து இவ் வுயிர் வாழ்க்கை
140. ஆம் பெருங் கடலுட் போம் மரக்கலனும்
ஆடவர் நெஞ்சம், அறத்துறை அகன்று
நீள் திசை சுழற்று நிலையிலாக் காற்றும்
நிண்ணயம் அற்ற எண்ணம் இயக்கச்
சென்றுழிச்சென்று நன்றறிவு இன்றி
145. அலையாவண்ணம், அறத்துறைக் குடாவில்
நிலைபெற நிறுத்து நங்கூரமாய், பின்னும்
செய்வினை முயற்சியிற் பொய்வகைப் புன்னெறிக்கு
எற்றுண்டு அகன்று பற்றொன்று இன்றி
ஆசையாந் திசைதொறும் அலைந்து திரிந்து
150. கெடாவணங் கடாவிக் கெழுமிய அன்புசேர்
அறப்பிடி கடைப்பிடியாகக் காட்டிச்
சிறப்புயர் சுகத்துறை சேர்த்து சுக்கானாய்,
நின்றது மங்கையர் நிலைமை யென்று
நினையா மனிதர், விலங்கினுங் கீழாய்
155. அனையார் தரு சிற்றின்பமே யவாவி
வாழ்க்கைத் துணையா வந்தவர் தம்மைத்
தாழ்த்துஞ் சேரு மாற்றுவர். தவத்தால்
மந்திரவாள் பெற்றும் மாற்றலர் வெல்லாது

அந்தோ! தம் மெய் அறிவார் போலத்
160. தனியே தளருந் தமக்குத் துணையாய்
வருபவர்தமையும் பகைவராய் நலிந்து
பாலையும் நஞ்சாப் பண்ணுவர். அவர்தம்
மதிகேடு என்னே! துதிபெறும் அன்பும் நற்
குணமு முளார் இல் துணைவராயின்
165. இல்லது என் உலகில்? இவற்றுடன் கல்விசேர்
நல்லறிவு உளதேல் பொன்மலர் நாற்றம்
பெற்றவாறன்றோ? எற்றோ மடமை!
கேட்டிட வேட்டவை யாவையும் ஈயுங்
கற்பகதருவென அற்பமுங்கருதாது
170. அடியுடன் முறித்து முடிபுற எரித்துக்
கரி பெற முயன்ற கம்மியனே யென,
தனக்கென வாழுந் தனி மிருகத்தின்
மனக்கோண் நிமிர்த்து மற்றையர் இன்பமுந்
துன்பமுந் தனதா அன்பு பாராட்ட,
175. மெள்ள மெள்ளத் தன் உள்ளம் விரித்துப்
பொறையுஞ் சாந்தியும் படிப்படி புகட்டிச்
சிறிது சிறிது தன் சித்தந் தெளித்துத்
தானெனும் நினைப்புந் தனக்கெனும் இச்சையும்
ஒய்வுறச் செய்து, மற் றொன்றாய் நின்ற
180. எங்கும் நிறைந்த பேரின்ப வெள்ளம்
மூங்கி அதனுள் மூழ்கிட யாரையும்
பக்குவஞ் செய்யும் நற் பள்ளிச் சாலை, இவ்
இல்லறம் என்பதோர் நல்லுணர்வு இன்றி,
உடல் தினவு அடக்கு மா வுரைஞ்சிடு தடியென
185. மடத்தனங் கருதித் தம்மையும் பிறரையுங்
கெடுத்திடும் மாந்தரின் கெடுமதி யென்னே!
நாராணு! இவ்வயிற் கேட்டதுங் கண்டதும்
தீராத் துயரமே செய்வது. செல்குவன்.
ஏதாயினும் இனி யெய்தில்,
190. ஓதாய் முனிவர் உறையுள் உற்றே. (க)

(நடராஜன் போக.)

நாரா. (நேரிசை யாசிரியப்பா.)
(தனிமொழி)

நல்லது மிகவும்! செல் இடந்தோறும்
கதையாயிருந்தது. கண்டதென்? கேட்டதென்?
புதுமை இங்கிதுவும். பொருந்துவது
எதுவாயினுஞ் சரி. ஏகுவம் மனைக்கே. (உ)

(நாராயணன் போக.)

இரண்டாம் அங்கம் : இரண்டாம் களம்

முற்றிற்று.

---

# இரண்டாம் அங்கம்.

## மூன்றாம் களம்.

---

இடம் : திருவனந்தையிற் சேரன் அரண்மனை.

காலம் : காலை.

புருஷோத்தமன் சிந்தித்திருக்க.

(நேரிசை யாசிரியப்பா)

புருஷோத்தமன்.
(தனிமொழி)

யார் கொலோ அறியேம்! யார் கொலோ அறியேம்!
வார் குழல் துகிலொடு சோர மாசிலா
மதி முகங் கவிழ்த்து நுதி வேற் கண்கள்
விரக தாபத்தால் தரள நீர் இறைப்பப்
5. பரிபுரம் அணிந்த பங்கயம் வருந்துபு
விரல் நிலங் கிழிப்ப வெட்கந் துறந்து
விண்ணணங்கு அனைய கன்னியர் பலர் என்
கண்முன் நின்று அங்கு இரக்கினுங் கலங்காச்
சித்தம் மத்துறு தயிரில் திரிந்து
10. பித்துறச் செய்த இப் பேதை யார் கொலோ?

எவ்வுலகினளோ ? அறியேம். இணையிலா
நவ்வியும் நண்பும் நலனும் உடையவள்
யார் கொலோ ? நாள் பலவானவே. ஆ ! ஆ !
விழிப்போடு என் கண் காணில் !—வீண் ! வீண் !
15. பழிப்பாம் பிறருடன் பகர்தல். பகர்வதென் ?
கனவு பொய்யெனக் கழறுவர். பொய்யோ ?
நனவினும் ஒழுங்காய் நாள்தொறுந் தோற்றும்.
பொய்யல. பொய்யல. ஐயம் எனக் கிலை.
நாள்தொறும் ஒரு கலை கூடி வளரும்
20. மதியென எழில் தினம் வளர்வது போலும்.
முதல் நாள் முறுவல் கண்டிலம்; கடைக்கணில்
ஆர்வம் அலையெறி பார்வை அன்று இருந்தது.
நேற்றிராக் கண்ட தோற்றம் என் நெஞ்சம்
பருகினது ஐயோ ! கரிய கூந்தலின்
25. சிறு சுருள் பிறை நிகர் நறு நுதற் புரளப்
பொரு சிலைப் புருவம் ஒரு தலை நெகிழ்த்துச்
செவ்வரி படர்ந்த மை வழி நெடு விழி
உழுவலோடு என் முகம் நோக்க எழுங்கால்
என் நோக்கு எதிர்ப்படத் தன் நோக்கு அகற்றி,
30. வெய்யோன் வாரியில் விழுங்கால் துய்ய
சேணிடைத் தோன்றுஞ் செக்கர்போல் கன்னம்
நாணொடு சிவக்க, ஊர்கோள் நாப்பண்
தோன்றிய உவாமதி போன்று அங்கு எழி லொளி
சுற்றிய வதனம் சற்றுக் கவிழ்த்தி,
35. அமுதம் ஊற்றிருக்குங் குமுதவாய் அலர்ந்து
மந்தகாசந் தந்து அவணின்ற
நிலைமை யென் நெஞ்சம் நீங்குவ தன்றே !
தேவ கன்னியர் முதலாந் தெரிவையர்
யாவரே யாயினும் என் கண் தனக்கு
40. மைந்தரா மாற்றும் இச் சுந்தரி யார் கொலோ ?
அறியு மாறிலையே ! அயர்க்கு மாறிலையே !
உண்டெனிற் கண்டிடல் வேண்டும். இலை யெனில்
இன்றே மறத்தல் நன்றே. ஆம் ! இனி
மறத்தலே கருமம். மறப்பதும் எப்படி ?

45. போர் எவருடனே யாயினும் புரியில் அவ்
ஆரவாரத்தில் அயர்ப்போ மன்றி—

(சேவகன் வர)

சேவ. எழுதரு மேனி யிறைவ! நின் வாயிலில்
வழுதியின் தூதுவன் வந்து காக்கின்றான்.

புரு. யார் அவன்?

சேவ. பேர் பலதேவன் என்று அறைந்தான்.

புரு. 50. சோரன்! வரச் சொல்.

(தனதுள்) தூது ஏன்? எதற்கு இக்
கபவனைக் கைதவன் அனுப்பினன்?
நயந் தீது உணர்ந்து நட்டிலன் போன்மே. (க)

(பலதேவன் வர)

பலதே. மங்கலம், மங்கலம்! மலய மன்னவ!
பொங்கு அலைப்புணரி சூழ் புவி புகழ் சுமக்கத்
55. தன் தோள் தாரணி தாங்க எங்கும்
ஒன்னார் தலையொடு திகிரி யுருட்டிக்
குடங்கை யணையில் குறும்பர் தூங்க
இடம்பார்த்து ஒதுங்குந் தட முற்றத்து
மேம்படு திருநெல்வேலி வீற்றிருக்கும்
60. வேம்பார் ஜீவகவேந்தன் விடுத்த
தூது யான். என் பேர் ஓதில் அவ் வழுதியின்
மந்திரச்சிகாமணி தந்திரத் தலைவன்,
பொருந்தலர் துணுக்குறும் அருந்திறற் சூழ்ச்சியன்,
குடிலேந்திரன் மகன்—

புரு. (தனதுள்) மடையன்.

வந்த தென்?

பலதே. 65. அப் பெரு வழுதி ஒப்பறு மாநகர்
நெல்லையிற் கண்டு புல்லார் ஈட்டமும்
அரவினது அரசும் வெருவி ஞெரேலெனப்
பிறவிப் பௌவத்து எல்லையும் வறிதாம்
ஆணவத் தாழ்ச்சியும் நாண அகழ் வலந்
70. தொட்டு அஞ்ஞானத் தொடர்பினும் உரமாய்க்
கட்டிய மதிற் கணங் காக்க விடயத்து

எட்டி யழுத்தி யிழுக்கும் புலன்களின்
யந்திரப் படைகள் எண்ணில இயற்றி—

புரு. வந்த அலுவ லென்?

பலதே. மன்னவா! நீ யாள்

75. வஞ்சி நாடதற்குத் தென் கீழ் வாய்ந்த
நன்செய் நாடு என்றொரு நாடுளது அன்றே.
எங்கட்கு அந் நாடு உரித்தாம். அங்கு
பரவு பாடையும் விரவும் ஆசாரமும்
நோக்கில் வேறொரு சாக்கியம் வேண்டா—

புரு. 80. நல்லது! சொல்லாய்.

பலதே. தொல்லையாங் கிழமை பா-
ராட்டித் தங்கோல் நாட்டி நடத்த
வல்ல மன்னவர் இன்மையால் வழுதி நாட்டு
எல்லையுட் புகுந்து அங்கு இறுத்துச் சின்னாள்
சதியாய் நீ அரசாண்டாய்—

புரு. அதனால்?

பலதே. 85. அன்னதன் உரிமை மீட்க வுன்னியே
முது நகராம் எழில் மதுரை துறந்து
நெல்லையைத் தலைநகர் வல்லையில் ஆக்கி
ஈண்டினன் ஆங்கே.

புரு. வேண்டியது என்னே?
உரையாய் விரைவில்.

பலதே. உதியனும் செழியனும்

90. போர் தனி புரியில் யார்கொல் பிழைப்பர்?
பங்கமில் இரவியும் திங்களும் துருவி
எதிர்ப்படுங் காலை, கதிர்க் கடுங் கடவுள்
மறைய இவ்வுலகில் வயங்கு இருள் நிறையும்.
அவர் அந் நிலையில் அமர்ந்திடில் அவ்விருள்

95. தவறாத் தன்மை போல் நீவிர் இருவரும்
சமர் செயில் உலகந் தாங்காது என்றே
எமை யிங்கு ஏவி இவ் அவைக்கு ஏற்றவை
நீதியாய் எடுத்து எலாம் ஓதி, நன் செய் நாடு
உடையார்க்கு உரிமை நோக்கி யளிப்பதே

100. கடனெனக் கழறிப் பின் நிகழ் உன் கருத்து
அறிந்து மீளவே விடுத்தான்.

புரு. ஆ! ஹா!
முடிந்ததோ? இலையெனில் முற்றுஞ் செப்புவாய்.

பலதே. மேலும் ஒரு மொழி விளம்புதும் வேந்தே!
சாலவும் நீவிர் பகைக்கில் சகமெலாம்
105. ஆழ்துயர் மூழ்கலும் அன்றி, உங்கட்கு
ஏது விளையுமோ அறியேம். ஆதலின்,
அஞ்சா அரியேறு அன்ன ஜீவகனுடன்
வெஞ்சமர் விளைத்தல் நன்றல.

புரு. ஆ! ஆ!
(பயந்தார்போல)

பலதே. நன் செய் நாடு இனிமேல் மீட்டு நல்கலும்
110. எஞ்சலில் பெரும் புகழ்க்கு ஏற்ற தன்றெனில்
உரைக்குதும் உபாய மொன்று. உசிதன் மனையில்
திரைக் கடல் அமுதே யுருக்கொண்டது போல்
ஒரு மலர் மலர்ந்து அங்கு உறைந்தது. தேன் உண
விரை மலர் தேடு அளி வீற்றிங்கு இருந்தது.
115. அன்னவள் மன்ன! நின் அரியணை யமரில்
தென்னவன் மனமுந் திருந்தும். நன் செய் நாடு
உன்னதும் ஆகும்.

புரு. உண்மை! ஓ ஹோ!
வண்டு மலரிடை யணைய உன் நாட்டிற்
கொண்டு விடுவரே போலும். நன்று!
120. கோதறும் இரு புறக் காதலன்றி யெம்
நாட்டிடை வேட்டல் மற் றில்லை. மேலும் நம்
அரியணை யிருவர்க்கு இடங் கொடாது அறிகுதி.

பலதே. (தனதுள்) சுரிகுழல் வதுவை போனது. சுகம்! சுகம்!

புரு. ஆதலின் முடிவில் நீ யோதியது ஒழிக.
125. நன் செய் நாடதற்கா நாடி நீ நவின்ற
வெஞ் சொல் நினைதொறும் மேலிடும் நகையே.
அடைக்கலம் என்று நம் அமைச்சரை யடைந்து
நடைப் பிணம் போலக் கடைத்தலை இரிந்து

முடியுடன் செங்கோல் அடியிறை வைத்துப்
130. புரவலர் பலர் வாய் புதைத்து நிற்க,
அனையர் தம் மனைவியர் அவாவிய மங்கல
நாணை யிரந்து நாணந் துறந்து
கெஞ்சும் எம் சபையில், அஞ்சாது எமது
நன் செய் நாடதனை நாவு கூசாமற்
135. பாண்டியற்கு அளிக்க என்றுரை பகர்ந்தும்,
ஈண்டு நீ பின்னும் உயிர்ப்பது தூதவன்
என்ற பேரொன்றால் என்றே அறிகுதி.
கருதாது உனை யிங்கு ஏவிய கைதவன்
ஒரு வாரத்திற் குள்ளா அவன் முடி
140. யார்பகை யின்மையால் இதுகாறு அணிந்து
பார் வகித்தான் எனப் பகராது அறிவன்.
விரித்து நீ யெம்மிடம் உரைத்த புரிசையும்,
அரிக்கு நேரென்ன நீ அறைந்த அரசனும்
இருப்பரேல் காண்குவம் அவர் வலியினையும்.
(சேவகனை நோக்கி) 145. அருள்வரதனை யிங்கு அழையாய் ! சேவக !

(அருள்வரதன் வர)

பலதே. (தனதுள்) சிந்தனை முடிந்தது.

அருள்வரதன். வந்தனம் வந்தனம் !

புரு. நல்லது ! செழியன் நெல்லையை நோக்கி
நாளை யாம் ஏகுவம். நமது போர்வீரர் அவ்
வேளை ஆயத்தமாய் வைப்பாய்.

அருள். ஆஞ்ஞை.

புரு. (பலதேவனை நோக்கி) 150. செல்லாய் விரைவில். தென்னன் போர்க்கு
வல்லான் என்னில் வார மொன்றிற்குள்,
துன்னிய சேனையுந் தானும் நீ சொன்ன
கடிபுரி பலமாக் காக்க. இல்லையேல்,
முடி நம் அடியில் வைத்து நாம் இடும்
155. ஆணைக்கு அடங்கி அமர்க. எமதிடம்
வீணுக்கு உன்னை விடுத்த கைதவற்கு
வஞ்சியான் மொழிந்த மாற்றம் ஈது எனவே

எஞ்சாது இயம்புதி. ஏகாய். ஏகாய் !

(பலதேவன்போக)

(தனதுள்) முட்டாள் இவனை விட்டவன் குட்டுப்
160. பட்டபோது அன்றிப் பாரான் உண்மை.
பச்சாத்தாபப் படுத்துவம். நிச்சயம்.
நண்ணிய நமது கனவின்
எண்ணம் ஏகினும் ஏகும் இனியே. (உ)

(புருஷோத்தமன்போக)

(காவற் படைஞரும், சேவகர்களும், அருள்வரதனைச் சுற்றி நிற்க)

(நிலைமண்டில ஆசிரியப்பா)

அருள். தீர்ந்தது சூரரே ! நம்தோள் தினவு.
165. நேர்ந்தது வெம்போர்.

யாவரும். வாழ்க நம் வேந்தே !

முதற் படைஞன். நொந்தோம்; நொந்தோம் இதுகாறு உறங்கி.

யாவரும். உய்ந்தோம்; உய்ந்தோம். வாழுக வுன் சொல் !

உ-ம் படை. பெரும் போர் இலா நாள் பிறவா நாளே.

ங-ம் படை. மெய்யோ ? பொய்யோ ? ஐய ! இதுவும்.

ச-ம் படை. 170. யாவரோ பகைவர் ? அருளாபரண !
தேவரோ, அசுரரோ, மூவரோ, யாவர் ?

அருள். பாண்டியன்.

யாவரும். (இகழ்ச்சியாய்) பாண்டியன் ! சிச்சி ! பகடி !

அருள். ஈண்டு வந்தவன் அவன் தூதன். யதார்த்தம்.

யாவரும். வியப்பு ! வியப்பு !

ங-ம் படை. வேற்றுள் ஒருவன் என்
175. அயற் புறம் போனான்: அவன் முகம் நோக்குழி
வியர்த்தனன் : தூதுடை கண்டு விடுத்தேன்.

முதற்படை. அவன்தான் ! அவன்தான் ! அவன்தான் ! தூதன் !

ச-ம் படை. யாதோ காரணம் ? ஓதாய். தலைவா !

உ-ம் படை. அப்பந் தின்னவோ ? அலால் குழி யெண்ணவோ
180. செப்பியது உனக்கு ? நமக் கேன் ? சீச்சீ !

அருள். நல்லது வீரரே! நாளை வைகறை
நெல்லையை வளைந்து நெடும்போர் குறித்துச்
செல்லற்கு உரியன திட்டஞ் செய்வான்
வல்லையில் ஏகுதும். மங்கலம் உமக்கே. (ங)

(அருள்வரதன் முதலியோர் போக.)

இரண்டாம் அங்கம் : மூன்றாம் களம் முற்றிற்று.

---

கலித்துறை.

அடைய மனோன்மணி அம்மையுஞ் சேரனும் ஆசைகொள்ள
இடையில் நிகழ்ந்த கனத்திற வைபவம் என்னையென்க!
உடலுள் உலண்டெனவே யுழல்கின்ற உயிர்கள் அன்புந்
தடையில் கருணையுஞ் சந்தித்தல் எங்ஙனஞ் சாற்றுதுமே.

## இரண்டாம் அங்கம் முற்றிற்று.

---

| | | | |
|---|---|---|---|
| ஆசிரியப்பா | 22-க்கு | அடி | 708 |
| ஆசிரியத்துறை | 3-க்கு | ,, | 12 |
| கலித்துறை | 1-க்கு | ,, | 4 |
| ஆக அங்கம்-1-க்கு : | பா-26-க்கு | ,, | 724 |

# மூன்றும் அங்கம்.

## முதற் களம்.

---

இடம்: பாண்டியன் அரண்மனை.

காலம்: காலை.

ஜீவகனும் குடிலனும் மந்திராலோசனை.

(நிலைமண்டில ஆசிரியப்பா.)

ஜீவக. ஐயம் என்? அருஞ்சூழ் அமைச்ச! நின் தனையன்
பெய் வளைக் கன்னி யென் பேதையின் வதுவைக்கு
உரியன முற்றும் ஒருங்கே முடித்து
வருவதற்கு அமைந்த வலிமையும் கல்வியும்
5. உபாயமும் யாவும் உடையான்; அதனால்
அபாயங் கருதி நீ ஐயுறல் வீண்! வீண்!

குடில. பலதேவனால் ஒரு பழுது உறுமென எனக்கு
இல்லையில்லை ஐயஞ் சிறிதும். உலகத்து
இயற்கை யறியா இளையோ னாகிலும்
10. முயற்சியில் மதியில் முதியோன் எனவே
மொழிகுவர். அவனாற் பழுதிலை. கொற்றவ!
வஞ்சி நாட்டுள்ளார் வஞ்சனைக்கு அஞ்சார்.
நஞ்சினும் கொடிய நெஞ்சினர். அவர்தாம்
கெஞ்சிடில் மிஞ்சுவர்: மிஞ்சிடிற் கெஞ்சுவர்:
15. என்னுந் தொல் மொழி யொன்றுண்டு அதனால்
மன்னவ! சற்றே மருளும் என்னுளம்.
அன்றியும் புருஷோத்தம னெனும் அரசன்
கன்றுஞ் சினத்தோன் என்றார் பலரும்.

ஜீவக. சினத்தோ னாயின் என்? தேவருந் தத்தம்
20. மனத்தே அவாவி மயங்கு நம் மனோன்மணி
திருவும் வெருவும் உருவும், பெருகும்
அருளுறை யகமும், மருளறும் உணர்வும்,
முன்னமே யிருடிகள் மொழியக் கேட்டுளன்.
அன்னவன் தன்னிடைப் பின்னரும் பெயர்த்துக்
25. குறிப்பால் நமது கொள்கை யுணர்த்தில்,

செறித்திடுஞ் சிறையினை யுடைத்திடும் புனல்போல்
தாங்கா மகிழ்ச்சியுள் தாழ்ந்து அவன் இப்பால்
தலையால் ஓடி வருவன். உனக்கு
மலைவு ஏன் மந்திரக் குடிலேந்திரனே!

குடில. 30. முனிவர்கள் ஆங்கே முன்னர் மொழிந்தனர்
என நாம் நினைப்பதற்கில்லை. நம் அழுதின்
எழி லெலாம் எங்ஙனம் முனிவோர் மொழிவர்?
துறந்தார்க்கு அவைதாம் தோற்றுமோ மறந்தும்?
சிறந்த நூலுணர்வுந் தெளிந்தோர் உளமுஞ்
35. செப்பினர் என்றிடில் ஒப்பலாந் தகைத்தே.
ஆயினும், மலைநாட்டு அரசன் நமது
தாயின் தன்மை சகலமும் இப்போது
அறியா தொழியான். அயிர்ப்பொன் றில்லை.
நெறி முறை சிறிதும் பிறழா நினது
40. தூதுவன் யாவும் ஓதுவன் திண்ணம்.
அம்ம! தனியே அவன் பல பொழுதும்
மம்மர் உழன்றவன் போன்று மனோன்மணி
அவைபவத்து அழகெலா மாறாது அறைந்து அறைந்து,
'இமையவர் தமக்கும் இசையுமோ இவளது
45. பணிவிடை? நமது பாக்கியம் அன்றோ
அணிதா யிருந்து இவட்கு ஆம் பணியாற்றுதும்?
என்றும் இப்படியே யிவள் பணிவிடையில்
நின்று நம் உயிர்விடி லன்றோ நன்றாம்?'
என்று அவன் பலமுறை யியம்பல் கேட்டுளனே.

ஜீவக. 50. ஐயமோ? குடிலா! மெய்ம்மையும் இராஜ-
பத்தியும் நிறைந்த பலதேவன் தன்
சித்தம் என் குல திலக மாந் திருவுடன்
பரிவுறல் இயல்பே. அரிதாம் நினது
புத்திரன் என்னில், இத்திறம் என்று இங்கு
55. ஓதவும் வேண்டுவது உளதோ? ஏது இதும்?

குடில. அது குறித்தன்றே அறைந்தது எம் இறைவ!
மதி குலக் கொழுந்தாம் மனோன்மணி சீரெலாம்
அறியினுஞ் சேரன் வெறி கொளுஞ் சிந்தையன்

ஆதலின் வதுவைக்கு அவன்தான் இசைவனோ,
60. யாதோ வென என் மனந்தான் அயிர்க்கும்.
அவன் குணம் ஒரு படித்தன்றே. அவனுளம்
உவந்தன எல்லாம் உஞற்றுவன் என்றே
நாட்டுளார் நவில்வது கேட்டுளாய் நீயும்.

ஜீவக. ஆம்! ஆம்! அறிந்துளேம். ஏமாப் படைந்த
65. தன்னுளம் வியந்தவை யின்ன என்றில்லை.
வேதம் வகுத்த வியாசன் வியந்து
போற்றினும் பொருட்டாய் எண்ணான்; புலையன்
சாற்றுதல் ஒருகால் தான் மகிழ்ந்திடுவன்;
ஒருவன் தனது அடியிணை யடைந்துறவே
70. பெரிது விரும்பினும் பெருமை பாராட்டுவன்;
மற்றோர் மனிதன் சற்றும் எண்ணாதே
செருப்பால் மிதிக்கினும் விருப்பாய் இருப்பன்;
மல ரிடில் காய்வன்; பர விடில் மகிழ்வன்;
பெரியோர் சிறியோர் பேதையர் அறிஞர்
75. உரியோர் அயலோர் என்று அவ னென்றும்
உன்னான். ஆயினும் இன்னவை யாவும்
பிரபுத்துவம் அலால் பிற அல குடிலா!

குடில. அடியேற்கு அவ்விடத்து ஐய மொன்று உளது.
முடிபுனை மன்னரிற் கடிநகர்ச் செருக்கும்
80. இணையிலாச் சேனையும் ஈறிலா நிதியும்
துணிவுறு வுளனும் பணிகிலா வுரனும்
உனைவிட எவர்க்கு உள? ஓதுவாய். உன்வயின்
தினை யளவேனும் சேரா தாகும்
ஒரு குணம் பிரபுத்துவம் என யாரே
85. உரைதர வுன்னுவர்? ஒவ்வுவது எவ்விதம்?
மலையன் தந்தைகீழ்த் தாய்கீழ் வளர்ந்தவன்
அலனெனுந் தன்மை நீ ஆய்ந்திலை போலும்.
நன்று தீது என்று அவன் ஒன்றையும் நாடான்
என்றிடில் நாம் சொலும் நன்மையும் எங்ஙனம்
90. நாடுவனென எனக்கு ஓடும் ஓர் நினைவே.

ஜீவக. ஒக்கும்! ஒக்கும் நீ யுரைத்தவை முற்றும்.

குலகுரு கூறுதல் கொண்டிலம் என்னில்
நலமன்று என்றே நாடி யனுப்பினோம்.
நயந்திலனாகில் அவன் விதி. நமக்கென்?
95. இயைந்த கணவர் வேறு ஆயிரம். காண்குதும்.

குடில. அதற்கேன் ஐயம்? ஆயிரம்! ஆயிரம்!
இது மாத்திர மன்று இறைவ! சேரன்
சென்றவர்க்கு எங்ஙனம் தீது இழைப்பானோ
என்றே என் மனம் பதறும். ஏவு முன்
100. உரைக்க வுன்னினேன் எனினும் உன் தன்
திருக் குறிப்பிற்கு எதிர் செப்பிட அஞ்சினேன்.

ஜீவக. வெருவலை குடிலா! அரிதாம் நமது
தூதுவர்க்கு இழிபு அவன் செய்யத் துணியும்
போதமோ காணுதி, பொருநைத் துறைவன்
105. செருக்கும் திண்ணமும் வெறுக்கையும் போம்விதம்!
விடுவனோ சிறிதில்? குடில! உன் மகற்குத்
தினைத்துணை தீங்கு அவன் செய்யின் என் மகட்குப்
பனைத்துணை செய்ததாய்ப் பழி பாராட்டுவன்.

(ஒற்றன் வர.)

ஒற்றன். மங்கலம்! மங்கலம்! மதிகுல மன்னவா!

ஜீவக. 110. எங்குளார் நமது தூதுவர்?

ஒற்றன். இதோ! இம்
மாலையில் வருவர். வாய்ந்தவை முற்றும் இவ்
ஓலையில் விளங்கும், ஒன்னலர் ஏறே!

(ஒற்றன் போக, ஜீவகன் ஓலை வாசிக்க.)

குடில. (தனதுள்) ஒற்றன் முகக்குறி யோரில் எம் எண்ணம்
முற்றும் முடிந்ததற்கு அற்றமொன்று இல்லை.
115. போரும் வந்தது. நேரும் புரவலற்கு
இறுதியும் எமக்கு நல் லுறுதியும் நேர்ந்தன.

ஜீவக. (தனதுள்) துட்டன்! கெட்டான்! விட்ட நம் தூதனை
ஏசினன்; இகழ்ந்தான் பேசிய வதுவையும்.
அடியில் நம் முடி வைத்து அவ னாணையிற் கீழ்ப்
120. படியில் விடுவனும்: படை கொடு வருவனும்:
முடி பறித்திடுவனும். முடிபறித்திடுவன்!

(குடிலனை நோக்கி) குடிலா! உனைப்போற் கூரிய மதியோர்
கிடையார். கிடையார். அடையவும் நோக்காய்.
கடையவன் விடுத்த விடை அதிவியப்பே!

(குடிலன் ஓலைநோக்க)

குடில. 125. நண்ணலர் கூற்றே! எண்ணுதற்கு என்னே!
உண்ண வா என்று யாம் உறவு பாராட்டில்
குத்த வா எனும் உன்மத்தன் அன்றே யிவன்!
புத்தர் தனக்கு எள் ளத்தனை யேனும்
வெருவினோம் அல்லோம். திருவினுஞ் சீரிய
130. உருவினள் தனக்கு இங்கு உரைத்ததோர் குற்றமும்
இழிவையும் எண்ணியே அழியும் என்னுளம்!

ஜீவக. பொறு! பொறு! குடில! மறுவிலா நமக்கும்
ஒரு மறுக் கூறினோன் குலம் வேரொடுங்
கரு வறுத்திடல் உன் கண்ணுறக் காண்டி.

குடில. 135. செருமுகத்து எதிர்க்கில் பிழைப்பனோ சிறுவன்?
ஒரு மயக்கதனால் பொருவதற்கு எழுந்தான்.
வெற்றி யாம் முற்றிலுங் கொள்வே மெனினும்,
ஆலவாய் உள்ள படைகளை அழைக்கிற்
சாலவும் நன்றும். காலம் இங்கு இலையே.

ஜீவக. 140. வேண்டிய தில்லை யீண்டு அவ ருதவி.
தகாதே அந்த நிகாதர் தம் சகாயம்.
ஒருநாள் பொருதிடில் வெருவி யோடுவன்.
பின் அழைத்திடுவோம். அதுவே நன்மை.
புலி வேட்டைக்குப் பொருந்துந் தவிலடி
145. எலி வேட்டைக்கும் இசையுமோ? இயம்பாய்.

குடில. அன்றியும் உடனே அவன் புறப்படலால்
வென்றி கொள் சேனை மிக இராது அவன்பால்.

ஜீவக. இருக்கின் என்? குடிலா! பயமோ இவற்கும்?
பொருக்கெனச் சென்று நீ போர்க்கு வேண்டியவெ
150. ஆயத்தம் ஆக்குதி. யாம் இதோ வந்தனம். [லாம்

(ஜீவகன் போக. வாயில் காத்த சேவகன் வணங்கி வந்து,)

சேவ. விழுமிய மதியின் மிக்கோய்! நினைப்போல்

பழுதிலாச் சூழ்ச்சியர் யாவர்? நின் மனம்
நினைந்தவை யனைத்தும் நிகழுக ஒழுங்கே.

குடில. நல்லது! நல்லது! செல்லாய் அப்பால். (சேவகன்போக)

(தனதுள்) 155. சொல்லியது என்னை? சோரன் நமது
நினைவு அறிந்துளனோ? நிருபர்க்கு உரைப்பனோ?
இளையவன் எங்ஙனம் உணருவன்? வினையறி
நாரணன் ஓர்ந்து நவின்றனன் போலும்.—
காரணம் அதற்குங் கண்டிலம். ஆ! ஆ!
160. மாலைக்காக வாழ்த்தினன் இவனும்!
புலமையிற் சான்றோர் புகல்வது பொய்யல.
"கள்ள மனந்தான் துள்ளும்" என்பதும்
"தன்னுளந் தன்னையே தின்னும்" என்பதும்
"குற்ற முள்ளோர் கோழையர்" என்பதும்
165. சற்றும் பொய்யல. சான்று நம்மிடத்தே
கண்டனம். அவன் எம் அண்டையில் அம்மொழி
விளம்பிய காலை விதிர்விதிர்ப்பு எய்தி
உளம் படபடத்து என் ஊக்கமும் போனதே.
சிச்சீ! இச்சை செய் அச்சம் சிறிதோ!
170. வஞ்சனை யாற் பெறும் வாழ்வு ஈதென்னே!
நஞ்சு போல் தனது நெஞ்சங் கொதிக்கக்
கனவிலும் நனவிலும் நினைவுகள் பல வெழத்
தன்னுளே பன் முறை சாவடைந்து அடைந்து
பிறர் பொருள் வெளவும் பேதையிற் பேதை
175. எறிகடலுலகில் இலை யிலை. நில்! நில்!—
நீதியை நினைத்தோ நின்றேன்? பள! பள!
ஏது இது? என் மனம் இங்ஙனந் திரிந்தது!
கொன்றபின் அன்றோ முதலை நின்றழும்?
வா வா காலம் வறிதாக்கினையே.
180. ஓவாது இவையெலாம் உளறுதற்கு உரிய
காலம் வரும். வரும். சாலவும் இனிதே! (க)

(குடிலன் போக)

மூன்றாம் அங்கம்: முதற் களம் முற்றிற்று.

# மூன்றாம் அங்கம்.

## இரண்டாங்களம்.

---

இடம்: ஊர்ப்புறம் ஒரு சார்.

காலம்: எற்பாடு. நடன்: நடராஜன்.

(நேரிசை யாசிரியப்பா)

நடராஜன்.
(தனிமொழி)

காலையிற் கடிநகர் கடந்து நமது
வேலை முடிக்குதும். வேண்டின் விரைவாய்
இன்றிரா முடிக்கினும் முடியும். துன்று அராக்
கவ்விய முழு மதிக் காட்சியிற் செவ்விதாம்
5. பின்னிய கூந்தற் பேதையின் இள்முகம்
என்னுளத்து இருந்து இங்கியற்றுவது இப்பணி.
அதனால் அன்றோ இதுபோல் விரைவில்
இவ்வினை யிவ்வயின் இனிதின் முடிந்தது?
எவ் வினையோர்க்கும் இம்மையில் அம்மை
10. இயக்குதற்கு இன்பம் பயக்கும் ஓரிலக்கு
வேண்டும். உயிர்க்கு அது தூண்டு கோல்போலாம்.
ஈண்டு எப்பொருள் தான் இலக்கு அற்றிருப்பது?
இதோ ஓ! இக் கணை முளைத்த இச்சிறு புல்
சதா தன் குறிப்பொடு சாருதல் காண்டி.
15. அதன் சிறு பூக்குலை யடி யொன்று உயர்த்தி
இதமுறத் தேன் துளி தாங்கி ஈக்களை
நலமுற அழைத்து நல்லூண் அருத்திப்
பலமுறத் தனது பூம் பராகம் பரப்பித்து
ஆசிலாச் சிறு காயாக்கி, இதோ! என்
20. தூசிடைச் சிக்குந் தோட்டியுங் கொடுத்தே,
“இவ் வயின் யாமெலாம் செவ்விதில் துன்னில்
தழைப்பதற்கு இட மிலை : சிறார் நீர் பிழைப்பதற்கு
ஏகுமின். புள் ஆ எருது அயத்து ஒருசார்
சிக்கி நீர் சென்மின்!” எனத் தன் சிறுவரைப்
25. புக்க விட்டிருக்கும் இப்புல்லின் பரிவும்

பொறுமையும் புலனுங் காண்போர், ஒன்றையும்
சிறுமையாச் சிந்தனை செயாது ஆங்காங்கு
தோற்று பேரழகும் ஆற்றல் சால் அன்பும்
போற்று தங் குறிப்பிற்கு ஏற்றதோர் முயற்சியும்
30. பார்த்துப் பார்த்துத் தம் கண் பனிப்ப,
ஆர்த்தெழும் அன்பினால் அனைத்தையுங் கலந்து தம்
என்பெலாங் கரைக்கும் நல் லின்பந் திளைப்பர்.
தமக்கு ஊண் நல்கும் வயற்கு உபயோகம்,
எனப் பலர் கருதும் இச் சிறுவாய்க்கால்
35. செய் தொழில் எத்தனை விசித்திரம். ஐயோ!
அலைகடல் மலையா மலை யலை கடலாப்
புரட்டிட அன்றோ நடப்பது இச் சிறுகால்!
பார் இதோ! பாறைகளை நெறுநெறு என்றுரைத்துச்
சீரிய தூளியாத் தெள்ளிப் பொடித்துத்
40. தன் வலிக்கு அடங்கிய மண் கல் புல் புழு
இன்னதென் றில்லை; யாவையும் ஈர்த்துத்
தன்னுட் படுத்தி முந்நீர் மடுவுட்
காலத் தச்சன் கட்டிடும் மலைக்குச்
சாலத் தகும் இவை யென வோர்ந்து உருட்டிக்
45. கொண்டு சென்று இட்டு மற்று "ஐயா!
அண்டயோனியின் ஆணையின் மழையாய்ச்
சென்றபின் பெருமலைச் சிகர முதலாக்
குன்றுவீழ் அருவியாய்த் தூங்கியும், குகைமுகம்
இழிந்தும், பூமியின் குடர் பல நுழைந்தும்,
50. கதித்தெழு சுனையாய்க் குதித் தெழுந்து ஓடியும்,
ஊறிடுஞ் சிறிய வூற்றாய்ப் பரந்தும்,
ஆறாய் நடந்தும், மடுவாய்க் கிடந்தும்,
மதகிடைச் சாடியும், வாய்க்கால் ஓடியும்
பற்பல பாடு யான் பட்டு அங்கு ஈட்டியது
55. அற்பமே யாயினும் ஆதரவாய்க் கொள்;
இன்னமும் ஈதோ ஏகுவன்." என விடை
பின்னரும் பெற்றுப் பெயர்த்தும் எழிலியாய்
வந்து இவண் அடைந்து, மற்று இராப்பகல் மறந்து
நிரந்தரம் உழைக்கும் இந்நிலைமையார் யாவர்?

(நீரைக் கை யால் தடுத்து) 60. நிரந்தரம் ! ஐயோ ! நொந்தனை ! நில் ! நில் !
இரைந்த தென் ? அழுவையோ ? ஆயின் ஏகுதி.
நீரே ! நீரே ! என்னை யுன் நிலைமை ?
யாரே யுனைப்போல் அனுதினம் உழைப்போர் ?
நீக்கமில் அன்பும் ஊக்கமும் உறுதியும்
65. உனைப்போல் உளவேல் பினைப் பேறு என்னை ?—
(நாங்கூழ்ப்புழு வை நோக்கி) ஓகோ ! நாங்கூழ்ப் புழுவே ! உன்பாடு
ஓவாப் பாடே. உணர்வேன் ! உணர்வேன் !
உழைப்போர் உழைப்பில் உழுவோர் தொழில் மிகும்.
உழுவோர்க் கெல்லாம் விழுமிய வேந்து நீ.
70. எம் மண்ணுயினும் நல் மண்ணுக்குவை.
விடுத்தனை யிதற்கா, எடுத்த வுன் யாக்கை.
உழுது உழுது உண்டு மண் மெழுகினும் நேரிய
விழுமிய சேறாய் வேதித்து உருட்டி
வெளிக் கொணர்ந்தும், புகழ் வேண்டார் போல
75. ஒளிக்குவை யுன் குழிவாயும் ஓர் உருண்டையால் !
இப் புற்பயிர் நீ யிங்ஙனம் உழாயேல்
எப்படி யுண்டாம் ? எண்ணுது உனக்குங்
குறும்பு செய் யெறும்புங் கோடி கோடியாப்
புழுக்களும் பூச்சியும் பிழைக்கு மாறென்னை ?
80. ஒழுக்கமும் பொறையும் உனைப்போல் யார்க்கு உள ?
(நாங்கூழ்ப் புழு குழிக்குள் மறைதலை நோக்கி) விழுப் புகழ் வேண்டலை. அறிவோம். ஏனிது ?
துதிக்கலம். உன் தொழில் நடத்துதி. ஆ ! ஆ !
எங்கும் இங்ஙனே யிணையிலா இன்பும்
பங்கமில் அன்பும் தங்குதல் திருந்தக்
85. காணார் பேணும் வாணாள் என்னே !
அலகிலாத் தோற்றமோடு இலகிய வுலகிற்
சிதறிய குணக் கதிர் செறிந்து திரள
வைத்த சிற்றுடியின் மையமே ஒத்த
உள்ளமும் உடலும் பெற்றும், கள்வர்—
90. நினைக்கலே, தீயனை நினைப்பதுந் தீதே !
சினக் கனல் எழும்பும். நமக்கு ஏன் இச்சினம்.
கிருபணன். தீனன். விடு விடு. அஃது என் ?
என்கொல் அத்தோற்றம் ? புகையோ ?—மங்குலுக்கு

இந்திர மில்லை. செந்திறப் படாம் என,
95. பொதியில் நன் முகடாம் பொற்புறு கருவிற்
கதி மிகு தினமெனும் பொன் வினைக் கம்மியன்
உருக்கி விடுதற்கு உயர்த்திய ஆடகப்
பெருக்கென விளங்கிய அருக்கனது ஒளியைப்
பொருக்கெனப் புதைத்த இப் புழுதி யென்னே ?
100. இதோ ! துவண்டு அங்கு இடையிடைத் தோற்றுவ
பதாகையின் தொகுதி யன்றோ பார்க்கின் ?
இடி யுருண்டதுபோல் எழு மொலி தேரொலி !
அடு படை கொண்டிங்கு அடைந்தவன் யாவன் ?
வரு திசை நோக்கில் வஞ்சியனேயாம்.—
105. பொருதற்கு அன்று அவன் வருவது. சரி சரி !
வதுவைக்கு அமைந்து வந்தான் போலும்.
இது வென் ? ஒகோ ! மணப் பாட்டு அன்று இது.

(வஞ்சிநாட்டுச் சேனை அணி வகுத்து வழியில் ஒரு புறம் போக. படைப்பாணர் பாட.)

(வஞ்சித் தாழிசை)

படைப்பாணர்.

அஞ்சலில் அரிகாள் ! நும்
சஞ்சிதப் பெரு வாழ் வெம்
வஞ்சியன் சினத்தாற் கண்
துஞ்சிய கனவே காண். (1)

படைகள். ஜே ! ஜே ! ஜே !

பாணர்.

எஞ்சலில் பகைகாள் ! நும்
மஞ்சுள மணி மகுடம்,
வஞ்சியன் சினத்தால் நீர்
கஞ்சியுண் கடிஞையே காண். (2)

படை. ஜே ! ஜே ! ஜே !

பாணர்.

மிஞ்சிய பகைகாள் ! நும்
அஞ்சிய பிதிர்க் கூட்டம்,
வஞ்சியன் சினத்தால் எள்
நெஞ்சிலும் நினையார் காண். (3)

படை. ஜே ! ஜே ! புருஷோத்தமர்க்கு ஜே ! ஜே !

நட. பார் புதைத்து எழுந்த வீரர்தம் ஆர்ப்பும்,
வார் கழலொலியும், வயப்படையொலியும்,
110. பாடிய பாட்டின் பண்ணும், தலைமிசைச்
சூடிய வஞ்சித் தொடையும், தண்ணுமை
பொருவு தம் புயத்தில் வெண்கலப் பொருப்பில்
உருமு வீழ்ந் தென்னத் தட்டிய ஓதையும்,
இரு கனல் நடமிடும் ஒரு கரு முகிலில்
115. மின்னுதித்து அடங்கல் போல் துன்னிய சின நகை
காட்டிய முகக்குறி யாவும் நன்றல.
வேட்டலோ இதுவும்! விளையு மாறெவனோ!
நினைவிலும் விரைவாய் நனி செலுங் குரத்த
கொய்யுளைத் திரைக் கடற் கூட்டமும், பெய்மத
120. மைம்முகி லீட்டமும், வான்தொடு விலோதனப்
பெருஞ் சிறை விரித்து நெடுந்திசை புதைத்துச்
செல்லும் அசலத் திரளுஞ் செறிந்து
நெல்லையை வெல்லவே செல்வது திண்ணம்.
அந்தோ! அந்தோ! மனோன்மணி வதுவை
125. வந்த வாறிதுவோ! வந்த வாறிதுவோ!

(இரண்டு உழவர்கள் வர)

முதல் உழவன். வியப்பு என்? சுவாமி!

நட. வயப்படை வந்தது
அறிவையோ நீயும்?

முதல் உழ. அறிவேன். போருக்கு
அழைத்திடில் யாவர் அணுகார்?

நட. வழுதி
மணமொழி வழங்க அன்றோ விடுத்தான்?

உ-வது உழ. 130. மணமொழி பிணமொழி யானது. குடிலன்
கைதொடில் மஞ்சளும் கரியாகும்மே!

நட. செய்த தென்?

முதல் உழ. ஐய! அது நாம் அறியோம்.
குடிலன் படிறன். கொற்றவன் நாடும்
முடியுங் கவர்ந்து மொய்க் குழல் மனோன்மணி

135. தன்னையுந் தன் மகற்கு ஆக்கச் சமைந்தான்.
மன்னனைக் கொல்ல மலையனைத் தனக்குச்
சூதாய்த் துணைவராக் கவினான்.

நட. சீச்சீ!
ஏதிது? வஞ்சியான் வஞ்சனைக்கு இசையான்.
பொய் பொய். புகன்றது ஆர்?

முதல் உழ. பொய்யல. பொய்யல.
140. ஐய! நான் அறைவது கேட்டி. எனது
மைத்துனன் அவன் தாய் மரித்த மாசம்
உற்றதால் அந்தத் திதியினை புணரச்
சென்றனன் புரோகித சேஷையனிடத்தில்.
(உ-வது உழவனை நோக்கி) அன்று நாள் ஆதித்தவாரம். அன்றுதான்
145. சாத்தன் உன்னுடன் சண்டை யிட்டது.
(நடராஜனை நோக்கி) சாத்திரி தரையி லிருக்கிறார். அவரது
மாமனார் கிட்டவே ஆமைப் பலகையில்—
(நாற்புறமும் நோக்கி; செவியில்) இருந்து பல பல இரகசியம் இயம்புவர்—

நட. திருந்தச் செப்பாய். யாருளர் இவ்வயின்?

உ-வது உழ. 150. இந்த மாமனார் மந்திரி மனைவிக்கு
உற்ற ஜோசியர்.

முதல் உழ. பொறு! யான் உரைப்பன்.
மற்று அவ் எல்லை யென் மைத்துனன் ஒதுங்கி
அருகே நின்றனன். அப்போது அறைவர் :—
"மருகா! நேற்று மந்திரி மனைவி
155. பல பல பேச்சுப் பகருங்காலை,
பலதேவன் தன் ஜாதக பலத்தில்
அரச யோகம் உண்டென்று அறைந்தது
விரைவில் வருமோ என்று வினவினள்;
வரும் வரும் விரைவில் என்றேன் யானும்.
160. மறுமொழி கூறாது இருந்து, பின் மனோன்மணி
வதுவைக் காரியம் பேசினள். மற்று அது
நடக்குமோ? என்று அவள் கேட்டு நகைத்தாள்.
நடப்பது அரிதென நான் மொழிந்ததற்கு

வருத்தம் உற்றவள் போல் தோற்றினும், கருத்திற்
165. சிரித்தனள் என்பது முகத்தில் தெரிந்தேன்."—
எனப் பல இரகசியம் இயம்பி " வலியோர்
மனக்குறி, முகக்குறி, வறிதாஞ் சொற்கள்
இவைபோல் வருபவை எவைதாம் காட்டும்?"
என வுரைத்து இருவரும் எழுந்து பின் நகைத்தார்.
170. பினை யென் மைத்துனன் பேசி மீண்டு உடனே
யெனக்கு இங்கிவையெலாம் இயம்பினன். உனக்குச்
சாக்கி வேண்டுமேற் காக்கைச் சுப்பனும்
உண்டு. மற்று அவனைக் கண்டு நீ வினவே.

உ-வது உழ. வேண்டாம்! வேண்டாம் ஐயம் மற்றதற்கு.
175. மீண்டும் ஒரு மொழி கேள். இவ் வழியாய்த்
தூதுவர் போகுங்காலைத் தாக
ஏதுவால், இரும்படி யிராமன் என்றன்
தங்கை மனைக்கு வந்த அத் தருணம்
அங்கு யான் இருந்தேன். " அரண்மனைச் செய்தி
180. என்ன?" என்றேற்கு அவன் இயம்பும்: "மன்னன்
தெத்து எடுத்திடும்படி யத்தனமுண்டு" என,
" எப்போது யாரை?" என்றேற்கு ஒன்றும்
செப்பாது எழுந்து சிரித்து அவன் அகன்றான்.

முதல் உழ. பலதேவற்கு இவன் நல மிகு சேவகன்.

உ-வது உழ. 185. குடிலன் ஆள்வதை விடக் குடகன் ஆள்வது நலம்.

முதல் உழ. ஆயினும், நமக்கு அஃது இழிவே. மேலும்
தாயினுஞ் சிறந்த தயாநிதி மனோன்மணிக்கு
உறுதுயர் ஒருவரும் ஆற்றார்.

உ-வது உழ. அறிவிலாத்
தந்தையர் தம் வினை மக்களைச் சாரும்.
190. சுந்தர வாணியின் சிந்தைநோய் வழுதியை
விடுமோ? சொல்லாய்.

முதல் உழ. விதியெனப் பலவும்
படியோர் பாவனை பண்ணித் தமது
கடமையின் விலகுதல் மடமை. அதனால்
நாட்டிற் போர்வரின் நன்கு பாராட்டு

195. எஞ்சா வெஞ்சமர் இயற்றலே தகுதி.

உ-வது உழ. அரசன், அரசனேற் சரியே. சுவாமீ !
உரையீர் நீரே. திருவார் வாணியை
அறியீர் போலும்.

நட. அறிவோம். அறிவோம் !
நல்லது அப்புறம் செல்லுமின் நீவிர்.—

(உழவர் போக)

(தனதுள்) 200. ஏழைகள் ! தங்கள் ஆழமில் கருத்தில்
தோற்றுவது அனைத்துஞ் சாற்றுவர். அவர்தம்
தேற்றமில் மாற்றம், சிறுமியர் மழலை போல்,
சுகந் தரு மொழி போல், சுகந் தரும். சூழ்ச்சியும்
அனுமானிக்கும் அளவையும் முனும் பினுங்
205. கூட்டிக் காரண காரியக் கொள்கைகள்
காட்டலும், காணக் களிப்பே ! ஆயினும்
பழுது அல பகர்ந்தவை முழுதும். முன்னோர்
ஜனமொழி தெய்வமொழி யெனச் செப்புவர்.
அரசியல் இரகசியம் அங்காடி யம்பலம்
210. வரும் விதம் இதுவே ! மட்குடத்து உள நீர்
புரை வழி கசிந்து புறம் வருந் தன்மைபோல்,
அரசர் அமைச்ச ராதியர் தங்கள்
சிந்தையிற் புதைத்த அந்தரங்கப் பொருள்
விழி முகம் நகை மொழி தொழில் நடை யிவைவழி
215. ஒழுகிடும். அவைகளை யுழையுளார் தமக்குத்
தோற்றிய பலவொடுந் தொடுத்துக் காற்றில்
தூற்றுவர். எனினுஞ் சொன்னவை முற்றும்
குடிலன் குணமுடன் கூடலால் அவையும்,
படை யிவண் வர நாம் பார்த்ததும்,
220. அடையவும் முனிவற்கு அறைகுவம் சென்றே.

(நடராஜன் போக)

மூன்றும் அங்கம் : இரண்டாம் களம்

முற்றிற்று.

# மூன்றாம் அங்கம்.

## மூன்றாம் களம்.

---

இடம்: கன்னிமாடம், நிலாமுற்றம்.
காலம்: யாமம்.

மனோன்மணி உலாவ: வாணிநிற்க:
செவிலி படுத்துறங்க.

(நேரிசை யாசிரியப்பா.)

செவிலி.
(படுத்தபடியே) ஏதம்மா! நள்ளிரா எழுந்து உலாவினை?—
தூக்கம் ஒழிவையேல் சுடுமே யுடலம்.

மனோ. உடலால் என்பயன்? சுடவே தகும் அது.
வேர்க்கிறது இவ்விடம். வெளியே யிருப்பல்.
5. போர்த்து நீ தூங்கு!

(செவிலி தூங்க)

வாணி! உனக்கும்
உறக்க மில்லையோ?

வாணி. எனக்கு அது பழக்கம்.

மனோ. வருதி யிப்புறம். இரு இரு.—

(இருவரும் நிலாமுற்றத்து இருக்க)

இது வரை
எங்கு இருந்தன இவ் அன்றிற் பேய்கள்!
நஞ்சோ நாவிடை? நெஞ்சந் துளைக்கும்!
10. உறக்கங் கொண்டனள் செவிலி! குறட்டை கேள்.
கை யறு நித்திரை! வாணி! மற்று இது
வைகறை யன்றோ?

வாணி. நடு நிசி அம்மா!

மனோ. இத்தனை பரவம் ஏன் ? முனிவர் அறையில்
நித்தமும் உண்டிது ! நிதி யெடுப்பவர் போல்
15. தோண்டலும் மண்ணினைக் கீண்டலுங் கேட்டுளேன்.
ஊரில் ஏன் இன்று இவ் வுற்சவ அரவம் ?

வாணி. (தனதுள்) போமெனிற் பொறுப்பளோ ? உரைப்பனே !

மனோ. கண்டதோ நகரும் காணக் கனவு ? [ஒளிப்பனே !

வாணி. கண்டது கனவோ தாயே ?

மனோ. கண்டது,—
20. கனவெனிற் கனவும் அன்று : மற்று
நனவெனில் நனவும் அன்று.

வாணி. நன்றே !
கண்ணாற் கண்டிலைபோலும் ! அம்ம !

மனோ. கண்ணால் எங்ஙனங் காணுவன் ? கண்ணுளார் !

வாணி. எண்ணம் மாத்திரமோ ? இது வென் புதுமை !

மனோ. 25. எண்ணவும் படாஅர் ! எண்ணுளும் உளாஅர் !

வாணி. புதுமை ! ஆயினும் எதுபோல் அவ் வுரு ?

மனோ. இதுவென வொண்ணு வுவமையி லொருவரை
எத்திறம் என்று யான் இயம்ப ! நீயும்
சித்திரரேகை யலையே. விடு விடு !
30. பண்ணியல் வாணீ ! வா வா ! உன்றன்
பாட்டது கேட்டுப் பல நாள் ஆயின !

வாணி. என் பாடிருக்க ! யாவரும் அறிவார் !
உன்பாடதுவே யொருவரும் அறியார்.

மனோ. பாக்கியசாலி நீ ! பழகியும் உனையே !—
35. நீக்குக இத் தீ நினைவு ! யாழுடன்
தேக்கிய இசையிற் செப்பு ஒரு சரிதம்

(வாணி வீணைமீட்ட)

அவ் இசையே சரி ! ஒவ்வும் இத் தருணம் !

(வாணி பாடுகின்றாள்.)

## சிவகாமி சரிதம்.

(குறள்வெண் செந்துறை)

"வாழிய நின் மலரடிகள் ! மௌன தவ முனிவ !
மனமிரங்கி அருள்புரிந் தோர் வார்த்தை யெனக்கீயிற்
பாழடவி யிதிற் சுழன்று பாதை விடுத் தலையும்
பாவி யொருவனை அளித்த பலன் உறுவை பெரிதே. (1)

சாரும் வரை குறியாது தன் நிழலை யளக்குந்
தன்மை யென நான் நடக்கத் தான் வளரும் அடவி.
ஆரிருளில் இனி நடக்க ஆவதிலை. உடல
மாறும் வகை விடுவதேல் அடையும் நெறி அருளாய்." (2)

என்ற மொழி கேட்ட முனி யெதிர்விடை யங் கியம்பும்:—
"ஏகாந்தப் பெருங் ககனம்; இதில் உலகர் அணையார் ;
சென்றுறைய மடமுமிலை ; திகழ்வெளி என்வீடு ;
சிந்தையற வொழிந்தவர்க்குச் சேரவிலை பந்தம். (3)

அறங் கிடந்த சிந்தையராய் ஆசையெலாந் துறந்த
அறிவீர ரொழிய எவ ராயினும் இங் கடையார்.
உறங்க அவர் பணிப்பாயும் பூவணையும் உண்ணூர்
உண்ண வெனிற் பாலமிழ்தும் ஒன்றாக மதியார். (4)

ஆதலில் என்பால் உறுவது யாதெனினும் மைந்த !
அன்புடன் நீ யென் பிறகே அணையில் அஃதுனதாம்.
வேதனையும் மெய்ச்சலிப்பும் விட்டகல இருளும்
விடியும். உடன் மன மிருக்கில் வேண்டு மிடம் ஏகாய்." (5)

என்றுரைத்த இனிய மொழி யிரு செவியுங் குளிர,
ஏதோ தன் பழ நினைவும் எழ இருகண் பனித்து
நன்றெனவே தவ வடிவாய் நின்றமகன் வணங்கா
நன் முனிவன் செல் வழியே நடந்து நனி தொடர்ந்தான். (6)

இந்திர நற்சால வித்தை யெதுவோ வொன் றிழைக்க
இட்டதிரை யெனத் திசைக ளெட்டும் இருள் விரிய
அந்தரத்தே கண் சிமிட்டிச் சுந்தர தாரகைகள்
அரிய ரகசியந் தமக்குள் அறைந்து நகைபுரிய;- (7)

என்புருகப் பிணைந்த அன்றில் இணை சிறிது பிரிய
ஏங்கி யுயிர் விடுப்பவர்போல் இடையிடையே கூவ,
அன்புநிலை யார் அறிவர் என்பன போல் மரங்கள்
அலர் மலர்க் கண்ணீரருவி அக முடைந்து தூவ; (8)

விந்தை நடப்பது தெரிக்க விளிப்பவரில் வாவல்
விரைந்தலைய மின்மினியும் விளக்கொடு பின்னோட;
இந்தவகை அந்தியை முன் ஏவி இர வென்னும்
இறைவியும் வந்திறுத்தனள் மற் றினைஞருயிர் வாட. (9)

பொறி யரவின் சுடிகை யுறு பொலன் மணியின் ஒளியும்,
பொலி மதத் திண் கறையடியின் புலை மருப்பின் ஒளியும்,
அறி வரிய சின வுழுவை அழல் விழியின் ஒளியும்,
அல தில்லை யவ் அடவியிடை அயல்காட்டும் ஒளியே. (10)

பிரிவரிய ஊசிவழி பின் தொடரும் நூல்போற்
பேரயர்வின் மனம் இறந்து பின்றொடரு மைந்தன்,
அரிய புதர் இடை யகற்றி அன்பொ டழைத் தேகும்
அம் முனிவன் அடியன்றி அயலொன்றும் அறியான்: (11)

ஒருங்கார நிறை முளரி யுழை யொதுக்கி நுழைந்தும்,
உயர் மலையின் குகை குதித்தும் ஓங்கார ஒலியே
தருங் கான நதி பலவுந் தாண்டி அவ ரடைந்தார்
சார்பிலர்க்குத் தனித்துணையாந் தவமுனிவன் இடமே. (12)

நேயமுடன் எவ்வழியும் நேர்ந்தவரைத் தன் நுண்
நிறுவு தலை வளைத் தழைக்கும் நெருப் பொன்றும் அன்றி
வாயிலெனப் பூட்டென்ன மதிலென்ன வழங்கும்
மனை யென்னும் பெயர்க்குரிய மரபொன்றும் இன்றி. (13)

நின்ற தனி யிடம் இவர்கள் நேர்ந்த வுடன் முனிவன்
நெருப் பின்னும் எழுப்புதற்கு நிமல விற கடுக்கி
ஒன்றியமெய்ப் பத்தரில் தன்னுளங் கூசி யொருசார்
ஒதுங்குகின்ற மைந்தன் அகமுவப்ப இவை யுரைக்கும்:— (14)

"இனி நடக்க வழியுமில்லை. இனித் துயரும் இல்லை.
இதுவே நம் இடம் மைந்த! இக்கனலின் அருகே
பனி பொழியும் வழி நடந்த பனிப் பகல இருந்து
பல மூல மிது புசிக்கிற் பறக்கும் உன திளைப்பே. (15)

தந்நாவில் ஒரு விரலைத் தாண்ட அறியாமற்
 சாகரமும் மலைபலவுந் தாண்டி அலைகின்றார்.
என்னே இம்மனிதர் மதி!" என நகைத்து முனிவன்
 இனிய கந்த முதல்அனந்த இனம் வகுத்தங் கிருந்தான். (16)

இருந்த முனி "வருந்தினவ! ஏதுனது கூச்சம்?
 இருவருமே யொருவ ரெனில் எவர் பெரியர் சிறியர்?
திருந்த அனல் அருகில் இனிச் செறிந்துறைதி மைந்த!
 சேர்ந்தார்க்குக் களிப்புதவும் சேரார்க்குப் பனிப்பே."(17)

என இரங்கி யிரண்டு முறை யியம்பியுந் தன் அருகே
 ஏகாமல் எதிரொன்றும் இசையாமல் தனியே
மனம் இறந்து புறம் ஒதுங்கி மறைந்து வறி திருந்த
 மகன் மலைவு தெளிந்து வெளி வரும்வகைகள் பகர்ந்தான். (18)

பகர்ந்த நய மொழி சிறிதும் புகுந்ததிலை செவியில்:
 பாதிமுக மதி யொருகைப் பதுமமலர் மறைப்பத்
திகழ்ந்த சுவர் ஓவியம்போல் இருந்தவனை நோக்கி
 சிந்தை நனி நொந்து முனி சிறிது கருதிநிவான். (19)

செந்தழலும் அந்தவெல்லை திகழ்ந்தடங்கி யோங்கி
 திகைக்க எலி பிடித்தலைக்குஞ் சிறு பூனையெனவே
விந்தையொடு நடம்புரிந்து வீங்கிருளை வாங்கி
 மீண்டுவர விடுத்தெடுத்து விழுங்கி விளங்கினதே. (20)

மொழி யாதும் புகலாது விழிமாரி பொழிய
 முகங் கவிழ வதிந்த குறி முனி நோக்கி வினவும்:—
"எழிலாரும் இளமையினில் இடையூறு ருதிகளால்
 இல்லம் அகன் றிவ்வுருவம் எடுத்திவண் வந்தனையோ? (21)

ஏதுனது கவலை? உளத் திருப்ப தெனக்கோதாய்
 இழந்தனையோ அரும்பொருளை? இகழ்ந்தனரோ நண்பர்?
காதல் கொள நீ விழைந்த மாது பெருஞ் சூதாய்க்
 கை விடுத்துக் கழன்றனளோ? மெய் விடுத்துக் கழறாய். (22)

ஐயோ இவ் வையகத்தில் அமைந்த சுகம் அனைத்தும்
 அழலால் இங்கெழுந் தடங்கு நிழலாக நினையாய்.
கையாரும் பொருள் என்னக் கருதி மனால் வகையைக்
 காப்பதெலாம் இலவு கிளி காத்தலினும் வறிதே. (23)

நண்பர் உறவினர்கள் நமை நாடி யுறவாடல்
  நறுநெயுறு குடத் தெறும்பு நண்ணல் என எண்ணாய்!
பெண்கள் அகக்காத லெலாம் பேசு முயற் கொம்பே!
  பெருங்கடம் இடிகலனே பிறங்கும் அவ ருடலம்!" (24)

எரியும் உளம் நொந் தடிகள் இசைத்த வசை யுட் கொண்டு
  ஏதிலன் நீள் கனவு விழித் தெழுந்தவன் போல் விழித்து
விரிவெயிலில் விளக்கொளியும் மின்னொளியிற் கண்ணும்
  வெளிப்பட்ட கள்வனும்போல் வெட்கி முகம்வெளுத்தான். (25)

இசைத்த வசைச் செயலுணர எண்ணி முகம் நோக்கி
  இருந்த யதி யிக்குறிகண் டிறும்பூதுள் ளெய்தி
விசைத்தியங்கும் எரி யெழுப்பி மீண்டும் அவன் நோக்க
  வேஷ ரகசியங்க ளெலாம் வெட்டவெளி யான. (26)

நின்மல விபூதியுள்ளே பொன்மய மெய் தோன்றி
  நீறுபடி நெருப்பெனவே நிலவி யொளி விரிக்கும்.
உண்மை திகழ் குருவிழிக்குள் உட்கூசி யொடுங்கும்
  உண்மைபெறு கண்ணிணையும் பெண்மை யுருத் தெரிக்கும். (27)

கூசு முகம் நாணமொடு கோணி யெழில் வீச
  குழற்பாரஞ் சரிந்து சடைக் கோலமஃ தொழிக்கும்.
வீசுலையின் மூக்கெனவே விம்மிய வெப் துயிர்ப்பு
  வீங்க வெழு கொங்கை புனைவேட முழுதழிக்கும். (28)

இவ்விதந் தன்மெய் விளங்க இருந்த மகள் எழுந்தே
  இருடிபதந் தலைவணங்கி யிம்மொழி யங் கியம்பும்:—
"தெய்வமொடு நீ வசிக்குந் திருக்கோயில் புகுந்த
  தீவினையேன் செய்த பிழை செமித்தருள்வை முனியே! (29)

மண்ணுலகிற் காவிரிப்பூ மாநகரிற் செல்வ
  வணிக குலதிலகமென வாழ்வள் ஒருமங்கை.
எண்ணரிய குணமுடையள். இவள்வயிற்றில் உதித்தோர்
  இருமகளிர் ஒருபுருட ரென்ன அவர் மூவர். (30)

ஒப்பரிய இப்புருடர்க் கோர்புதல்வர் உதித்தார்.
  ஒருத்தி மகள் யான் பாவி. ஒருத்தி முழு மலடி.
செப்பரிய அம் மலடி செல்வ மிக வுடையள்.
  செகமனைத்தும் அவள் படைத்த செல்வமென மொழிவர். (31)

உடல் பிரியா நிழல் போல ஒதிய அப்புதல்வர்
  உடன்கூடி விளையாடி யொன்றாக வளர்ந்தேன்.
அடல் பெரியர் : அருள் உருவர் : அலகில் வடிவுடையர்.
  அவருடைய திருநாமம் அறைவேனோ அடிகாள் !”— (32)

உரைத்த மொழி கேட்டிருடி யுடல் புளகம் மூடி
  ஊறி விழிநீர் வதனம் ஒழுக அஃதொளிக்க
எரிக்க விறகெடுப்பவன் போல் எழுந்து நடந்திருந்தான்.
  இளம்பிடியுந் தன் கதையை யெடுத்தனள் முன்தொடுத்தே.(33)

“மலடி சிறுதாய் படைத்த மதிப்பரிய செல்வம்
  மடமகளென் றெனக் களித்தாள். மயங்கி அதில் மகிழ்ந்து
தலைதடுமாறாச் சிறிய தமியனது நிலையுந்
  தலைவனெனுந் தன்மையையும் தகைமையையும் மறந்தேன். (34)

குறிப்பா யுள்ளுணர்த்தியும் யான் கொள்ளாது விடுத்தேன்.
  குறும்பு மதியால் எனது குடிமுழுதுங் கெடுத்தேன்.
வெறுப்பாக நினைந் தென்மேல் வேதனைப்பட் டவரும்
  வெறும் படி றென் னுள்ளமென விட்டு விலகினரே. (35)

பொருள் விரும்பிக் குலம் விரும்பிப் பொலம் விரும்பி வந்தோர்
  பொய்க்காதல் பேசினதோ புகலில் அளவில்லை.
அருள் அரும்பி யெனை விரும்பி யாளும் எனததிபர்
  அவரொழிய வேறிலை யென் றறிந்தும் அயர்ந்திருந்தேன். (36)

ஒருவாரம் ஒருமாதம் ஒருவருட காலம்
  ஓயாமல் உன்னி யழிந்தேன். உருவங் காணேன்.
திருவாருஞ் சேடியர்க்குச் செப்ப அவர் சேருந்
  திசை தேயம் எவர் அறிந்து தெரிப்பரெனச் சிரித்தார்.— (37)

ஆயத்தார் கூடி யெனை யாயவுந்தான் ஒட்டார்.
  அகல் வேலையோ எறியும் அகோ ராத்திரங் கெடுத்து.
தீயைத்தானே யுமிழுஞ் சிறந்த கலை மதியும்.
  திரிந்துலவுங் காலும் உயிர் தின்னும் நமனென்ன. (38)

கண்டவரைக் கேட்டவரைக் காசினியில் தேடிக்
  கண்டிடச் சென்றே அலைந்த கட்டம் எனைத்தென்கு!
உண்டெனத்தம் யூகநெறி யுரைப்பவரே யல்லால்
  உள்ளபடி கண்டறிந்தோர் ஒருவரையுங் காணேன். (39)

உண்டெனிலோ கண்டிடுவன்; இல்லையெனில் ஒல்லை,
உயிர் விடுதலே நலம் என்றுன்னி யுளந் தேறி
கண்டயிலும் இல்லிடந் தீ கதுவ வெளி யோடுங்
கணக்கா இவ் வேட மொடு கரந்து புறப்பட்டேன். (40)

தீர்த்த குல மூர்த்தி தலம் பார்த்துடலஞ் சலித்தேன்.
திருக்கறு பற் குருக்கள் மடந் திரிந்து மனம் அலுத்தேன்.
வார்த்தை கத்தும் வாதியர் தம் மன்றனைத்தும் வறிய.
மறுத்துறங்கும் யோகியர்போய் வாழ்குகையும் பாழே. (41)

மான்மறவாக் கலையினமே! வாழ்பிடி விட் டகலா
மதம்பெருகு மாகுலமே! வன்பிகமே! சுகமே!
நான் மறவா நாதனை யெஞ் ஞான்றும் அறிவீரோ?
நவில்விர் எனப் பின்தொடர்ந்து நாளனந்தங் கழித்தேன். (42)

இவ்விடமும் அவ்விடமும் எவ்விடமும் ஓடி
இதுவரையுந் தேடியும் என் அதிபரைக் கண்டிலனே.
எவ்விடம் யான் நண்ண இனி? எவ்விடம் யான் உண்ண?
இக்காயம் இனி யெனக்கு மிக்க அருவருப்பே. (43)

ஐயோ என்னுள்ள நிலை அறியாரோ இனியும்?
ஆசை கொண்டு நான் அலைந்த தத்தனையும் பொய்யோ?
பொய்யேதான் ஆயிடினும் புனிதர் அவர் தந்த
போதமலால் வேறெனக்கும் ஓதும் அறிவுளதோ? (44)

நல்லர் அருளுடையர் என நம்பி யிதுவரையும்
நான் உழைப்ப தறிவரெனில் என் எதிர் வந்திலரோ?
இல்லையெனில் என்னளவும் இவ்வுலகம் அனைத்தும்
எந்நலமுங் கொல்லவென எடுத்த சுடுகாடே. (45)

என்னுடைய உயிர்த்துணைவர் எண்ணரிய அருளில்
ஏதோ சிற்சாயை யுனதிடத் திருத்தல் கண்டு
மன்னுதவ மாமுனிவ! மனத்துயரம் உன்பால்
வகுத்தாறினேன் சிறிது. மறுசாக்ஷி யில்லை. (46)

இனி யிருந்து பெறும் பயனென்? இவ் அழலே கதி" யென்று
எரியும் அழ லெதிரே நின் றிசைத்த மொழிமுழுதும்
முனிசெவியிற் புகுமுனமே மூதுருவம் விளக்கி
முகமலர்ந்தங் கவனெதிரே மூர்த்தி மொழி குளறி— (47)

"சிவகாமி யான் உனது சிதம்பரனே" என்னச்
செப்புமுனம் இருவருமற் றோருருவம் ஆனார்!
எவர்தாமுன் அணைந்தனர் என் றிதுகாறும் அறியோம்.
இருவரும் ஒன்றாயினர் என்றே அறையுஞ் சுருதி. (48)

பரிந்துவந்து பார்வதியும் பாரதியுங் கஞ்சப்
பார்க்கவியும் யார்க்கிதுபோல் வாய்க்குமென வாழ்த்த,
அருந்ததியும் அம்ம! இஃதருங்கதி யென் றஞ்ச
ஆர்வம் உலகார்க வென ஆரணங்கள் ஆர்த்த. (49)

ஆழிபுடைசூ ழுலகம் யாவும் நலம் மேவ!
அறத்துறை புகுந்துயிர்கள் அன்புவெள்ளம் மூழ்க!
பாழில் அலைவேனுடைய பந்தனைகள் சிந்த
பரிந்தருள் சுரந்தமை நிரந்தரமும் வாழ்க!.   (50)

---

மனோ. வாணீ! மங்காய்! பாடிய பாட்டும்,
வீணையின் இசையும் விளங்கு நின் குரலும்
40. தேனினும் இனியவாய்ச் சேர்ந்து ஒருவழி படர்ந்து
ஊனையும் உயிரையும் உருக்கும். ஆ! ஆ!—
(இருவரும் சற்று மௌனமாயிருக்க.)
உனது காதலன் எங்கு உளனோ? உணர்வைகொல்?

வாணி. எனது சிந்தையி லிருந்தனர்: மாறூர்.

மனோ. ஆயினும் வெளியில்?

வாணி. அறியேன். அம்ம!

மனோ. 45. போயின இடம் நீ யறியாய்?

வாணி. நாரணன்
முனிவர் தம் மடத்து ஏகினர் தனியென
ஓதினன் ஓர் கால்.

மனோ. ஓகோ! ஓகோ!—
(மௌனம்)
கடை நாள் நிகழ்ந்தவை யென்னை? கழறாய்.

வாணி. அடியனேற்கு அந்நாள் கெடு நாள் மிகவும்!
50. ஒரு நாள் அந்தியில் இருவரும் எதிர்ச்சையாக்
கடி புரி கடந்து போய், நெடு வயற் பாயும்

ஒரு சிறு வாய்க்காற் கரை கண்டு ஆங்கே,
பெரு மலை பிறந்த சிறு காற் செல்வன்
தெண்ணீர்க் கன்னி பண்ணிய நிலா நிழற்
55. சிற்றில் பன் முறை சிதைப்பவன் போன்று
சிற்றலை யெழுப்பச் சிறுமி முறுமுறுத்து
அழுவது போல விழுமிய பரல் மேல்
ஒழுகும் தீம்புனல் ஓதையுங் கேட்டுப்
பழுதிலாப் பால் நிலா விழுவது நோக்கி
60. இருவரும் மௌனமாய் நெடும்பொழுது இருந்தோம்.
கரையிடை அலர்ந்த காவி யொன்று அடர்த்து என்
அருகே கொணர்ந்து எனக்கு அன்பா யீந்தனர்.
வருவது இங் கறியா மதியிலி அதனைக்
கண்ணிணை யொற்றிலன் ; உள் மணம் முகந்திலன் ;
65. மார்பொடு சேர்த்திலன் ; வார்குழற் சார்த்திலன் ;
ஆர்வமும் அன்பும் அறியார் மான
ஓடுந் தீம்புனல் மாடே விடுத்துச்
சிறுமியர் குறும்பு காட்டிச் சிரித்தேன்.
முறுவலோடு அவரும் ஏதோ மொழிய
70. உன்னு முன்னர் என் அன்னை யங்கு அடைந்தாள்.
தீ மொழி பலவுஞ் செப்பினள். யானோ ?
நா எழ லின்றி நின்றேன். நண்பர்
மறுமொழி யொன்றும் வழங்காது ஏகினர்.
அது முதல் இதுகாறு அவர் தமை ஐயோ !
75. கண்டிலேன். இனிமேற் காண்பனோ ? அறியேன்.
ஒரு முறை கண்டு என்னுளக் கருத்து அவருடன்
உரைத்த போதன்றி யொழியாது உயிரே !

மனோ. உரைப்ப தென் ? வாணீ ! உளமும் உளமும்
நேர்பட அறியா என்றோ நினைத்தாய் ?

வாணி. 80. ஓர்வழிப் படரின் உணரும் என்று உரைப்பர்.

மனோ. ஏன் அதில் ஐயம் ? எனக்கு அது துணிபே !
பூதப் பொருட்கே புலன் துணை யன்றிப்
போதப் பொருட்குப் போதும் போதம்.
இரவியை நோக்கற்கு ஏன் விளக்கு உதவி ?

85. கருவி நுண்மையைப் போற் காட்சியும் விளங்கும்.
பட்டே உணரு முட்டாளர்கள் போல்
தொட்டே உணருந் துவக்கு இந்திரியம்.
நுண்ணிய கருவியாங் கண்ணோ உணரும்
எண்ணறச் சேய்த்தாம் நுண்ணிய வொளியை!
90. கண்ணினும் எத்தனை நுண்ணியது உள்ளம்
களங்கம் அறுந் தொறும் விளங்கும் அங்கு எதுவும்.
உண்மையாய் நமது உளம் உருகில் அவ் வுருக்கம்
அண்மை சேய்மை யென்றிலை; சென்றிடும்.
எத்தனை பெட்டியுள் வைத்து நாம் பூட்டினும்
95. வானுள மின்னொளி 'வடக்கு நோக்கி' யைத்
தான் அசைத்து ஆட்டுந் தன்மை நீ கண்டிலை?
போதங் கரைந்து மேற் பொங்கிடும் அன்பைப்
பூத யாக்கையோ தடுத்திடும்? புகலாய்!

வாணி. கூடும் கூடும்! கூடும் அக் கொள்கை.
100. நம்பலாந் தகைத்தே!

மனோ. நம்புவதன்றி மற்று
என் செய நினைத்தாய்? இவ் அரும் பொருள்கள்
தருக்க வாதத்தால் தாபித் திடுவோர்
கரத்தாற் பூமணங் காண்பவரே யாம்!
அரும்பிற் பூமணம் ஆய்குதல் எய்ப்பத்
105. தரும் பக்குவ மிலார் தமதுளம் போய
வழியே வாளா மனக் கணக்கிட்டு
மொழிவார் முற்றுந் துணிவாய் என யான்
இச்சிறு தினத்தின் இயைந்தவை தம்மால்
நிச்சயித்து உணர்ந்தேன். வாணி! ஐயோ!
110. நம்பல் என்பதுவே அன்பின் நிலைமை!
தெளிந்தவை கொண்டு தெளிதற்கு அரியவை
உளந்தனில் நம்பி யுறுதியாய்ப் பிடித்துச்
சிறிது சிறிது தன் அறிவினை வளர்த்தே
அனுபவ வழியாய் அறிவதை அந்தோ!
115. 'அனுமான ஆதியால் ஆய்ந்து அறிந்திடுவோம்,
அலதெனில் இலையென அயிர்ப்போம்' எனத் திரி

வாதியர் அன்பு ஒருபோதுமே அறியார்.
தாய் முலைப்பாலுள் நஞ்சு ஆய்பவர் அவரே !
முற்றுங் களங்கம் அற்றிடில் ! ஆ ! ஆ !
(உடல் புளகாங்கிதமாய் நடுங்க)
120. ஏதோ வாணீ ! இப்படி யென்னுடல் ?—

வாணி. சீதமோ ? தாயே !

மனோ. சீ ! சீ ! இன்றெலாம்
இப்படி அடிக்கடி யென்னுடல் நடுங்கும் !

வாணி. இக் குளிர் காற்றினிடையே இருத்தல்
தக்கதன்று இனி. தாயே ! பாராய் !
125. அம்மழை பெய்யும் இம்மெனு முன்னம்.

மனோ. நனைந்திடில் என்னை ? கரைந்திடுமோ உடல் ?
(எழுந்து மேகம் பார்க்க)

வாணி. ஐயோ ! ஏன் நான் அத்திசை காட்டினேன் ?
(தனதுள்) பொய் எப்படி யான் புகல்வன் !

மனோ. வாணீ !
ஊர்ப்புறம் அத்தனை யொலி என் ? ஓ ! ஓ !
130. ஆர்ப்பு என் ? ஆ ! ஆ ! அயிர்ப்பு என் ? அறைகுதி.
போர்க்குறி போலும். புகலுதி யுண்மை.
(மழை இரைத்து பெய்ய)
அஞ்சலை. அஞ்சலை. இதோ என் நெஞ்சிடை
வெஞ்சரம் பாயினும் அஞ்சிலேன் ! விளம்பு.

வாணி. இம்மழை நிற்கலை அம்ம ! அறைகுவன்.—
135. விளம்புவன். வீட்டுள் வருக !
தெளிந்ததோர் சிந்தைத் தீர நற்றிருவே ! (க)
(இருவரும் போக)

மூன்றும் அங்கம் : மூன்றும் களம்

முற்றிற்று.

# மூன்றாம் அங்கம்.

## நான்காம் களம்.

---

இடம் : சுந்தரமுனிவர் ஆசிரமம்.

காலம் : வைகறை.

*நிஷ்டாபரர் கருணாகரர் இருவரும்*
*அளவளாவி இருக்க.*

(நேரிசை யாசிரியப்பா)

நிஷ்டாபரர்.

எது இஃது உமக்குமோ இத்தனை மயக்கம்!
வேத வேதாந்தம் ஓதி நீர் தெளிந்தும்
இரவெலாம் இப்படி யிமை யிமையாதே
பரிதபித்திருந்தீர்! கருணாகரரே!
5. பாரினிற் புதிதோ போரெனப் புகல்வது!
போரிலை யாயின் என்? யார் உறார் மரணம்!
எத்தினம் உலகில் எமன் வரா நற்றினம்?
இத்தினம் இறந்தோர் எத்தனை யென்பீர்?
ஒவ்வொரு தினமும் இவ்வனம் ஒன்றில்,
10. எறும்பு முதலா எண்ணிலா உயிர்கள்
உறுந் துயர் கணக்கிட்டு உரைப்போர் யாவர்?
சற்று இதோ மனங் கொடுத்து உற்று நீர் பாரும்.
குரூரக் கூற்றின் விரூபம் இச் சிலந்தி!
பல் குழி நிறைந்த பசை யறு தன் முகத்து
15. அல் குடியிருக்க, அருளிலாக் குண்டு கண்
தீ யெழத் திரித்துப் பேழ்வாய் திறந்து
கருக் கொளுஞ் சினை யீ வெருக் கொளக் கௌவி
விரித்து எண் திசையிலும் நிறுத்திய கரங்களின்
முன் னிரு கையில் வெந்துறக் கிடத்தி,
20. மார்பொடு வயிறுஞ் சோர்வுறக் கடித்துப்
பறித்திழுத்து இசித்துக் கறிக்க, மற்று அவ் ஈ
நொந்து நொந்து அந்தோ! சிந்தனை மயங்கி
எய்யாது ஐயோ! என்று அழு குரல் இங்கு
யார் கேட்கின்றார்? யார் காக்கின்றார்?

25. கை கால் மிகில் நம் மெய் வேறுமோ?
நோவும் சாவும் ஒன்றே. அன்றியும்
உலகெலாம் நோக்கில் நம் உடல் ஒரு பொருளோ?
பஞ்சா சத் கோடி யெனப் பலர் போற்ற
எஞ்சாதிருந்த இப் புவியனைத்தும்
30. இரவியின் மண்டலத்து ஒரு சிறு திவலை.
பரவிய வானிடை விரவிய மீனினம்
இரவியில் எத்தனை பெரியது ஒவ் வொன்றும்!
இரவியும் இம்மீ னினங்களுங் கூடில்
ஒரு பிரமாண்ட மென்று உரைப்பர். இதுபோல்
35. ஆயிரத்தெட்டு மற்று உண்டென அறைவர்.
ஆயிரத் தெட்டு எனல் அலகிலை யென்பதே.
இப் பெரு முலகெலாம் ஒப்பறு திருமால்
உந்தியந் தடாகத்து உதித்த பன் முளரியில்
வந்த தோர் நறு மலர் தந்த பல் இதழில்
40. ஓர் இதழதனில் ஓர் சார் உதித்த
நான்முகச் சிலந்தி நாற்றிய சிறுவலை.
என் மிக! நாம் இங்கு ஓதிய மாலும்
ஒரு பெருங்கடலில் உறு துரும்பு என்ப.
அப் பெருங்கடலும் மெய்ப் பொருட்கு எதிரில்
45. எப்படிப் பார்க்கினும் இசையாப் பேய்த்தேர்.
இங்கு இவை யுண்மையேல், எங்கு நாம் உள்ளோம்?
நீர் யார்? நான் யார்? ஊரெது? பேரெது?
பேரெனப் பொறுக்கலீர்! ஓ! ஓ! பாரும்!
மருவறு மாயா மகோததி யதனிற்
50. புற்புதம் அனைய பற்பல அண்டம்
வெடித்து அடங்கிடும் இங்கு அடிக்கடி. அதனைத்
தடுப்பவர் யாவர்? தாங்குநர் யாவர்?
விடுத்திடும். விடுத்திடும். வீண் இவ் விசனம்.
இந்திரஜாலம் இவ் எந்திர விசேடம்.
55. தன் தொழில் சலிப்பற இயற்றும். மற் றதனுட்
படுபவர் திரிகையுட் படு சிறு பயறே.
விடுபவர் யாவர் பின்! விம்மி விம்மி நீர்
அழுதீர், தொழுதீர், ஆடினீர், பாடினீர்,

யார் என் செய்வர்! யார் என் செயலாம்!
60. அடுத்திடில் உம்மையும் பிடிக்கும் இம் மாயை.
பிடித்திடிற் பின் நும் படிப்பும் ஞானமும்,
குருட்டரசனுக்குக் கொளுத்திய விளக்கும்
இருட்டறை யிருந்து கண் சிமிட்டலும் என்ன
ஆர்க்கும் இங்கு உமக்கும் பிறர்க்கும் என் பயக்கும்?
65. பார்க்கப் பார்க்க இப்படியே துயரம்
மீக்கொளும். அதனால் விடும் உல கெண்ணம்.
சுட்டதோர் சட்டி கை விட்டிடல் என்னத்
துறப்பது இவ் வுலகம் மறப்பதற்கு அன்றோ!
மறக்கிற் சுயமே மறையும். மறைய
70. இறக்கும் நம் உளம். இறக்கும் அக்கணமே
பிறக்கும் பிரத்தியக் பிரபோதோதயம்!
நீரும் உலகமும் நிகழ்த்திய போரும்
யாரும் அங்கில்லை. அகண்ட சித் கனமாய்
எதிரது கழிந்த பேரின்பமே திகழும்!
75. உரை புணர்வு இறந்த இந் நிருபாதிகம் யான்
உரைதரல், பிறவிக் குருடற்கு ஒருவன்
பால் நிறங் கொக்குப்போல் எனப் பகர்ந்த
கதையாய் முடியும்! அதனாற் சற்றே
பதைப்பாது இருந்து நீர் பாரும்
80. சுதமாம் இவ் அனுபூதியின் சுகமே. (க)

கருணாகரர். சுகம் யான் வேண்டிலேன் சுவாமி! எனக்கு மற்று
இகம்பரம் இரண்டும் இலையெனில் ஏருக.
யான் எனவொரு பொருள் உளதாம் அளவும்,
ஞான தயாநிதி நம் குரு நாதன்
85. ஈனனும் என்னையும் இழுத்து அடி சேர்த்த
வான நற் கருணையே வாழ்த்தி யிங்கு என்னால்
ஆனதோர் சிறுபணி யாற்றலே எனக்கு
மோன நற் சித்தியும் முத்தியும் யாவும்.
ஐயோ! உல கெலாம், பொய் யாயினும் என்?
90. பொய்யோ பாரும்! புரையறு குரவன்
பரிந்து நந்தமக்கே சுரந்த இக்கருணை?
இப் பெருந்தன்மை முன் இங்கு உடற்கு எது?

செப்பிய நிட்டையுஞ் சித்த நற் சுத்தியும்
எப்படி நீர் இங்கு எய்தினீர்? எல்லாம்
95. ஒப்பறு நுந்திறம் என்றோ உன்னினீர்?
அந்தோ! அந்தோ! அயர்ப்பு இது வியப்பே!
சுந்தரர் கடைக்கண் தந்திடு முன்னம்
பட்ட பாடு எங்ஙனம் மறந்தீர்? பதைப்பறு
நிட்டையாயினும் என்? நிமல வீடு ஆயின் என்?
100. ஆவா! யாம் முன் அல்லும் பகலும்
ஓவாப் பாவமே உஞற்றி யெப்போதும்
ஒரு சாண் வயிறே பெரிதாக் கருதியும்;
பிறர் புகழதுவே அறம் எனப் பேணியும்;
மகிழ்கினும் துயருழந்து அழுகினும் சினகரந்
105. தொழுகினும் நன்னெறி யொழுகினும் வழுவினும்
எத் தொழில் புரியினும் எத் திசை திரியினும்
"நாமே யுலகின் நடு நாயகம். நம்
க்ஷேமமே ஜகசிருஷ்டியின் ஓர் பெரும் பயன்"
என்ன இங்கு எண்ணி யெமக்கு எமக்கு என்னுந்
110. தந் நய மன்றிப் பின் நினை வின்றி,
முடி விலா ஆசைக் கடலிடைப் பட்டும்;
தடை சிறிது அடையிற் சகிப்பறு கோபத்
தீயிடைத் துடித்தும்; ஜயஞ் சிறிது அடையில்
வாய் மண் நிறைய மதக்குழி யதனுட்
115. குதித்துக் குதித்துக் குப்புற விழுந்தும்;
பிறர் புகழ் காணப் பெரிது அகம் உடைந்தும்;
பிறர் பழி காணப் பெரிது அக மகிழ்ந்தும்;
சிறியரைக் காணிற் செருக்கியும்; பெரியரைக்
காணிற் பொறாமையுட் கலங்கி நாணியும்;
120. எனைத்து என எண்ணுகேன்! நினைக்கினும் உடலம்
நடுங்குவது அந்தோ! நம்மை யிங்ஙனங்
கொடும் பேய் ஆயிரங் கூத்தாட்டிய வழி,
விடும் பரிசின்றி நாம் வேதனைப்படும் நாள்
"ஏ! ஏ! கெடுவாய்! இது வல உன் நெறி
125. வா வா இங்ஙனம்." என மனம் இரங்கிக்
கூவியது ஆர் கொல்? குடி கொண்டிருந்த

காம மாதி களுடன் கடும்போர் விளைக்க
ஏவியது ஆர் கொல்? இடைவிடாது அவைகள்
மேவிய காலை மெலிந்து கையறு நம்
130. ஆவியுள் தைரியம் அளித்தவர் யார் கொல்?
சுந்தரர் கருணையோ நந் திறமோ இவை ?
உளம் எனப் படுவதோ அளவிலாப் பெருவெளி :
கோட்டையும் இல்லை : பூட்டுதாழ் அதற் கிலை:
நஞ்சே யனைய பஞ்சேந்திரியம்,
135. அஞ்சோ வாயில் ? ஆயிரம் : ஆயிரம் :
அரை நொடி யதனுள் நர கென நம்முளம்
மாற்றிடக் கணந்தொறும் வருந் தீ நினைவோ
சாற்றிடக் கணித சங்கேதமே யிலை.
இப் பெரும் விபத்தில் எப்படிப் பிழைப்பீர் ?
140. அரு ளாதரவால் யாதோ இங்ஙனம்
இருள் தீர்ந்து இருந்தீர் : இலை யெனில் நிலை யெது ?
விட்டதும் தொட்டதும் வெளிப்பட லின்றி
நிட்டையும் நீருங் கெட்டு அலைந்திடுவீர் !
கட்டம் ! கட்டம் ! கரதலா மலகமாய்க்
145. கண்டுமோ அருளிற் கொண்டீர் ஐயம் !
"யார் கேட்கின்றார் ? யார் காக்கின்றார் ?"
என்றீர் நன்றாய். நண்பரே ! நம் நிலை
கண்டு உள மிரங்கிக் காத்து அருள் புரிந்து
தொண்டுகொண்டு ஆண்ட சுந்தரன் கருணை
150. நமக் கென வரித்தோ ? நானா வுயிர்கள்
எவர்க்கும் அது பொது அன்றோ ? இயம்பீர்.
எங்கு இலை அவனருள் ? எல்லையில் அண்டம்
தங்குவது அனைத்தும் அவன் அருட் சார்பில்.
அண்டகோடிகள் இங்கு ஒன்றோ டொன்று
155. விண்டிடாவண்ணம் வீக்கிய பாசம்,
அறியில் அருளலாற் பிறிதெது ஆகருஷணம் ?
ஒன்றோ டொன்று யாப்புற்று உய ரன்பில்
நின்ற இவ் வுலகம், நிகழ்த்திய கருணை
பயிற்றிடு பள்ளியே யன்றிப் பயன் அறக்
160. குயிற்றிய பொல்லாக் கொடிய யந்திரமோ ?

பாரும்! பாரும்! நீரே கூறிய
சிலந்தியின் பரிவே இலங்கிடு முறைமை!
பூரிய உயிர் இஃதாயினும், தனது
சிறிய வலையிற் சிக்குண்டு இறந்த
165. ஈயினை யீதோ இனிய தன் குஞ்சுகள்
ஆயிரம் அருந்த அருகிருந்து ஊட்டி
மிக்க நல் அன்பெனும் விரிந்த நூல் தெளிய
அக்கரம் பயில்வது அதிசயம்! அதிசயம்!
இப் படி முதற்படி. இது முதலா நம்
170. ஒப்பறும் யாக்கையாம் உயர்படி வரையுங்
கற்பது இங்கு இந் நூற் கருத்தே. அதனால்
இத் தனி யுலகில் எத்துயர் காணினும்
அத்தனை துயரும், நம் அழுக்கெலாம் எரித்துச்
சுத்த நற் சுவர்ணமாச் சோதித்து எடுக்க
175. வைத்த அக்கினியென மதித்தலே, உயிர்கட்கு
உத்தம பக்தி யென்று உள்ளுவர். ஒருகாற்
காரண காரியம் காண்குவம் அல்லேம்.
யார் இவை யனைத்தும் ஆய்ந்திட வல்லார்?
பாரிசா தாதிப் பனிமலர் அந்தியின்
180. அலர்தலே அன்னவை விளர் நிறங் கிளர
நறு மணங் கமழ்தற்கு உறு காரணம் என
நேற்றிரா நடேசர் சாற்றிடும் முன்னர்
நினைத்தோம் கொல்லோ? உரைத்தபின் மற்று அதன்
உசிதம் யார் உணரார்? நிசி யலர் மலர்க்கு
185. வெண்மையும் நன்மணம் உண்மையும் இலவேல்
எவ்வணம் அவற்றின் இஷ்ட நாயகராம்
ஈயினம் அறிந்து வந்து எய்திடும்? அங்ஙனம்
மேயிடில் அன்றோ காய்தருங் கருவாம்?
இவ்விதம் நோக்கிடில் எவ்வித தோற்றமுஞ்
190. செவ்விதிற் பற்பல காரணச் செறிவால்
அவ்வவற்றுள் நிறை யன்பே ஆக்கும்.
சிற்றறிவு ஆதலால் முற்றும் நாம் உணரோம்.
அந்தியில் இம்மலர் அலர்வது ஏன் என்பதிங்கு
அறிகிலே மாயினும் அதற்கும் ஓர் காரணம்

195. உளதென நம்பலே யூகம். அதனுல்
உலகிடைத் தோன்றும் உறுகணுக்கு எது
நலமுற நமக்கு இங்கு இலகாததினுற்
பலமுறை நம்மையே பரிந்து இழுத்து ஆண்டவர்
இலை யுலகிடை யென எண்ணுவது எங்ஙனம்?
200. யார் இங்கு உலகெலாம் அறிந்திட வல்லார்?
பாரும் இங்கு ஈதோ! பரம தயாநிதி
நம் குரு நாதன் என்பது ஆர் ஒவ்வார்?
நம்புவம் நீரும் நானும் இங்கு ஒருப்போல்.
ஆயினும் பாரும்! அம்மணி மனோன்மணி,
205. ஏதோ ஊழ்வினை யிசைவால் தனது
காதாற் கேட்கவும் கண்ணுற் காணவும்
இல்லா வொருவனை யெண்ணி மயங்கினள்.
அல்லல் இதுவே போதும். அஃதுடன்,
அப் புருடன் தான் ஆரென ஆயில்
210. ஒப்புறு புருஷோத்தமனே யென்ன
எப்படி நோக்கினும் இசையும். அப்படியே
செப்பினர் யாவுந் தெரிந்த நம் குருவும்.
ஏதோ ஒருவன் சூதா ஏவிய
தூதால் வந்ததே ஈதோ பெரும் போர்!
215. போர் புரிந்திடவரு புருஷோத்தமனும்
வார்குழல் மனோன்மணி மாதும், நோக்கில்
நம்மினும் எத்தனை நம்பிய அன்பர்!
இம் மென வொரு மொழி யிசைத்து இவர்தம்மை
ஒருவரை யொருவர் உணர்ந்திடப் பண்ணில்,
220. வெருவிய போரும் வினை துயர் அனைத்தும்
இருவர் தம் துக்கமும் எல்லாம் ஏகும்.
இப்படிச் சுலப சாத்தியமா யிருக்க
அப்படி யொன்றும் அடிகள் எண்ணுமற்
சுருங்கை தொட்டிடவே துவக்கித் தன்றிரு
225. அருங்கை வருந்தவும் ஆற்றும் அப் பணியே,
சுருங்கை யிதற்குஞ் சொல்லிய துயர்க்கும்
நெருங்கிய பந்தம் நினைத்தற்கு என்னே?
ஒன்றுந் தோற்றுவதன்று என் தனக்கே,

என்று நான் எண்ணி யெங் குரு நாதன்
230. திரு மொழி மறுத்து என் சிற்றறிவினையே
பெரிதெனக் கருதலோ, அலது அவர் பேணிய
இவ் வழி நம் மதிக்கு எட்டாவிடினுஞ்
செவ்விது இது வெனத் தெளிதலோ தகுதி ?
இப்படியே யாம் இவ் வுலகின் நிலை.
235. அற்பமும் அதி லிலை ஐயம். நமது மற்று
எய்ப்பினில் வைப்பா யிருந்த பேரருளைக்
கைப் படு கனி யெனக் கண்டபின், உலகில்
எப் பொருளையும் இப்படியே இவ் அருள்
தாங்கிடும் என்பதிற் சமுசயம் என்னை ?
240. இல்லா மாயை என்செய வல்லதாம் ?
எல்லாம் அவனருள் அல்லாது இல்லை.
என் அனுபவம் இது. மன்னிய இவ் அருள்
தன்னிடை மூழ்கித் தானெனல் மறந்து,
நெருப்பிடை இழுதென நெக்குநெக்கு உருகி
245. இருப்பவர் பிறர்க்கா யிராப்பகல் உழைப்பர்.
ஒரு பயன் கருதார். அருள் கருதுவது என் ?
அகிலமுந் தாங்கும் அருளில் ஓர் அங்கமாச்
சகலமுஞ் செய்வர். அஃது அவர் சமாதி.
எங்கெலாம் துக்கங் காணினும் அங்கெலாம்
250. அங்கங் கரைய நின்று அரற்றி "ஐயோ !
எம்மையுங் காத்த இன்னருள் இவரையும்
செம்மையிற் காக்க" என மொழி குளறி
அழுது வேண்டுவதே யன்றி
விழுமிய முத்தியும் வேண்டார் தமக்கே. (உ)

(சுந்தரமுனிவரும் நடராஜரும் வர : கருணாகரர், நிஷ்டாபரர் இருவரும் எழுந்து வணங்க)

சுந்தர. 255. எல்லாம் நடேசரே ! உமது பேரருளே !
அல்லாது என்றால் ஆகுமோ ? சுருங்கை
இத்தினம் எப்படி முடியும் நீர் இலரேல் ?
எத்தனை கருணை ? என்னை கைம்மாறு ?

நட. நல்லது ! நல்லது ! சொல்லிய முகமன் !

260. வேலை யெனதோ ? உமதோ ? விநோதம் !
ஏவிய வழி யான் போவதே யல்லால்
ஆவ தென், என்னால் ? ஆ ! ஆ ! நன்றே !

சுந்தர. கருணாகரரே ! களைப்பற நீர் இங்கு
ஒருவாறு உறங்க என்று உன்னி யன்றோ
265. இவ்விடம் அனுப்பினோம் ? என்னை சிறிதுஞ்
செவ்வியில் தூங்காது இருந்தீர் ! சிச்சீ !
எத்தனை நாளாயின நீர் தூங்கி !
இத்தனை வருந்தியும் என் இலை தூக்கம் ?
பன்னாள் இரவும் பகலும் உழைத்தீர்.
270. எந்நாள் ஆறுவீர் இவ் அலுப்பு இனிமேல் ?

கருணா. அடியேற்கு அலுப்பு என் ? அருளால் அனைத்தும்
முடிவது. மேலும், யான் வரும் வேளை
இட்டமாம் நிஷ்டாபரருந் தனியாய்
நிட்டை விட்டு எழுந்தார். இருவரும் அதனால்
275. ஏதோ சில மொழி யோதி மற்று இருந்தோம்.
ஈதோ உதயமும் ஆனதே. இனி யென் ?

சுந்தர. விடிந்த தன்றிது; வெள்ளியின் உதயம்.
படும். படும். மிகவும் பட்டீர் வருத்தம்.
உங்கள் பேச்சு அறிவோம். ஓயாப் பேச்சே !
280. இங்கு அது முடியுமோ ? ஏன் உங்கட்கும்
சமயிகட்கு ஆம் சச்சரவு ?
அமையும் உங்கட்கு அவரவர் நிலையே. (௩)

(யாவரும் போக)

மூன்றாம் அங்கம் : நான்காம் களம்

முற்றிற்று.

கலித்துறை.

சாற்றரும் ஆபதந் தான் தவிர்த்து இன்பந் தர முயன்று
தோற்றருங் கற்படை யேதோ அமைத்தனன் சுந்தரனே.
வேற்றுருவாய் அகம் வேதித்து நம்மை விளக்கும் அவன்
மாற்றம் அனுபவம் வந்தபின் அன்றி மதிப்பரிதே.

மூன்றும் அங்கம் முற்றிற்று.

| | | |
|---|---|---|
| ஆசிரியப்பா | 6-க்கு அடி | 819 |
| வஞ்சித்தாழிசை | 3-க்கு ,, | 12 |
| குறள்வெண்செந்துறை | 50-க்கு ,, | 100 |
| கலித்துறை | 1-க்கு ,, | 4 |
| ஆக அங்கம்-1-க்கு : | பா-60-க்கு ,, | 935 |



# நான்காம் அங்கம்.

## முதற் களம்.

இடம் : படை பயில் களம்.

காலம் : காலை.

பலதேவன் படையணிவகுக்க : குடிலன் அரசனை எதிர்பார்த்து ஒருபுறம் நிற்க.

(நேரிசை யாசிரியப்பா.)

**குடிலன்.**
**(தனிமொழி)**

பருதியும் எழுந்தது : பொருதலும் வந்தது—
(பெருமூச்செறிந்து)
கருதுதற்கு என்னுள? காணுதும். ஆ! ஆ!
ஒருவனது ஆசைப் பெருக்கால் உலகில்
வருதுயர் கடலிற் பெரிதே! வானின்
5. எழுந்த இவ் இரவி விழுந்திடு முன்னர்
ஈண்டு அணி வகுக்கும் இக் காண்டகும் இளைஞரில்
மாண்டிடுமவர் தொகை மதிப்பார் யாரே!
மாண்டிடல் அன்றே வலிது. மடுவுள்
இட்ட கல்லால் எழும் வட்டமாம் விரிதிரை
10. வரவரப் பெரிதாய்க் கரைவரை வரல் போல்,
நின்ற இவ் வீரரை யொன்றிய மனைவியர்
உற்றார் பெற்றார் நட்டார் என்று இப்
படியே பரவுமே படியெலாந் துயரம் !— (சற்று நிற்க)
என்னை யென்மதி யிங்ஙனம் அடிக்கடி
15. என்னையும் எடுத்தெறிந்து ஏகுதல்? சிச்சீ!
மன்னவர்க் காக மாள்வது இவர் கடன்.
மன்னவன் என்போன் மதியில் வலியோன்.
அன்றியும் பல நாளாக நம் அன்னம்
தின்று இங்கு இருந்து இவர் செய்ததென்? அவர்தம்
20. உடன்பாடு இதுவே. கடம்பாடு ஆற்றுங்
காலம் விடுவதார்? மேலும் இயல்பாப்
பலபெயர் துக்கப் பட்டால் அன்றி
உலகில் எவரே யொருசுகம் அணைவார்?

இயல்பு இதுவாயின் இரங்கல் என் பயன் ?
25. வயலுழும் உழவோர் வருத்தமும் குனிந்திருந்து
ஆடை நெய்வோர் பீடையும் வாகனந்
தாங்குவோர் தமக்குள தீங்கும் நோக்கி
உலகிடை வாழாது ஓடுவரோ பிறர் ?
அலகிலா மானிடர் யாவரும் அவரவர்
30. நலமே யாண்டும் நாடுவர். மதிவலோர்
களத்தொடு காலமுங் கண்டு மீன் உண்ணக்
குளக்கரை யிருக்குங் கொக்கென அடங்கிச்
சம்பவம் சங்கதி யென்பவை நோக்கி
இருப்பர் : நலம்வரிற் பொருக் கெனக் கொள்வர்.
35. நண்ணார் இதுபோல் நலமிலா ஐயம்.
எண்ணார் துணிந்தபின்; பண்ணார் தாமதம்.
ஏழைய ரல்லரோ இரங்குவர் இங்ஙனம் ?
கோழையர் ! எங்ஙனங் கூடுவார் இன்பம் ?
வந்தனன் அஃதோ மன்னனும்.—

(ஜீவகன் வர.)

40. வந்தனம் வந்தனம் உன்திரு வடிக்கே. (க)

(நிலைமண்டில ஆசிரியப்பா.)

ஜீவக. குடிலா ! நமது குறைவிலாப் படைகள்
அடையவும் அணி வகுத் தானவோ ?

குடில. அடியேன்.
நாரணர்க்கு அன்றோ நீள் அரண் காப்பு ?
சொன்னது அப்படி யென வுன்னினன்.

ஜீவக. ஆமாம் !
45. அதற்கு என் ஐயம் ?

குடில. அவர்க்கு அது முற்றும்
இதக்கேடு என்றனர். ஆயினும் போயினர்.

(படைகள் வணங்கி.)

படைகள். ஜய ஜய ! ஜீவக வேந்த ! விஜயே !

குடில. அதிர்கழல் வீரரும் அரசரும் ஈதோ
எதிர்பார்த் திருந்தனர் இறைவ ! நின் வரவே.
50. நாற் றிசை தோறும் பாற்றினஞ் சுழல

நிணப் புலால் நாறிப் பணைத்து ஒளி பரப்பும்
நெய்வழி பருதி வைவேல் ஏந்திக்
கூற்றின் நாவென்னக் குருதி கொப்புளித்து
மாற்றலர்ப் பருகியும் ஆற்றாது அலையும்
55. உறையுறு குறுவாள் ஒரு புறம் அசைத்துக்
காற்றினும் மிகவுங் கடுகிக் கூற்றின்
பல்லினுங் கூரிய பகழி மல்கிய
தூணி தோளில் தூக்கி, நாண் நின்று
எழு மொலி யுருமு போன்று எழுப்பி யார்த்தவர்
60. கடிபுரி காக்கும் நின் காற்படையாளர்.
இருப்புக் கலினம் நெரித்துச் சுவைத்துக்
கருத்தும் விரைவு கற்குங் குரத்தாற்
பொடி யெழப் புடைக்கும் புரவிகள், போர்க்கு
விடை கேட்டு உதடு துடித்தலும் வியப்பே.
65. நிணங் கமழ் கூன்பிறைத் துணை மருப்பு அசைத்து
மம்மர் வண்டினம் அரற்ற மும்மதம்
பொழியும் வாரணப் புயலினம், தத்தம்
நிழலொடு கறுவி நிற்பதும் அழகே.
முன்னொரு வழுதிக்கு வெந்நிட்டு ஓடிய
70. புரந்தரன் கைப்படாப் பொருப்புகள் போன்ற
கொடிஞ்சி நெடுந்தேர் இருஞ்சிறை விரித்து
"வம்மின் ! வம்மின் ! வீரரே ! நாம் இனி
இம்மெனு முன்னம் அவ் இந்திர லோகமுஞ்
செல்லுவம் ! ஏறுமின் ! வெல்லுவம்" எனப்பல
75. கொடிக்கரங் காட்டி யழைப்பதுங் காண்டி.—

ஜீவக. கண்டோம். கண்டோம். களித்தோம் மிகவும்.
உண்டோ இவர்க்கெதிர் ? உனக்கெதிர் ஓ ! ஓ !

(படைகளை நோக்கி.)

வேற்படைத் தலைவரே ! நாற் படையாளரே !
கேட்பீர் ஒரு சொல் ! கிளர் போர்க்கோலம்
80. நோக்கி யாம் மகிழ்ந்தோம். நமது பாக்கியமே
பாக்கியம். ஆ ! ஆ ! யார்க்கு இது வாய்க்கும் ?
யாக்கையின் அரும் பயன் வாய்த்தது இங்குமக்கே !
தாயினுஞ் சிறந்த தயை பூண்டிருந்த நம்

தேயமாந் தேவிக்குத் தீவினை யிழைக்கத் [தொறும்
85. துணிந்த இவ் வஞ்சரை யெண்ணுந்தொறும் எண்ணுந்
அகந்தனில் அடக்கியும் அடங்காது எழுந்து,
புகைந்து உயிர்ப்பு எறியப் பொறி கண் பொரிய
நெடுந் திரள் புருவம் கொடுந் தொழில் குறிப்ப
வளங்கெழு மீசையுங் கிளர்ந்தெழுந்து ஆடக்
90. களங்கமில் நும்முகங் காட்டும் இச் சினத் தீ
கண்டு அப் பாண்டியே கொண்டனள் உவகை.
அலை யெறிந்து ஈதோ ஆர்த்தனள். கேண்மின்!
முலை சுரந்து ஊட்டிய முதுநதி மாதா!

படைகள். தாம்பிரபன்னிக்கு ஜே! ஜே!

ஜீவக. ஒரு துளியேனும் நீர் உண்டுளீ ராயின்
95. கருதுவீர் தாம்பிர பன்னியின் கட்டுரை.
"மக்காள்! அருந்தி வளர்மின்! நுமக்கு
மிக்கோ ரில்லா வீரமாய்ப் பரந்து
முது சுதந்தரத்தின் முத்திரையாகி,
இது பரிணமித்து உம் இதயத்து உறைக!
100. அன்னியன் கைப்படா இந் நீர் கற்பிற்கு
இழிவுறின் மார்பினின்று இதுவே சோரியாய்ப்
பொழிக நீர் பொன்றிடும் அளவும்!" என்றன்றோ
வாழ்த்தி நுந்தமை வளர்த்தினள் - அவளுரை
தாழ்த்தாது இவண் நீர் போர்த்த போர்க் கோலம்
105. பார்த்தால் ஆர்த்துஅவள் வாழ்த்தாதுஎன்செய்வள்!

படைகள். ஜே! ஜே!

ஜீவக. விந்தம் அடக்கினோன் தந்த நற்றமிழ் மொழி
தற் சுதந்தரம் அறும் அற்பர் வாய்ப் படுமோ?

படைகள். தமிழ்மொழிக்கு ஜே! ஜே!

ஜீவக. பழையோர் பெருமையும் கிழமையும் கீர்த்தியும்
மன்னிய அன்பின் நும் அன்னையர் பாடி
110. நித்திரை வரும்வகை யொத்தறுத்து உமது
தொட்டில் தாலாட்ட, அவ் இட்டமாம் முன்னோர்
தீரமும் செய்கையும் வீரமும் பரிவும்
எண்ணி யிருகணுங் கண்ணீர் நிறையக்

கண் துயிலாது நீர் கனிவுடன் கேட்ட
115. வண் தமிழ் மொழியால் மறித்து இக்காலம்
" ஆற்றிலம்; ஆண்மையும் உரிமையும் ஒருங்கே
தோற்றனம் " எனச்சொலத் துணிபவர் யாவர் !

படைகள். சிச்சீ !

ஜீவக. பொதியு மாமலையிற் புறப்பட்டு இங்கு தன்
படியே உலாவும் இச் சிறுகால், பணிந்து மற்று
120. " அடியேம் " எனத் திரிபவர்க்கோ உயிர்ப்பு !

படைகள். ஹோ ! ஹோ !

ஜீவக. கோட்டமில் உயிர்ப்போ கூறீர், அன்ன
நாட்டு அபிமானமில் நடைப்பிண மூச்சும் ?

படைகள். சிச்சீ ! சிச்சீ !

ஜீவக. சேனையோடு இவ்வழி திரிந்து நேற்று இரவில் நும்
திருவனையார்களுஞ் சேய்களுங் கொண்ட
125. வெருவரு நித்திரைக்கு உறுகண் விளைத்து, நும்
பாஷாபிமானமும், தேசாபிமானமும்
பொருளெனக் கருதாது அருள் நிறை நுமது
தாய் முலைப்பாலுடன் வாய்மடுத்து உண்ட நல்
ஆண்மையும் சுதந்தரக் கேண்மையும் ஒருங்கே
130. நிந்தை வஞ்சியர் செய வந்த நும் கோபம்
முற்றும் இயல்பே. மற்று தன் குகையுள்
உற்று அரி முகமயிர் பற்றிடின் அதற்கு அக்
குறும்பால் எழுஞ்சினம் இறும்பூது அன்றே !
உரிமைமேல் ஆண்மை பாராட்டார் சாந்தம்,
135. பெருமையில் பிணத்திற் பிறந்ததோர் சீதம்.
அந்தணர் வளர்க்குஞ் செந்தழல் தன்னினும்
நாட்டு அபிமானம் உள் மூட்டிய சினத் தீ
அன்றோ வானோர்க்கு என்றுமே உவப்பு !
வந்த இக் கயவர் நும் சிந்தையிற் கொளுத்திய
140. வெந்தழற்கு அவரே இந்தனம் ஆகுக !

படைகள். ஆகுக ! ஆகுக !

ஜீவக. இன்று நீர் சிந்தும் இரத்தம் ஓர் துளியும்,
நின்று உகம் பலவும் நிகழ்த்துமே " இந்தப்

பாண்டியர் உரிமை பாராட்டும் பண்பினர்;
தீண்டன்மின் திருந்தலீர்! அவர்தஞ் செருக்கு.
145. சுதந்தரம் அவர்க்கு உயிர் : சுவாசம் மற் றன்று.
நினையுமின் நன்ருய்க் கனவினும் இதனை."—
என முரசு அறையுமே யெத்திசையார்க்கும்.
இத் தனிப் போரில் நீர் ஏற்றிடுங் காயம்
சித்தங் களித்து, ஜயமாது உமக்கு
150. முத்தமிட்டு அளித்த முத்திரை யாகி
எத்தனை தலைமுறைக்கு இலக்காய் நிற்கும்!

படைகள். ஜே! ஜே!

ஜீவக. போர்க் குறிக் காயமே புகழின் காயம்.
யார்க்கு அது வாய்க்கும்! ஆ! ஆ! நோக்குமின்!
அனந்தந் தலைமுறை வருந் தனி மாக்கள்,
155. தினந் தினம் தாம் அனுபவிக்குஞ் சுதந்தரம்
தந்த தம் முன்னோர் நொந்தபுண் எண்ணிச்
சிந்தை யன்பு உருகிச் சிந்துவர் கண்ணீர்,
என்ருல் அப் புண் 'இறந்து கோட்டக்கது'
அன்ரே? அறைவீர். ஐயோ! அதுவும்
160. புண்ணே? புகழின் கண்ணே. எவரே
புண்படாது உலகிற் புகழுடம்பு அடைந்தார்?
புகழுடம்பு அன்றி இவ இகழுடம்போ மெய்?
கணங் கணம் தோன்றிக் கணங் கணம் மறையும்
பிணம் பல. இவரெலாம் பிறந்தார் என்பவோ!
165. உதும்பர தருவில் ஒரு கனி யதனுள்
பிறந்து இறு மசகம் இவரினுங் கோடி.
பிறந்தார் என்போர் புகழுடன் பிறந்தோர்.
அப் பெரும் புகழுடம்பு இப்படி இன்று இதோ!
சுலபமாய் நுமக்கெதிர் அணுகலால், துதித்துப்
170. பலமுறை நுமது பாக்கியம் வியந்தோம்.
ஒழுக்கம் மற் றன்று அது வெனினும், உம்மேல்
அழுக்காறும் சிறிது அடைந்தோம். நும்மோடு
இத்தினம் அடையும் இணையிலாப் பெரும்புகழ்
எத்தனை யாயிரம் ஆயிரங் கூறிட்டு

175. ஒத்த தோர் பங்கே யுறும் எனக்கு எனவே
ஓடும் ஓர் நினைவு இங் கதனால், வீரர்காள்!
நீடுபோர் குறித்து இவண் நின்றோர் தம்முள்
யாரே யாயினுஞ் சீராந் தங்கள்
உயி ருடம்பு ஆதிகட்கு உறும் அயர்வு உன்னிச்
180. சஞ்சலம் எய்துவோர் உண்டெனிற் சாற்றுமின்.
வஞ்சகமில்லை. என் வார்த்தை யீது உண்மை.
மானமோடு அவரை யிம் மாநகரதனுள்
சேமமா யின்று இருத்திடுவம். திண்ணம்.
உத்தம மாதர்கள் உண்டு மற்று ஆங்கே
185. எத்தனையோ பேர். இவர்க்கு அவர் துணையாம்.

படைகள். இல்லை! இல்லை யிங்கு அத்தகைப் புல்லியர்!

ஜீவக. குறைவு எனக் கருதன்மின். எம் புகழ்க் கூறு
சிறிதாம் என உனிச் செப்பினேம். அதனாற்
பிறிது நீர் நினையீர். பேசுமின் உண்மை.

படைத்தலைவர் 190 இல்லை யெம் இறைவ! இந்நாடதனுள்
இல்லை அத்தகையர்.

யாவரும். இலை யிலை! இலையே!

ஜீவக. நல்லது அப்படியேல், நாமே நம் சுய
நாட்டின் நல் லுரிமை பாராட்டும் பெரிய
மேன்மையும் அதனால் விளை புகழதுவும்
195. மறுக்கிலம். பொறுக்குமின். வம்மின்! விஜய
இலக்குமி காத்திருக்கின்றாள்! அன்றியும்
ஒலிக்கும் நம் ஜயபேரிகை கேட்டலது மற்று
ஓய்கிலள் நோன்பு நம் தாய் மனோன்மணியே. (உ)

படைவீரர். மனோன்மணிக்கு ஜே! ஜே! ஜே!

யாவரும். இளவரசிக்கு ஜே! ஜே! ஜே!

(குறளடி வஞ்சிப்பா.)

ஜீவக. நம் தாய் தமர் நம் காதலர்
நம் சேய் பிறர் நந்தா வுறை
நம் தேயமேல் வந்தே நனி
நொந்தாழ் துயர் தந்தே இவண்

நிந்தா நெறி நின்றா ரிவர்
தந்தா வலி சிந்தா விழ,
அடிப்போம் அடல் கெடுப்போம் முகத்
திடிப்போம் குடல் எடுப்போம் இடுப்
பொடிப்போம் சிர முடைப்போம் பொடி
பொடிப்போம் வசை துடைப்போம் உயிர்
குடிப்போம் வழி தடுப்போம் பழி
முடிப்போம் இனி நடப்போம் நொடி,
என வாங்கு,
பெருமுர சதிரப் பெயருமின்
கருமுகி லீர்த்தெழும் உருமென ஆர்த்தே.

(படைகள் முரசடித்து நடக்க, படைப்பாணர் பாட.)

படைப்பாணர். (கலித் தாழிசை.)

தந்கரமே காக்கச் சமைந்தெழுவோர் ஊருமிந்தச்
சின்ன மதிசயிக்கு மெமன் செருக்கொழிமின் தெவ்வீர்காள்!
சின்னமதி! சயிக்கு மெம்மன் எனச்செருக்கி நிற்பீரேல், [துளோமே.
இன்னுணவிங் குமக்கினிமே லெண்ணீரே யெண்ணீரே யிசைத் (1)

படைகள். ஜே! ஜே!

பாணர்.

மறுகுறுதம் ஊர்காக்கும் வயவர் புயமே விஜயை
உறைவிட்மா இவர்வாளென் றோடிடுமின் தெவ்வீர்காள்!
உறைவிடமா? இவர் வாளென் றோடிடீ ராயின் இனி
மறவிதிசை யொருபோதும் மறவீரே மறவீரே வழங்கினோமே. (2)

படைகள். ஜே! ஜே!

பாணர்.

ஒல்லுமனே தான்காக்க வுருவிய கை வாளதற்குச்
செல்லுமுறை பின்னரிலை திரும்பிடுமின் தெவ்வீர்காள்!
செல்லுமுறை பின்னரிலை யெனத்திரும்பீ ராயின் நுங்கள்
இல்லவர்க்கு மங்கலநாண் இற்றதுவே யிற்றதுவே யியம்பினோமே(3)

படைகள். ஜே! ஜே!

(படைகளும் ஜீவகன் முதலியோரும் போர்க்களம் நோக்கிப் போக.)

நான்காம் அங்கம்: முதற் களம் முற்றிற்று.

# நான்காம் அங்கம்.

## இரண்டாங் களம்.

---

இடம்: கோட்டைவாசல்.
காலம்: காலை.
நடர்: கோட்டைகாக்கும் படைஞர்.

(நேரிசை யாசிரியப்பா)

முதற்படைஞன். இப்படை தோற்கின் எப்படை ஜயிக்கும்?
எப்படி யிருந்தது இராஜன் பேச்சு!
கல்லும் உருகிக் கண்ணீர் விடும். இப்
புல்லும் கேட்கிற் புறப்படும் போர்க்கு.

உ-ம் படை. 5. முற்றும் கேட்டைகொல்?

முதற்படை. முற்றும் கேட்டேன்.
சற்றும் மன மிலை திரும்புதற்கு எனக்கு.
சரியல ஆணையில் தவறுதல் என்றே,
வெருவி நான் மீண்டேன். இலையேல் உடன்சென்று
ஒரு கை பார்ப்பேன். ஓகோ! சும்மா
10. விடுவேனே? பார்க்கலாம் விளையாட்டு அப்போது.
என் செய! என் செய! எத்தனை பேரை யான்
பஞ்சாய்ப் பறத்துவன்! துரத்துவன்! பாண்டியில்
வஞ்ச இவ் வஞ்சியர் என் செய வந்தார்?
நெஞ்சகம் பிளந்து இந் நெடுவாள் தனக்கு
15. கொஞ்சமோ ஊட்டுவன் குருதி! என்செய!
நினைதொறும் உடலெலாந் தின்பது தினவே!
பாக்கியமில்லை யென் கைக்கும் வாட்கும்!

உ-ம் படை. பாக்கிய மன்று அது. பறைப்பயல் பாவி
குடிலனோடு உலாவுங் கோணவாய்க் கொடியன்,
20. சடையன், தலைவனோடு எதுவோ சாற்றித்
தடுத்தே நமையெலாம் விடுத்தான் இப்பால்.

ங-ம் படை. கெடுத்தான் அவனே யென்னையும். அன்றேல்

முடித்தே விடுவேன் என் சபதம் முற்றும்.
சண்டி அச் சங்கரன் வந்துளான் சமர்க்கு.
25. கண்டேன். கையிற் கிடைக்கிற் பண்டு என்
தாயையும் என்னையும் சந்தையிற் பழித்த
வாயினை வகிர்ந்து மார்பினைப் பிளந்து—

(வாய்மடித்துப் பற் கடிக்க)

ச-ம் படை. வஞ்சியர் அனைவரும் மானமில் மாக்கள்.
பிஞ்சிற் பழுத்த பேச்சினர். யான் எலாம்
30. நன்றாய் அறிவன். ஒன்றார் என்னுடன்.
சென்றுளேன் ஜனார்த்தனம். கண்டுளேன் வைக்கம்.

ரு-ம் படை. விடுவேன் அல்லேன். அடுபோர் முடியினும்
நடு நிசியாயினும் அடுகளமுழுதுந்
தேடுவன்: சங்கரன் செத்தானாயினும்
35. நாடி அவன்தலை நசுக்கி மிதித்து
வாயிடை நெடுவேல் இறக்கி—

முதற்படை. சீ! சீ!
சேவகனா நீ? செப்பியது என்னை!
யாவரே பிணத்தோடு ஆண்மை பாராட்டுவர்?
பிணமோ பிணத்தோடு எதிர்க்க!

ரு-ம் படை. போ! போ!
40. பெருமை நீ பேசேல். பெற்ற உன்தாயேல்
அருமை நீ யறிகுவை.

முதற்படை. யாராயினும் என்?
பிணத்தொடு பிணக்கு எது ? சீ! சீ! அன்றியும்
ஒருவன் தனக்கா உண்டாங் குரோதம்
கருதி இங்கு எவன் வாள் உருவினன். நமக்கெலாம்
45. மாதா இவ்வயின் மகா நாடு இதுவே.
ஏதோ அவளையும் நம்மையும் இகழ்ந்து இவ்
வஞ்சியர் வஞ்சமாய் வந்தனர். அதனால்
நெஞ்சகங் கொதித்து நெடிய நம் சுதந்தரந்
தனக்கா உயிரையும் உவப்போடு அளிக்கத்
50. துணிந்தே நம்மையும் மறந்தே நின்றோம்,
என்னில் அவரவர் இழுக்கு ஆர் கருதுவர் ?

உன்னுதி நன்றாய் ஒருவன் தனக்கா
வந்தபோர் அன்று; இஃது ஊர்ப்போர். அதனால்
இதோ அங்கு எய்தினோர் யாரே யாயினும்
55. சுதேசானுராகத் தொடர்பால் அன்றிப்
பலவாந் தமது பழம்பழி மீட்போர்
கொலைபாதகஞ் செயுங் கொடுமையரே யாம்.

(நாராயணன் படைக்கோலமாகிக் குதிரையின்மேல்வர.)

உ-ம் படை. பாரும்! பாரும்! நாராயணர் இதோ—

நாரா. உன் பெயர் முருகன் அன்றோ ?

முதற்படை. அடியேன்.

ச-ம் படை. 60. என் பெயர் சாத்தன், சுவாமி !

நாரா. ஓகோ!
எத்தனை பேருளர் இவ் வாயிலின் கண்?

முதற்படை. பத்தைஞ் ஞாறு உளர். மெத்தவும் உத்தமர்.
மிகு திறத்தார். போர் விரும்பினர். இவர்தம்
தகுதிக்கு ஏற்பதன்று இக் காவல்.

நாரா. 65. பொறு! பொறு! முருகா! புரையற்றோர்க்கு மற்று
உறு பணி, இன்னதென்று உண்டோ? எதிலும்
சிறுமையும் பெருமையும், செய்பவர்க்கு அன்றிச்
செய் வினை தனக்கு எது? மெய்ம்மையில், யாவுந்
திருத்தமாச் செய்தலே பொருத்தம் உத்தமர்க்கு.

உ-ம்படை. 70. வேணும் என்றாயினும் எங்களை விடுத்தல்
நாணமும் நோவுமாம் நாராயணரே!

நாரா. வேண்டுமென்று ஆரே விடுப்பர். சிச்சீ!
அப்படியேதான் ஆயினும் நமக்குக்
கைப்படு கடமையே கடமை,
முருகா!
75. எத்தனை பேரால் ஏலும் இக் காவல் ?

முதற்படை. நாலில் ஒன்றாயின் சாலவும் மிகுதி.

நாரா. அத்தனை வல்லவர் கொல்லோ? ஆயின்
இத்தனை பேர்க்கு உள தொழிலெலாந் தம்மேல்
ஏற்றிட வல்லவ மாற்றி நீ நிறுத்திக்

80. காட்டுதி யெனக்கு.

முதற்படை. காட்டுவன் ஈதோ!

(அணிவகுத்துக்காட்ட)

நாரா. (தனதுள்) நல்லன் இத் தலைவன். வல்லவர் இவரும்.

முதற்படை. ஈதோ நின்றனர்!

(காவற்படைகளை விலக்கி நிறுத்திக்காட்டி)

நாரா. போதுமோ இவர்கள்?

முதற்படை. போதும்! போதும்!

காவற்படைகள். போதுமே யாங்கள்—

நாரா. எண்ணுமின் நன்றாய் ஏற்குமுன்! பின்பு நீர்

85. பண்ணுந் தவறு நம் பாலாய் முடியும்.

காவற்படை. தவிர்கிலம் கடமையில். சத்தியம். தலைவ!

நாரா. தகுதி யன்று எனச் சிலர் சாற்றியது ஒக்க

மிகு பழி நீவிரும் மொழிவீரோ என்மேல்?

காவற்படை. மொழியோம் ஒன்றும். மொழியோம் நும் மேல்.

நாரா. 90. சரி! சரி! ஆயின் தாங்குமின் காவல்.

பரி மற்றையர்க்கு எலாம் உளவோ?

௩-ம் படை. ஒழிகோ!

௪-ம் படை. பெரியது என் பரிபோற் பிறிதில.

நாரா. காணுதும்.

அணிவகுத்து இவ்வயின் அமர்மின்! முருகா!

மற்றை வாயிலிலும் மாற்றி இவ்விதம் யான்

95. வைத்துள படையும் அழைத்து இப்புறம் நீ

நொடியினில் வருதி.

முதற்படை. அடியேன். அடியேன்.

(முதற்படைஞன் போக)

நாரா. ஆம்பொழுது அழைப்போம். வாம் பரி அமர்மின்.

(கோட்டைமேல் உலாவி நின்று)

(தனதுள்) அரும் படை யிரண்டும் அதோ! கை கலந்தன.

வரும்பழி யாதோ? மன்னவர்க்கு எதோ?

100. ஆவது இங்கு அறியேன்! ஜீவக! ஜீவகா!

முற்றும் நான் அறிவன் நின் குற்றமுங் குணமும்.

குற்றம் மற்று என்னுள கூறற்கு உன்வயின்?
வித்தையும் உன் பெருஞ் சத்திய விருப்பமும்
உத்தம ஒழுக்கமும் எத்துணைத்து ஐயோ!
105. வறிது ஆக்கினையே வாளா அனைத்தும்
அறியாது ஒருவனை அமைச்சா நம்பி!
இன்னது ஒன்றன்றி மற்று என் பிழை யுன்னுழை?
மன்னவன் நல்லனு வாய்க்குதல் போல
என்னுளது அரியவற்று அரியது இவ்வுலகில்?
110. வாய்த்தும் இங்கு உனைப்போல் வாணாள் வறிதாத்
தீத்திற லொருவன் சேர்க்கையால் வீதல்
மண்ணுளோர் பண்ணிய புண்ணியக் குறைவே!
சுதந்தரம் அறுவோர்க்கு இதம் தீங்கு உண்டோ?
கூறுவோர் அறிவின் குறைவே? வேறு என்?
115. அன்றியும் உன்மிசை நின்றிடும் பெரும் பிழை
ஆயிர மாயினுந் தாய் மனோன்மணி நிலை
கருதுவர் உன் நலங் கருதாது என் செய்வர்?
வருவது வருக! புரிகுவம் நன்மை.
முருகன் வரவிலை? (உ-ம் படைஞனை நோக்கி.)

உ-ம் படை. வருவன் விரைவில்.

நாரா. 120. அதுவென் ஆ! ஆ!

உ-ம் படை. ஆ! ஆ! அறியேம்!

நாரா. பலதேவன் படையலவோ?

உ-ம் படை. ஆம்! ஆம்!

நாரா. மன்னவன்?

உ-ம் படை. நடுவே.

நாரா. வலப்புறம்?

உ-ம் படை. குடிலன்.

நாரா. என்னை இக்குழப்பம் இடப்புறம்?

உ-ம் படை. ஏதோ!

நாரா. வருவது முருகன்போலும். முருகா! (முருகன் வர)

(படை வீரரை நோக்கி) 125. வயப்படு வீரரே! மன்னவர்க்கு அபஜயம்,
இமைப்பு அளவின்கண் எய்தினும் எய்தும்.

இம்மெனு முன்னம் நாம் எய்துவோம் வம்மின்!

முதற்படை. வந்தனர் ஈதோ மற்றைய வீரரும்.

நாரா. தந்தனம் உனக்கு அவர் தலைமை. நொடியில்
130. வலப்புறஞ் செலுத்துதி. மன்னவன் பத்திரம்.
இருபுறங் காக்குதும். வருக என் அருகே!
(முருகன் காதில்) குடிலனை நம்பலை.

முதற் படை. அடியேன் அறிவேன்.

நாரா. அறிந்தவாறு ஆற்றுதி! மறந்திடேல் மெய்ம்மை!
வம்மின் வீரரே! வம்மின்!
135. உம் வயின் உளது நம் செம்மலது உயிரே. (க)
(யாவரும் விரைவாய்க் குதிரைமேற் செல்ல)

நான்காம் அங்கம் : இரண்டாம் களம்

முற்றிற்று.

---

# நான்காம் அங்கம்.

## மூன்றாம் களம்.

---

இடம்: அரண்மனையில் ஒரு சார்.
காலம்: நண்பகல்.

ஜீவகன் தனியாய்ச்சோர்ந்து கிடக்க: சேவகர் வாயில் காக்க.

(நேரிசை யாசிரியப்பா)

முதற்சேவகன். செய்வ தென்? செப்பீர். கைதவற்கு யாமோ
ஆறுதல் கூறுவம்?

உ-ம் சேவ. கூறலும் வீணே!
பெருத்த துயரிற் பேசுந் தேற்றம்
நெருப்பிடை நெய்சொரிந் தற்றே யென்பர்.

ந-ம் சேவ. 5. பணிந்து யாம் அருகே நிற்போம் அன்றித்
துணிந்து மற்று அது தான் சொல்லுவர் யாவர்?

| | | |
|---|---|---|
| ச-ம் சேவ. | | நாராயணரேல் திரமாய் மொழிவர். |
| ரு-ம் சேவ. | | மெய்மை ! மெய்மை ! விளம்புவர் செம்மையாய் ! |
| முதற்சேவ. | | எங்கு மற்று அவர் தாம் ஏகினர் ? உணர்வை கொல்? |
| ச-ம் சேவ. | 10. | மங்கை வாழ் மனைக்குநேர் ஓடுதல் கண்டேன். |
| உ-ம் சேவ. | | சகிப்பரேளர் கேட்கில் தமியள்— |
| ரு-ம் சேவ. | | ஆயினும், |
| | | மகளா லன்றி மன்னவன் தேருன். |
| | | அதற்கே சென்றனர்போலும். ஆ ! ஆ ! |
| உ-ம் சேவ. | | நாராயணரே நன்மதி யுடையோர். |
| ச-ம் சேவ. | 15. | பாரீர் ! இன்று அவர் பண்ணிய சாகசம். |
| | | இன்று யாம்பிழைத்ததிங்கு இவரால். அன்றேல்— |
| | | (ஜீவகன் எழுந்து நடக்க) |
| ரு-ம் சேவ. | | அரசன் அஃதோ எழுந்தான் காணீர். |
| முதற்சேவ. | | உரைதருகின்ருன் யாதோ? ஒதுங்குமின். |
| | | அடுத்து இவண் நிற்பீர். அமைதி ! அமைதி ! |
| ஜீவகன். | 20. | கெடுத்தேன் ஐயோ! கெடுத்தேன் ! நாணம் |
| | | விடுத்து உயிர் இன்னும் வீணில் தரித்தேன். |
| | | ஆ ! ஆ ! என்போல் யாருளர் வீணர் ! |
| | | யாருளர் வீணர் ! யாருளர் ! யாருளர் ! |
| | | பாண்டியன் தொல்குலம் பட்டபாடு இன்று மற்று |
| | 25. | இதுவோ ! இதுவோ ! மதிவரு குலமே ! |
| | | மறுவறு நறவே ! மாசறு மணியே ! |
| | | அழியாப் பழிப்பு உனக்கு ஆக்கவோ உனது |
| | | வழியா யுதித்தேன் மதியிலா யானும் ! |
| | | அந்தோ ! இந்து முதலா வந்த |
| | 30. | முன்னோர் தம்முள் இன்னார்க்கு இரிந்து |
| | | மாண்டவர் அன்றி மீண்டவர் உளரோ ! |
| | | யாது இனிச் செய்குவன் ! ஐயோ பொல்லாப் |
| | | பாதகன் மக்களுள் வெட்கமில் பதடி. (பற்கடித்து) |
| | | போர்முகத்து ஓடிப் புறங் கொடுத்தேற்குக் |
| | 35. | கார்முகம் என்செய ! கடி வாள் என்செய ! |
| | | (வில்லும் வாளும் எறிந்து) |

ஓ! ஓ! இதனால் உண்டு ஓர் பெரும் பயன்.
(மறுபடியும் வாளை எடுத்து நோக்கி நிற்க: சேவகர் ஓடி வர)
போ! போ! வெளியே போரிடைப் பொலியாது
வாளா இருந்த வாளுக்கு ஈதோ (நாராயணன் வர)
எனது உயிர் ஈவேன். வினவுவர் யாவர்?

நாரா. 40. மனோன்மணி தன்னை மறந்தாய் போலும்!

ஜீவக. குழந்தாய்! குழந்தாய்! — (விழுந்து மூர்ச்சிக்க)

சேவகர். கொற்றவ! கொற்றவா!

நாரா. பேசன்மின்! (அரசனை மடியில் தாங்கி)

முதற்சேவ. பேசன்மின்!

நாரா. வீசுமின்! அகன்மின்!

முதற்சேவ வெளியே!

உ-ம் சேவ. பனிநீர்—

நாரா. தெளி நீ சிறிது!

ஜீவக. குழந்தாய்! குழந்தாய்! கொன்றேன் நின் சீர்!
(எழுந்து சோர்வாயிருக்க)

நாரா. 45. இழந்தால் இருப்பளோ? என் செயத் துணிந்தாய்?

ஜீவக. நஞ்சே எனக்கு யான்! என் செய்வேன் இனி!
இருதலைக் கொள்ளியில் எறும்பு ஆனேனே!
செருமுகத்து இரிந்து என் மானஞ் செகுத்தும்
உயிரினை யோம்பவோ உற்றது? ஓர் சிறு
50. மயிரினை யிழக்கினும் மாயுமே கவரிமா.
பெருந் தகை பிரிந்தும் ஊன் சுமக்கும்பெற்றி
மருந்தா யெனக்கே யிருந்ததே நாரணா!

நாரா. மன்னவ! யார்க்குந் தன் உடல் மாய்த்தல்
அரிதோ? பெரிதாம் அனர் வந்து உற்றுழிக்
55. கருதிய தமரைக் காட்டிவிட்டு ஓடி
ஒளிப்பதோ வீரம் என்று உன்னினை?

ஜீவக. ஓ! ஓ!
போரிடை யோடுவோன் வீரம் நாடுவனோ?

நாரா. காலமுங் க[illegible]ங் கண்டு திரும்புதல்

சால்வும் வீரமே. தக்கவை யுணருந்
60. தன்மையில் சௌரியம் மடமே. சூழ்ச்சி சேர்
வன்மையே வீரத்து உயிராம் மன்னவ!

ஜீவக. போதும்! போதும் நின் போலி நியாயம்!
சாதலுக்கு அஞ்சி யோர் தனையனுக்காகச்
சூதக வுடம்பைச் சுமக்கத் துணிந்தேன்.
65. மன்னனும் அல்லன். வழுதியும் அல்லன்!
(சேவகரைநோக்கி) என்னுடன் இருமின்! ஏன் நிற்கின்றீர்?

முதற்சேவ. இறைவ! ஈது என்னை!

ஜீவக. இறைவன் என்று என்னை
இசைப்பது வசையே. இஃதோ காண்மின்!
அசைந்தது ஒரு நிழல். அஃதே யானெனப்
70. பாருமின். பாண்டியன் போரிடைப் பட்டான்.
வாரும்! வாரும்! இருமின் யாவரும்.

நாரா. வீணாய் வெற்றுரை விளம்பலை வேந்த!
காணாய் அஃதோ! அவர் விடுங் கண்ணீர்.
(சேவகர் அழுதலை நோக்கி)

ஜீவக. வம்மின்! வம்மின்! எம்மனீர்! ஏன் இது?

முதற்சேவ. 75. பருதி கண்டு அன்றோ பங்கயம் அலரும்?
அரச நீ துயர் உறில் அழுங்கார் யாரே?

ஜீவக. பிரிய சேவகரே! பீடை யேன்! துயர் ஏன்!
இழந்தனம் முற்றும் என்றோ எண்ணினீர்!
அழிந்ததோ நம் அரண்? ஒழிந்ததோ நம்படை?
80. மும்மையில் இம்மியும் உண்மையில் இழந்திலம்.
வெல்லுவம் இனியும்: மீட்போம் நம் புகழ்.
அல்லையேற் காண்மின்!

நாரா. அதற்கு என் ஐயம்?
இறைவ! இப்போது நீ இசைத்தவை சற்றுங்
குறைவிலை. தகுதியே. கூறியபடியே
85. ஆவது காண்குவம். அழகார் அம்புயப்
பூவினது உயர்வு பொய்கையின் ஆழத்து
அளவு ஆவதுபோல், உளமது கலங்கா
ஊக்கம் ஒருவனது ஆக்கத்து அளவெனத்

துணிவார்க்கு உறு துயர், தொடுமுன் எவ்வும்
90. அணியார் பந்து உறும் அடிபோல், முயற்சியில்
இயக்கி யின்பம் பயக்கும் என்று இசைக்குஞ்
சான்றோர் சொல்லும் சான்றே யன்றோ?
ஆதலின் இறைவ நீ யோதிய படியே
உள்ளத்து எழுச்சியும் உவகையோடு ஊக்கமும்
95. தள்ளா முயற்சியும் தக்கோர் சார்பும்,

(குடிலனும் பலதேவனும் வர.)

உண்டேல் ஊழையும் வெல்லுவம். மண்டு அமர்
அடுவதோ அரிது வடிவேல் அரசே!

குடிலன். (தனதுள்) இப்பரிசாய் அரசு இருப்பது வியப்பே!
தக்கோர் என்றனன் சாற்றியது என்னே!

(அழுவதாகப் பாவித்து ஒருபுறம்
ஒதுங்கி முகமறைத்து நிற்க.)

ஜீவக. 100. ஏன் இது குடில! ஏன் பலதேவ!
ஆனது என்? அமைச்ச! ஆ! ஆ!

குடில. அடியேன்.

ஜீவக. வருதி யிப்புறம்! வருதி யென்னருகே!

குடில. திருவடிச் சேவையில்— (அழுது)

ஜீவக. செய்தவை அறிவோம்.

குடில. ஜனித்த நாள் முதலா— (ஏங்கி)

ஜீவக. உழைத்தனை! உண்மை!

குடில. 105. உடல் பொருள் ஆவி மூன்றையும் ஒருங்கே—

ஜீவக. விடுத்தனை. உண்மை. விளம்பல் என்?

குடில. உண்மையிற்
பிசகிலன் என்பது—

ஜீவக. நிசம்! நிசம்! அறிவோம்!

குடில. எல்லாம் அறியும் ஈசனே சான்று எனக்கு
அல்லால் இல்லை— (விம்மி)

ஜீவக. அனைவரும் அறிவர்.

குடில. 110. அருமை மகன் இவன் ஒருவன்—

ஜீவக. அறிகுவம்.

குடில. பாராய் இறைவ—(பலதேவன் மார்பினைச்சுட்டிக்காட்டி)

ஜீவக (பலதேவனைநோக்கி) வாராய்.

குடில. இப்புண்

ஆறுமாறு என்னை? தேறுமாறு என்னை?

உன் அருளன்றி மற்று என்னுளது எமக்கே—

ஜீவக. அம்பின் குறி யன்று, யாது இது?

குடில. அடியேம்,

115. அன்பின் குறி யிது!

ஜீவக. ஆ! ஆ!

குடில. ஆயினும்

பொல்லாப்பகைவர்—பொய்யர்—அவர்பலர்—

இல்லாது ஆக்குவர் இறைவ என் மெய்ம்மை—(அழ)

ஜீவக. வெல்வோம் நாளை! விடு விடு துயரம்.

குடில. (தனதுள்.) அறிந்திலன் போலும் யாதும்! (சிறிது உளந்தெளிந்து)

ஜீவக. அழுங்கலை.

120. வெறுந் துயர் என் இது? விடு விடு! உலகில்

வெற்றியும் தோல்வியும் உற்றிடல் இயல்பே:

அழுவதோ அதற்காய் விழுமிய மதியோய்!

குடில. (தனதுள்) சற்றும் அறிந்திலன்! என்னை யென் சமுசயம்!

ஜீவக. முற்றிலும் வெல்லுதும் நாளை. அதற்கா

125. ஐயுறேல்! அஞ்சலை! ஆயிரம் வஞ்சியர்

நணுகினும் நாளை—

குடில. நாமேயற்கு அதனில்

அணுவளவேனும் இலையிலை ஐயிர்ப்பு.

நெடுநாளாக நின் பணிவிடைக்கே

உடலோடு ஆவி யான் ஒப்பித்து இருந்தும்,

130. கெடுவேன், அவை இக் கிளர்போ ரதனில்

விடுமாறு அறியா வெட்கமில் பதடியாய்க்

கொடியார் சிலர்செய் கொடுஞ் சூததனால்

தடுமாறு அடைந்து என் தகைமையும் புகழும்

கெடுமாறு உகுத்த கெடுமதி யொன்றே

135. கருத்திடை நினைதொறுங் கண்ணிடு மணல்போல்,

உறுத்துவது இறைவ! ஒவ்வொரு கணமும்.

பகைவர்தம் படை மேற் படுகிலா உடலம்
கெடுவேற்கு என்னோ கிடைத்தது இங்கு அறியேன்!
அடுபோர்க் களத்து யாண்டு அடைந்திலன்! ஐயோ!
140. வடிவேல் ஒன்று என் மார்பிடை யிதுபோல்

(பலதேவனைக்காட்டி)

படுமா றில்லாப் பாவியேன் எங்ஙனம்
நோக்குவன் நின்முகம்? காக்குதி! ஐயோ!
தாக்குறு பகைவர் தம் படை யென்னுயிர்
போக்கில, நீயே போக்குதி! காக்குதி!
145. இரக்கம் உற்று உன் திருக் கரத்து உறை வாள் இவ்
உரத்திடை யூன்றிடி லுய்குவன். அன்றேல்—(அழுது)

ஜீவக. உத்தம பத்தியில் உனைப்போல் யாரே!

நாரா. (தனதுள்) மெத்தவும் நன்று இந் நாடகம். வியப்பே!
மற்று அக் கோழைக்கு உற்றதெப்படிப் புண்?
150. போரிடை யுளதன்று, யார் செய்தனர் பின்?
உணர்குவம். இப் பேச்சு ஒப்பிலாப் பழங்கதை.

(நாராயணன் போக)

குடில. இத்தம் மற்று அவ் வகை நேர்ந்துளது என்னில்,
இத்தனை கருணையும் எனக்கென அருளுதி.
பாத நற் பணிவிடை படைத்த நாள் முதலா
155. யாதும் ஒன்று எனக்கா இரந்திலன். உணர்வை.
ஓதியபடி யென் உரங் கிழித்து உய்ப்பையேற்
போதும் இங்கு எனக்கு. அப்போதலோ காண்குவர்
மன்னுலகுள்ளார் என் உள நிலைமை!
உன் பெயர்க்கு உரிய ஒவ்வோ ரெழுத்தும்
160. என்னுரத்து அழியா எழுத்தினில் எழுதி
இருப்பதும் உண்மையோ இலையோ என்பது
பொருக்கெனக் கிழித்து இங்குணர்த்துதி புவிக்கே.

(முழந்தாள் ஊன்றி நின்று அழ)

ஜீவக. அழுவது என் எழு! எழு! யார் அறியார்கள்!
உன்னுளம் படும்பாடு என்னுளம் அறியும்.
165. என் அனுபவங் கேள். குடிலா! ஈதோ
சற்றுமுன் யானே தற்கொலை புரியத்

துணிந்து வாள் உருவினேன். துண்ணென நாரணன்
அணைந்திலனாயின் அக்காலை —

குடில. ஐயோ !

ஜீவக. தடுத்தான் ; விடுத்தேன் !

குடில். (தனதுள்) கெடுத்தான் இங்கும் !

ஜீவக. 170. அரியேறு அன்ன அமைச்ச ! பெரியோர்
தரியார் ; சகியார் சிறிதொரு சழக்கும்.
ஆயினும் அத்தனை நோவதற்கு என்னே ?
வாள் உறை சேர்த்திலம் ! நாளையும் போர் செயக்
கருதினோம் ! உறுதி ! வெருவியோ மீண்டோம் ?

குடில. 175. வஞ்சியர் நெஞ்சமே சான்று மற்று அதற்கு.
மீண்டதிற் குறைவு என் ? ஆ ! ஆ ! யாரே
வெருவினர் ? சீ ! சீ ! வீண் அவ் எண்ணம் !
இரு தினம் பொருதனர் சிறுவனை வெலற்கு என்று
ஒரு மொழி கூற நம் உழையுளார் சிலர் செய்

(நாராயணன் நின்ற இடம் நோக்கி)

180. சதியே யெனக்குத் தாங்காத் தளர்ச்சி !
அதுவலால் என் குறை மதிகுல மருந்தே !
சென்று நாம் இன்று திரும்பிய செயலே
நன்றெனப் போர்முறை நாடுவோர் நவில்வர்.
செவ்வியில் ஓடி நாய் கௌவிடும் : சிறந்த
185. மடங்கலோ எதற்கும் மடங்கியே குதிக்கும்.
குதித்தலும் பகையினை வதைத்தலும் ஒரு கணம்.
நாளை நீ பாராய் ! நாம் தூது அனுப்பும்
வேளையே யன்றி விரிதலை அனந்தை-
யூரார் இவ் வயின் உற்ற தொன்று அறியாச்
190. சீராய் முடியும் நம் சிங்கச் செருத்திறம் !
மீண்டோம் என்று உனித் தூண்டிலின் மீன் என
ஈண்டு அவன் இருக்குக : இருக்குக. வைகறை
வரும்வரை யிருக்கில் வந்த இவ் வஞ்சியர்,
ஒருவரும் மீள்கிலர். ஓர்கால் இக் குறி
195. தனக்கே தட்டிடில் தப்புவன் என்பதே
எனக்கு உள ஐயம். அதற்கு என் செய்வோம் ?

ஆதலின் இறைவ! அஞ்சினேம் என்று ஒரு
போதுமே நினையார் போர்முறை யறிந்தோர்.

ஜீவக. எவ்வித மாயினும் ஆகுக. வைகறை,
200. இதுவரை நிகழ்ந்தவற்று எது குறைவு எனினும்
அதுவெலாம் அகல நின்று அரும் போர் ஆற்றுதும்.

குடில. வஞ்சியான் இரவே அஞ்சி மற்று ஒழிந்திடில்
அதுவும் ஆம் விதம் எது?

(சேவகன் வர)

சேவகன். உதியன் தூதுவன்
உற்று மற்று உன்றன் அற்றம் நோக்கினனே.

குடில. 205. சரி! சமாதானஞ் சாற்றவே சார்ந்தான்.

ஜீவக. பெரிதே நின் மதி! ஆ! ஆ! வரச்சொல்.

(வஞ்சித் தூதன் வர)

தூதன். தொழுதனன். தொழுதனன். வழுதிமன்னவா!

(வணங்கி)

அருளே யகமாத் தெருளே மதியா
அடலே யுடலாத் தொடை புகழேயா
210. நின்ற என் இறைவன் நிகழ்த்திய மாற்றம்
ஒன்றுளது உன் வயின் உரைக்க என்றே
விடுத்தனன் என்னை யடுத்த தூதுவனா.
இன்று நீர் இருவரும் எதிர்த்ததில் யாவர்
வென்றனர் என்பது விளங்கிடும் உனக்கே.
215. பொருதிட இனியுங் கருதிடில் வருவதும்
அறிகுவை! அதனால் அறிகுறி யுட்கொண்டு
உறுவது முன்னுணர்ந்து உறவு ஆவதற்கே
உன்னிடில் தாம்பிரபன்னியி னின்று ஒரு
கும்ப நீரும் ஓர் நிம்ப மாலையும்
220. ஈந்து அவ னணையில் தாழ்ந்திடில் வாழ்வை!
மதில் திறம் மதித்து இறுமாப்பையேல் நதியிடை
மட் பரி நடாத்தினோர்க்கு ஒப்பு ஆகுவையே.
ஆதலின் எங்கோன் ஓதிய மாற்றம்
யாதெனிற் கைதவா! வைகறை வருமுன்
225. தாரும் நீரும் நீ தருவையேற் போரை

நிறுத்துவன். அல்லேயேல் நின் புரம் முடிய
ஒறுத்திட உழிஞையுஞ் சூடுவன். இரண்டில்,
எப்படி யுன் கருத்து அப்படி அவற்கே.

ஜீவக. நன்று! நன்று! நீ நவின்றனை. சிறுவன்
230. வென்றதை நினைத்தோ அலது மேல் விளைவதைக்
கருதித் தன்னுளே வெருவியோ உன்னை
விடுத்தனன் என்பது இங்கு எடுத்து உரையாதே
அடுத்து இவண் உள்ளார் அறிகுவர். ஆயினும்,
மற்று அவன் தந்த சொற்கு உற்ற நம் விடை
235. சாற்றுதுங் கேட்டி. தன்பொரு ளாயின்
எற்று இரந்தவர்க்கு யாம் யாதும் ஈந்திடுவோம்.
அருந்திடச் சேரன் அவாவிய புனலும்
விரும்பிய சுரும்பார் வேம்பும் விறுகுலம்
வரும் பரம்பரைக்கு ஆம் அல்லால் எனக்கே
240. உள வல; அதனால் ஒருவன் ஈந்திடுகல்
களவெனக் காணுதி. மற்று நீ கழறிய
உழிஞை அங்கு உளதெனில் வழுதிபாற் பழுதில்
நொச்சியும் உளதென நிச்சயங் கூறே.

தூது. ஐயோ! கைதவா! ஆய்ந்திலே உன்றன்
245. மெய்பாம் இயல்பு. மிகும் உன் சேனையின்
தீரமும் திறமும் உனதரும் வீரமும்
கண்முற் படுமுன் கவர்ந்த சேரற்கு இம்
மண்வலி கவர்தலோ வலிதென்று உன்னினை?
என் மதி குறித்தாய்! எடுத்த கைப் பிள்ளாய்!

குடில. 250. நில்லாய் தூதுவ! நின் தொழில் உன் இறை
சொல்லிய வண்ணஞ் சொல்லி யாங்கள்
தரும் விடை கொடுபோய்ச் சாற்றலே யன்றி
விரவிய பழிப்புரை விளம்புத லன்றே.
அதனால் உன்னுயிர் அவாவினை யாயின்
255. விரைவாய் ஏகுதி விடுத்தவ னிடத்தே.

தூது. குடிலா! உன்மனப் படியே! வந்தனம்.
மருவிய போர் இனி வைகறை வரை யில்லை.
இரவினில் வாழுமின் இவ் அரணகத்தே.

(தூதுவன் போக)

குடில. தாதா இது சூதே. சொன்னேன் அன்றே?

ஜீவக. 260. ஏதமில் மெய்ம்மையே யாயினும் என்னை?
நீரும் தாரும் யாரே யளிப்பர்?
எனவேர் அவைதாம்? யாதே வரினும்
மனவலி யொல்கலே. மானமே பெரிது.
சிதைவிடத்து உரவோர் பதையார் சிறிதும்.
265. புதைபடுங் கணைக்குப் புறங்கொடாது உம்பல்.
மதிகுலம் இதுகாறு ஒருவரை வணங்கித்
தாழ்ந்து பின் நின்று வாழ்ந்ததும் அன்று!
மாற்றார் தமக்கு மதிகுல மாலையும்
ஆற்றின் நீருடன் நம் ஆண்மையும் அளித்து
270. நாணுது உலகம் ஆளல்போல் நடித்தல்
நாணற் பாவை யுயிர் மருட்டுதலே.
ஒட்டார் பின்சென்று உயிர் வாழ்தலினும்
கெட்டான் எனப்படல் அன்றே கீர்த்தி?
அதனுற் குடிலா! அறிகுதி துணிபாய்.
275. எதுவாயினும் வரில் வருக. ஒருவனை
வணங்கி யான் இணங்குவன் என நீ மதியேல்.

(எழுந்து)

வருவோம் நொடியில். மனோன்மணி நம் குலத்
திருவினைக் கண்டு உளந் தேற்றி மீள்குவம்.
கருதுவ பல வுள. காணுதும்.
280. இரு நீ யதுகாறு இவ்வயின் இனிதே! (க)

(ஜீவகன் போக)

குடில. கருதுதற்கு என்னே! வருவது கேடே.
தப்பினும் இருமுறை. தப்பிலி நாரணன்
கெடுத்தான் பலவிதம். மடப்பயல் நீயே

(பலதேவனை நோக்கி)

அதற்கெலாம் காரணம்.

பலதே. அறிகுவை, ஒருவன்
285. இதுபோல் வேல் உன் நெஞ்சிடை பிறக்கிடில்.

குடில. உன் நடக்கையினுல்.

பலதே. உன் நடக்கையினுல்!

மன்னனைக் குத்திட உன்னினை: ஊழ்வினை
என்னையே குத்திட இசைந்தது: யார் பிழை?

குடில. பாழ்வாய் திறக்கலை. ஊழ்வினை! ஊழ்வினை!
290. பகைக்கலை யென நான் பலகாற் பகர்ந்துளேன்.

பலதே. பகையோ? பிரியப் படுகையோ? பாவி!

குடில. பிரியமும் நீயும்! பேய்ப் பயல்! பேய்ப் பயல்!
எரிவது என்னுளம் உனை யெண்ணுந்தோறும்.
அரிய என் பணமெலாம் அழித்து மற்று இன்று—

பலதே. 295. பணம் பணம் என்று ஏன் பதைக்கிறாய் பிணமே!
நிணம்படு நெஞ்சுடன் நின்றேன். மனத்திற்
கண்டு நீ பேசுதி! மிண்டலை வறிதே!

(பலதேவன் போக.)

குடில. விதி யிது! இவனுடன் விளம்பி யென்பயன்?
இதுவரை நினைத்தவை யெல்லாம் போயின!
300. புதுவழி கருதுவம்! போயின போகுக! (மௌனம்.)
எதுவும் இந் நாரணன் இருக்கில்,
அபாயம். ஆ! ஆ! உபாயம் இங்கு இதுவே. (உ)

(குடிலன் போக.)

நான்காம் அங்கம்: மூன்றாம் களம்
முற்றிற்று.

---

# நான்காம் அங்கம்.

## நான்காம் களம்.

---

இடம்: அரண்மனையில் ஒருசார்.
காலம்: மாலை.

ஜீவகனும் குடிலனும் மந்திராலோசனை:
பலதேவன் ஒருபுறம் நிற்க.

(நேரிசை யாசிரியப்பா)

ஜீவகன். ஆதி யின்னதென்று ஓதுதற்கு அரிய
வழுதியின் தொழுகுல வாணாள் ஓர் இரா

என மதிப்பதற்கும் இருந்ததே ! குடில !
இத்தனை கேடு இன்று எங்ஙனம் விளைந்தது ?
5. சற்றும் அறிந்திலேன் நைபலர் புகலுமுன்.
மாற்றார் நமது மதிற்புறத்து அகழைத்
தூர்த்தார் எனப் பலர் சொல்லுவது உண்மைகொல் !

குடிலன். ஓரிடம் அன்றே. உணர்ந்திலை போலும்.
(தனதுள்) வேர் அறக் களைகுதும். இதுவே வேளை.

ஜீவக. 10. என்னை ! என்னை !

குடில. மன்னவா ! யான் இங்கு
என்னென ஓதுவன் இன்றையச் சூது ?

ஜீவக. மருவரு மதிலுள கருவி யென் செய்தன ?

குடில. கருவிகள் என்செயும் கருத்தா இன்றியே !

ஜீவக. காவல் இல்லைகொல் ? சேவகர் யாவர் ?

குடில. 15. ஏவலின்படி யாம் எண்ணுயிரவர்
ஆதியர் காவலா ஆக்கியே அகன்றோம்.

ஜீவக எதிது பின் இவர் இருந்தும் மற்று இங்ஙனம் ?

குடில. இருந்திடில் இங்ஙனம் பொருந்துமோ இறைவ !

ஜீவக. செவ்விது ! செய்த தென் ?

குடில. எவ்விதம் செப்புகேன் ?
20. நாரணர் காவலின் நாயகர் ஆக்கினோம்.
போரிடைக் கண்டனை நாரணர் தம்மை.

ஜீவக. மெய்ம்மை ! கண்டனம். விட்ட தென் காவல் ?

குடில. ஐய ! யான் அறிகிலன். அவரினும் நமக்கு
மெய்ம்மையர் யாவர் ? வேலியே தின்னில்
25. தெய்வமே காவல் செய்பயிர்க்கு என்பர்.

ஜீவக. துரோகம் ! துரோகம் !

குடில. துரோகம் மற் றன்று !
விரோதம் ! அடியேன் மேலுள விரோதம்.
திருவடி தனக்கு அவர் கருதலர் துரோகம்.

ஜீவக. கெடுபயல் ! துரோகம் ! விடுகிலன் சிறிதில்.

குடில. 30. மடையன் ! ஐயோ ! மடையன் ! சுவாமீ !

எலிப்பகை தொலைக்க இருந்த தன் வீட்டில்
நெருப்பினை யிடல்போல் அன்றோ நேர்ந்தது.
விருப்பம் மற்று அவர்க்கு உன் வெகுமதி யாயின்
திருத்தமா யொரு மொழி திருச்செவி சேர்க்கில்
35. அளிப்பையே களிப்புடன் அமைச்சுந் தலைமையும்!
அத்தனை யன்பு நீ வைத்துளை! (அழுது)

ஜீவக. ஆ! ஆ!
எத்தனை துட்டன்! எண்ணிலன் சற்றும்!

குடில. ஐயோ! எனக்கு இவ் அமைச்சோ பெரிது?
தெய்வமே அறியும் என் சித்த நிலைமை!
40. வெளிப்பட வொரு மொழி விளம்பிடில் யானே
களிப்புடன் அளிப்பன் அக் கணமே யனைத்தும்.
விடுவேம் அதற்கா வேண்டில் எம் உயிரும்!
போர் முகத்து இங்ஙனம் புரிதலோ தகுதி?
(பலதேவன் மார்பைக்காட்டி.)

ஜீவக. யார்? யார்? நாரணன்? (பலதேவனை நோக்கி)

பலதேவன். ஆம்! அவன் ஏவலில்
45. வம்பன் அங்கு ஒருவன்—

ஜீவக. நம் பகை யன்று பின்!

குடில. நின்பகை யன்று மற்று என் பகை யிறைவ!

ஜீவக. உன் பகை யென் பகை! ஓ! ஓ! கொடியன்!
செய்குவன் இப்போதே சிரச்சேதம்!
இடங் குழம்பியது இங்கு இதனாற் போலும்?

குடில. 50. அடங்கலும் இதனால் ஐய! அன்றேல்,
இடப்புறம் வலப்புறம் யாதே குழம்பும்?
மடப்பயல் கெடுத்தான்! மன்ன! நம் மானம்!
ஒரு மொழி யல்லாது இருமொழி யாயின்
வெருவர வெம்படை வெல்லுவது எங்ஙனம்!

ஜீவக. 55. அழை நாரணனை. (முதற்சேவகனை நோக்கி)

முதற்சேவ. அடியேன்.

ஜீவக. நொடியில். (சேவகன்போக.)
பழமையும் பண்பும் நாம் பார்க்கிலம். பாவி!

| | |
|---|---|
| | இத்தனை துட்டனோ? என் இது செய்தான்? |
| குடில. | சுத்தமே மடையன்! சுவாமீ! பொறுத்தருள். |
| | என்னதே அப் பிழை. மன்ன! நீ காக்குதி! |
| | 60. வருபவை உன் திருவருளால், வரு முன் |
| | தெரிவுறும் அறிவு எனக்கு இருந்தும், திருவுளம் |
| | நிலவியபடியே பலதேவனைப் படைத் |
| | தலைவனா யாக்கிடச் சம்மதித்து இருந்தேன். |
| | எனதே அப் பிழை. இலதேல் இவ்விதம் |
| | 65. நினையான் இவனுயிர் நீக்கிடப் பாவி! |
| | அதன் பின் னாயினும் ஐயோ! சும்மா |
| | இதமுற இராது போர்க் களமெலாந் திரிந்து |
| | கடிபுரிக் காவற் படைகளுந் தானுமாய் |
| | இடம் வலம் என்றிலை: இவுளி தேர் என்றிலை: |
| | 70. கடகயம் என்றிலை: அடையவும் கலைத்து, |
| | கைக்குட் கனியாய்ச் சிக்கிய வெற்றியை— (விம்மி) |
| ஜீவக. | கண்டனம் யாமே. |
| குடில. | காலம்! காலம்! |
| ஜீவக. | கொண்டுவா நொடியில். (உ-ம் சேவகனைநோக்கி) |
| உ-ம் சேவ. | அடியேன்! அடியேன்! |
| | (உ-ம் சேவகன் போக) |
| குடில. | சென்றது செல்லுக. ஜயிப்போம் நாளை. |
| | 75. ஒன்று நீ கேட்கில் உளறுவன் ஆயிரம். |
| | கெடு நா வுடையான். கேட்டு இனி யென்பயன்? |
| ஜீவக. | விடுவேம் அல்லேம். வெளிப்படை. கேட்பதென்? |
| | எழுமுன் அவன் கழுவேறிடல் காண்குதும். |
| குடில. | தொழுதனன் இறைவ! பழமையன்! பாவம்! |
| | 80. சிறிது செய் கருணை. அறியான்! ஏழை! |
| ஜீவக. | எதுவெலாம் பொறுக்கினும் இது யாம்பொறுக்கிலம். |
| | எத்தனை சூது உளான்! எத்தனை கொடியன்! |
| குடில. | சுத்தன்! |
| ஜீவக. | சுத்தனோ? துரோகி! துட்டன்! |
| | (நாராயணன் உள்ளேவர.) |

இட்ட நம் கட்டளை யென்னை யின்று உனக்கே ?
(முருகன் முதலியோர் வாயிலில் நிற்க)

நாரா. 85. எப்போது இறைவ !

ஜீவக. இன்று போர்க்கு வரு முன் !

நாரா. அப்போது ஆஞ்ஞையா யறைந்ததொன்று இல்லை.
கடிபுரி காக்க என்று ஏவினன் குடிலன்.

ஜீவக. குடிலனை யாரெனக் கொண்டனை கொடியாய் ?

நாரா. குடிலனைக் குடிலன் என்றே யுட் கொண்டுளேன்.

ஜீவக. 90. கெடுவாய் ! இனிமேல் விடுவாய் பகடி !
குடிலன் என் அமைச்சன்.

நாரா. நெடுநாள் அறிவன் !

ஜீவக. நானே யவன் இங்கு அவனே யானும்.

நாரா. ஆனல் நன்றே. அரசு அமைச்சு என்றிலை.

ஜீவக. கேட்டது கூறுதி.

நாரா. கேட்டிலை போலும் !

ஜீவக. 95. கடிபுரி காத்தைகொல் ?

நாரா காத்தேன் நன்ருய்.

ஜீவக. காத்தனையேல் அகழ்க்கணந் தூர்த்ததென் பகைவர்?

நாரா. தூர்த்தது உன் பகையல. துரத்திய படைப்பிணம்.
பார்த்து மேற் பகருதி.

ஜீவக. பார்த்தனம் உன்னை
ஆர்த்த போர்க் களத்திடை. அதுவோ காவல்?

நாரா. 100. உன்னையுங் காத்திட உற்றனன் களத்தில்.

ஜீவக. என்னை யுன் கபட நாடகம் ? இனிதே !
அவன் உரம் நோக்குதி. அறிவைகொல் ?
(பலதேவனைக்காட்டி)

நாரா. அறிவேன்.

ஜீவக. எவன் அது செய்தவன் ?

நாரா. அவனே அறிகுவன்.

ஜீவக. ஒன்றும் நீ உணர்கிலை ?

நாரா. உணர்வேன். இவன்பால்

105. நின்றதோர் வீரன் : இப் பொற்றொடி யுடையான் :
“ என் தங்கையின் இழிவு இப்படி யெனக்கே ”
என்று தன் கை வேல் இவன் உரத்து எற்றிப்
பொன்றினன் எனப் பலர் புகல்வது கேட்டேன்.

ஜீவக. நன்று நன்று உன் கதை !

குடில. நன்று இது நன்றே !

(பொற்றொடி காட்டி)

110. பூண் இது நினதே ! அரண்மனைப் பொற்றொடி.
காணுதி முத்திரை! வாணியுஞ் சேர்ந்துளாள்.
இச் செயற்கு இதுவே நிச்சயங் கூலி.
அடியேந் தமக்கு இனி விடை யளி. அகலுதும்.
அஞ்சிலேம் உடலுயிர்க்கு அஞ்சுவம் மானம்.
115. வஞ்சகர் கெடுப்பர். வந்தனம்.

(தன் முத்திரைமோதிரம் கழற்றி நீட்ட)

ஜீவக. நில் ! நில் !

(நாராயணனை நோக்கி) இத்தனை சூதெலாம் எங்கு வைத்திருந்தாய் ?
உத்தமன் போல மற்று எத்தனை நடித்துளாய் !
சோரா ! துட்டா ! சுவாமித் துரோகி !
வாராய் அமைச்ச ! வாரீர் படைகாள் !

(முருகன் முதலிய தலைவரும் படைஞரும் வர)

120. நாராயணன் இந் நன்றிகொல் பாதகன்,
இன்று யாம் இவனுக்கு இட்ட கட்டளையும்
நன்றியும் மறந்து நன்னகர் வாயிற்
காவல் கைவிடுத்துக் கடமையிற் பிறழ்ந்தும்,
மேவருந் தொடியிது எம் கோவிலில் திருடியும்,
125. ஏவலர்க்கு அதனை யீந்தே பலதேவன்
ஓவலில் உயிரினை யுண்டிடத் தூண்டியும்,
அனுமதியின்றி யின்று அமர்க் களத்து எய்திக்
கனைகழற் படை பரி கரி ரதங் கலைத்துச்
சுலபமா யிருந்த நம் வெற்றியுந் தொலைத்துப்
130. பலவழி யிராஜத் துரோகமே பண்ணியும்
நின்றுளான். அதனால் நீதியாய் அவனை
இன்றே கொடுங் கழுவேற்றிட விதித்தோம் !

அறிமின் யாவரும்! அறிமின்! அறிமின்!
சிறிதன்று எமக்கு இச்செயலால் துயரம்.
135. இன்றுநேற் றன்று எனக்கு இவனுடன் நட்பு.

நாரா. வெருவிலேன் சிறிதும் வேந்த நின்விதிக்கே!
அறியா யாயின் இது காறும்
வறிதே மொழிகுதல்! வாழ்க நின்குலம்!

ஜீவக. நட்பு அல: மக்களே யாயின் என்? நடுநிலை
140. அற்பமும் அகலோம். ஆதலின் இவனை
(படைத்தலைவரை நோக்கி)
நொடியினில் கொடுபோய் இடுமின் கழுவில்!

முருகன். அடியேம். நொடியினில் ஆற்றுதும் ஆஞ்ஞை.
குடிலரே வாரும்?

ஜீவக. மடையன் இவன் யார்?

முருகன். கூறிய பலவும், குடிலரோடு ஒவ்வும்.
145. வேறு யார் பிழைத்தனர் வேந்த மற் றின்றே?

குடில. கேட்டனை யிறைவ! கெடுபயல் கொடுமொழி.
(காதில்) மூட்டினன் உட்பகை!

நாரா. முருகா! சீ! சீ!
(முருகனை அருகு இழுத்து.)

ஜீவக. மாட்டுதிர் இவனையும் வன்கழுவதனில்.
(சேவகனைநோக்கி)

முருக. ஆயிற் கழு பதினாயிரம் வேண்டும்.
(வாயிற்சேவகன் வர)

சேவ. 150. சுந்தரமுனிவர் வந்தனர் அவ் அறை.
சிந்தனை விரைவிற் செய்தற்கு உளதாம்.

ஜீவக. வந்தது எவ் வழி யிவர்! வந்தனங் குடிலா!
நடத்துதி யதற்குள் விதிப்படி விரைவில்.

குடில. மடத்தனத்தால் இவர் கெடுத்து எனைப் புகல்வர்;
155. விடுத்திட அருளாய்!

ஜீவக. விடுகிலம்.

குடில. ஆயின்,
அடுத்து நின்று இது நீ நடத்தலே அழகாம்.

ஜீவக. அடைத்திடு சிறையினில். அணுகுதும் நொடியில்.
(ஜீவகன் போக)

குடில. (தன்சேவகனை நோக்கி) சடையா! கொடுபோய் அடையாய் சிறையில்.
(சடையன் அருகே செல்ல)

முருக. அணுகலை! விலகி நில்! அறிவோம் வழி யாம்.
(சடையன் பின்னும் நெருங்க)

160. வேணுமோ கோணவாய் விக்கா!

சடையன். கொக் கொக்! (விக்கி)

முருக. கூவலை! விடியுமுன் கூவலை!

சடையன். கொக் கொக்-

சேவகர் யாவரும். சேவலோ! சேவலோ! சேவலோ! சேவலோ!
(கைதட்டிச்சிரித்து)

குடில. ஏது இது! இங்ஙனம் யாவரும் எழுந்தார்!
வீதியிற் செல்லலை. வீணர்! அபாயம்!
165. ஒழிகுவம் இவ்வழி! வழி யிது! வா! வா!
(குடிலனும் பலதேவனும் மறைய.)

சேவகரிற் சிலர். பிடிமின் சடையனை!

(சடையனும் குடிலன்சேவகரும் ஓடிட,சில படைஞர் தூரத்திட, சிலர்ஆர்த்திட.)

மற்றைய சேவகர். பிடிமின்! பிடிமின்!

சேவகரிற் சிலர். குடிலன் எங்கு உற்றான்?

குடில. கொல்வரே! ஐயோ!
(நன்றாய் மூலையில் மறைய)

சேவகரிற் சிலர். விடுகிலம் கள்வரை!

மற்றைய சேவகர். பிடிமின்! பிடிமின்!
(கூக்குரல் நிரம்பிக்குழப்பமாக)

நாரா. முருகா! நிகழ்பவை சரியல சிறிதும். (ஒரு திண்ணையிலேறி நின்று)

170. அருகு நில். சீ! சீ! அன்பரே அமைதி!
(குழப்பங்குறைந்து அமைதி சிறிது பிறக்க)

முருக. அமைதி! கேண்மின்!

முதற் சேவகன். அமைதி! அமைதி!

நாரா. நல்லுயிர்த் துணைவரே! நண்பரே! ஒருமொழி

சொல்லிட ஆசை! சொல்லவோ? (குழப்பம்தீர)

சேவகரிற் சிலர். சொல்லுதி.

(சிறிது சிறிதாய்ப் படைஞர் நெருங்கிச் சூழ)

சேவகர் யாவரும். சொல்லாய்! சொல்லாய்! பல்லாயிரந்தரம்!

நாரா. 175. நல்லீர் மிகவும் அல்லாது இங்ஙனம்
முன்பின் அறியா என் போலிகள் மேல்
அன்பு பாராட்டீர். அனேக வந்தனம்! (கைகூப்பி)

சேவகர். அறியார் உனை யார்? அறிவார் யாரும்.

(முற்றிலும் அமைதி பிறக்க)

நாரா. அறிவீ ராயினும் யான் என் செய்துளேன்?
180. என் செய வல்லவன்! என் கைம்மாறு!
பாத்திரமோ நும் பரிவிற்கு இத்தனை!

சேவகர். காத்தனை! காத்தனை! காவற் கடவுள் நீ!

நாரா. கெட்டார்க்கு உலகில் நட்டார் இல்லை!
ஆயினும், வீரர் நீராதலின், நும்முடன்
185. ஈண்டு ஒரு வேண்டுகோள் இயம்பிட ஆசை
அளிப்பிரோ அறியேன்? (படைஞர் நெருங்கிச் சூழ)

சேவகர். அளிப்போம் உயிரும்.

குடில. (பலதேவன் காதில்) ஒளித்தது இங்கு உணர்வனோ? ஓ! பலதேவ!

நாரா. ஒரு தினமேனும் பொருதுளேன் நும்முடன்.
கருதுமின் என் அவமானமும் சிறிதே.

சேவகர். 190. உரியதே யெமக்கு அது. பெரிதன்று உயிரும்!

(யாவரும் கவனமாய்க் கேட்க.)

குடில. (தனதுள்) எரி யிடுவானோ இல்லிடை? ஐயோ!

நாரா. அத்தனை அன்பு நீர் வைத்துளீ ராயின்
என் மொழி தனக்கு நீர் இசைமின். எனக்காத்
தீதே யாயினும் செமித்து அருள் புரிமின்!

சேவகர். 195. யாதே யாயினும் சொல்லுக!

நாரா. சொல்லுதும்!
போர்க்களத்து உற்றவை யார்க்கும் வெளிப்படை.
ஊர்ப் புறத்து இன்னம் உறைந்தனர் பகைவர்.

நாற்புறம் நெருப்பு : நடுமயிர்த் தூக்கின்
மதி குலக் கொழுந்தாம் மனோன்மணி நிலைமை.
200. இதனிலும் அபாயம் இங்கு எய்துதற்கு இல்லை.
நுந் தமிழ் மொழியும் அந்தமில் புகழும்
சிந்திடும் : சிந்திடும் நும் சுதந்தரமும்.
இத்தகை நிலைமையில் என்னை நும் கடமை.
மெய்த்தகை வீரரே ! உத்தம நண்பரே !
205. எண்ணுமின் சிறிதே ! என்னை நம் நிலைமை !
களிக்கவும் கூவவும் காலம் இங்கு இதுவோ ?
வெளிக் களத்து உள பகை, வீண் கூக்குரல் இதைக்
கேட்டிடிற் சிறிதுங் கேலியென்று எண்ணார்;
கோட்டையுட் படை வெட்டே யெனக்கொள்வர்.
210. பெரிது நம் அபாயம் ! பேணி யதற்கு நீர்
உரியதோர் கௌரவம் உடையராய் நடமின்.
விடுமின் வெகுளியும் வீண் விளையாட்டும்.
படையெனப் படுவது கரையிலாக் கருங்கடல்.
அடலோ தடை யதற்கு? ஆணையே யணையாம்.
215. உடைபடில் உலகெலாம் கெடும் ஒரு கணத்தில்.
கரு மருந்து அறையிற் சிறு பொறி சிதறினும்
பெரு நெருப்பு அன்றோ ? பின்பு ஆர் தடுப்பர் ?
அதனால் அன்பரே ! ஆணைக்கு அடக்குமின்.

குடில. (மூச்சுவிட்டு) ஆ !

நாரா. இது போ லில்லை யெனக்கு உபகாரம் ! (மௌனம்)
220. இரந்தேன். அடங்குமின் ! இரங்குமின் எமக்கா !

க-ம் சேவ. நாராயணரே ! நவின்றவை மெய்யே !
ஆரேயாயினுஞ் சகிப்பர் அநீதி ?

நாரா. எது நீர் அநீதி யென்று எண்ணினீர் ? நண்பரே !
ஓதிய அரச ஞணையை மீறி
225. எனது உளப்படி போர்க்கு ஏகிய அதற்கா
மனுமுறைப்படி நம் மன்னவன் விதித்த
தண்டனையோ அநியாயம் ? அலது யான்
உண்ட சோற்று உரிமையும் ஒருங்கே மறந்து மற்று
அண்டிய அரச குலத்திற்கு அபாயம்

230. உற்ற தோர்காலை யுட்பகை பெருக்கிக்
குற்றமில் பாண்டிக்கு அற்றமில் கேடு
பண்ணினேன் என்னப் பல தலைமுறையோர்
எண்ணிடும் பெரும் பழிக்கு என் பெயரதனை
ஆளாக்கிட நீர் வாளா முயலலோ
235. யாதே அநீதி ? ஓதுமின். அதனால்.
என் புகழ் விரும்புவிராயின், நண்பரே !
ஏகுமின் அவரவ ரிடத்திற்கு ஒருங்கே !

க-ம் சேவ. எங்கு இனி யேகுவம் இங்கு உனை யிழந்தே ?

உ-ம் சேவ. உன் கருத்து இருப்பிற்கு உரியதோ இவ் விதி ?

நாரா. 240. கருத்தெலாம் காண்போன் கடவுள். விரித்த
கருமமே யுலகங் காணற்கு உரிய.
ஒருவனை அலது இவ் வுலகமோ பெரிது ?
கருதுமின் நன்றாய். காக்குமின் அரசனை.
செல்லுமின். நில்லீர் ! செல்லில் என் தனக்கு
245. நல்லீர் மிகவும் !

சேவகர். நாராயணரே !
உமக்கு ஆம் கொடிய கழுமரம் எமக்கும்
நன்றே யென்றே நின்றோம் அன்றிக் [அநுமதி.
கெடுதி யொன்று எண்ணிலம். கொடும் அதற்கு

நாரா. தென்னவன் சிறைசெயச் செப்பினன் : அதனால்
250. இன்னம் பிழைப்பேன் இக் கழு, உமக்கு யான்
சொன்னவாறு அடங்கித் தாண்மினர் எகில்.
இல்லையேல் எனக்கு இனி யெய்துவது அறியேன்.
வல்லை ! நீர் செல்லுமின் ! செல்லுமின் ! வந்தனம்.
செல்லுமின் ! சத்தியம் செயிக்கும் ! செயிக்கும் !
255. நல்லது ! நல்லது !

(படைஞர் விடைபெற்றுப் போக)

முருக. நாராயணரே !
நும் சொல் என் சிரம். ஆயினும் நும் செயல்
சரியோ என்று எனக்கு உறுவ தோர் ஐயம்.
சத்தியம் ஜயிக்கும் என்றீர். எத்திறம் ?
குடிலன் தனக்கு அநுகூலமா யனைத்தும்

260. முடிவது கண்டும் மொழிந்தீர் முறைமை !

நாரா. பொறு ! பொறு ! முடிவில் அறிகுவை.

முருக. முடியும்
தருணம் யாதோ ? மரணமோ என்றால்,
மரண மன்று அது : மறு பிறப்பு என்பீர்.
யாதோ உண்மை ?

நாரா. ஓதுவம். வா வா !

(இருவரும் நடந்து) 265. நன்று இது : தீது இது : என்று இரு பான்மையாய்த்
தோற்றுதல் துணிபே. அதனால்
தேற்றம் இதே யெனச் செய்க நல்வினையே. (க)

(நாராயணனும் முருகனும் சிறைச்சாலைக்குப் போக.)

பலதே. என்னை யுன் பீதி ? எழு எழு. இவர்க்கு உன்
பொன்னே பொருட்டு ?

(பலதேவனுங் குடிலனும் வெளியே வந்து)

குடில. போ ! போ ! மடையா
270. உன்னினன் சூதே.

பலதே. உன் குணம். நாரணன்
சொன்னது கேட்டிலை ?

குடில. சொல்லிற்கு என் குறை ?
முன்னிலும் பன்னிரு பங்கு அவன் துட்டன்.

(சேவகன் வர.)

சேவகன். மன்னவன் அழைத்தான் உன்னை மற்று அப்புறம்.

குடில. வந்தனம் ஈதோ ! சுந்தரர் போயினர் ?

சேவ. 275. போயினர்.

குடில. ஓ ! ஓ ! போ ! இதோ வந்தோம்.

(சேவகன் போக)

(தன்னுள்) ஆயினது என்னையோ அறிகிலம். ஆயினுஞ்
சேயினும் எளியன். திருப்புவம் நொடியே. (உ)

(குடிலனும் பலதேவனும் போக)

நான்காம் அங்கம் : நான்காம் களம்
முற்றிற்று.

# நான்காம் அங்கம்.

## ஐந்தாம் களம்.

---

இடம்: அரண்மனையில் ஒரு சார்.
காலம்: மாலை.

ஜீவகனும் சுந்தரமுனிவரும்
மந்திராலோசனை.

(நேரிசை யாசிரியப்பா)

சுந்தரர். வளையும் வேய் நிமிரும்: வளையா நெடுமரம்
கிளையுடன் கெடுமே கிளர்காற் றதனில்!

ஜீவகன். முளையும் ஓர் மரமோ? முனிவ! புல்லினம்;
களைகுவர். களைகிலர் காழ்பெறுந் தருக்கள்.

5. சேண் உயர் தேக்கு திசையெறி சூறையில்
ஆணிவேருட னெழுந்து அதிர்ந்து அசைந்திறினும்
பேணுவர் அதனைப் பெரியோர்! யாரே
காணுவர் காழறும் நாணமில் நாணலை?
ஓர் உயிர்ப்பேனும் உண்டேல் அடிகாள்!

10. போரிடைப் போக்குவன்; புகழ் எனக்கு அதுவே!

சுந்தர. பொறு பொறு! ஜீவக! வெறு மொழி புகலேல்!
அரியது செய்வதே ஆண்மையும் புகழும்!
அரிது உயிர்தரித்தலோ மரித்தலோ அறைதி.
வேட்டையார் ஓட்டிட வெருவு தீக்குருவி

15. நீட்டிய தன் சிரம் நீள் மணற் புதைத்துத்
தனது கண் காணுத் தன்மையாற் பிறருந்
தனது உடல் காணர் என நினைவது போல்
என்னை யிம் மயக்கம் மன்னவ! உனக்கும்!
சிறு பசி தாங்காச் சிறுமையர் பற்பலர்;

20. அற வழி யிதுவென அறியாக் கயவர்;
பிறர் பொருள் வெளவியும் பிற வுயிர் கவர்ந்தும்
அலையுந் தீமையர் அநேகர், அகப்படின்
மலைவு அற பரணமும் வெருவார் மான,
கலக்க மொன்று இன்றிக் கழுவேறிடுதல்

25. புலப்படக் கண்டுளாய் இலக்கமில் முறையே.
துரத்திடுந் துயர்க்கணம் வருத்திடுங் காலை
மரித்தலோ அவையெலாஞ் சகித்தலோ தகுதி?
தன்னுயிர் ஈவர் தக்கோர் சார்ந்த
மன்னுயிர் காத்திடும் மார்க்க மற்று அஃதேல்!
30. வார் கடல் முகட்டில், மாநிதி வழிஞர்
ஆர் கலன், அலை யெறி புயல் கால் ஆதியாற்
சேர் திசை திரிந்து தியங்குமேல், மீகான்
களமுங் காலமுங் கருதித் தனக்கு உறு
தளர்வு பாராட்டுதல் தவிர்த்து, சாய்ந்து, மற்று
35. எதிருறு காற்றிற்கு இசைவுற வதிந்து,
தன் திசை செல்லத் தக்க கால் வரும் வரை
சென்று ஒரு கரை சேர்ந்து ஒன்றுவன் அல்லால்,
உவப்பு உறு நிதி கெட உழையுளார்களும் பரி-
தவித்திட மரக்கலம் துறப்பனோ சாற்றாய்.
40. தக்கோர் செயலெலாம் தமக்கா அலவே.
முக்கியம் புகழோ தக்க உன் கடமையோ?
அதனால் ஜீவக! அகற்று அந் நினைப்பு.
மதிகுலம் வந்த மதிவலோர் பலரும்
செலாவழி நின் திமில் செலுத்தினை; தீங்காய்
45. உலாவிய சுழல்காற்றோடு ஒரு சுழியிடைப்
பட்டனை; நம்பிய பாய்மரம் பழுது.
விட்டிடு இக் கோட்டையாம் வெளிக்கடலோட்டம்.
மண்டிய பெருங்காற்று அடங்கும் வரையும்
அண்டையில் உளதோர் கைவழி யதனில்
50. ஒண்டி நீ பொதுங்கி யுன் தொல் நகராந்
துவாத சாந்தத் துறைபோய்
நிவாதமா நிலைபெறலே நெறிமுறையே. (க)

ஜீவக. என் குல முனிவ! இயம்பிய மாற்றம்
நன்கே. உன்றன் நயப்பிற்கு என் செய!
55. கழு மரக் கதை யதைக் கண்டேன் இன்றே.
பழுது பாய்மரம் எனப் பகர்ந்ததும் உண்மை!
வழுவெனக் கண்டு அது மாற்றினன். அநேக
வந்தனம் வந்தனம்! ஆயினும் ஒரு சொல்

சிந்தையிற் சேர்த்து எனைத் தெருட்டிட வேண்டும்.
60. வேற்றுமை யுருவாய் விளங்கிய காலம்
காற்றினுங் கடுகிய கடு நடை யுடையது
அன்றோ? அதில் அகப்பட்டார் முந்திச்
சென்றால் நின்றார்! சிறிது சிந்தித்து
நிற்பரேற் பெரிதும் பிற்பட்டு ஒழிவர்.
65. ஆதலால் அடிகாள் பூதலத்து உயர்ந்த
மேதையின் மிகுந்த மானிடர்க்கு அரசராய்
வந்தவர், தந்தமக்கு உற்ற மதித் திறம்
எட்டிய மட்டுங் குற்றம் விடுத்துக்
கால கதிக்கு அனுகூலமாய் நவீனச்
70. சீர் பல திருத்தி ஓர் இயல் புதிதா
நாட்டித் தமது நாட்டுளோர் சுகம் பா-
ராட்டிலரேல் அவ ராண்ட நாட்கு எல்லை
காட்டுமோ கொடிய காலக் கரப்பே!
இவ்வழி தனக் கெனத் துணிந்த தோர் இயல்பே
75. அவ் அரசனுக்காம் யாக்கை. அஃதின்
அழிவே அவனது ஒழிவாம். அதனால்
எல்லாம் அறிந்த இறைவ! இவ்விடத்து யான்
பல்லாயிரம் நாட் பரிவுடன் உழைத்தே
அமைத்த இப் புரியும் சமைத்த இவ் அரணும்
80. நன்றே யாயினும் ஆகுக: அன்றிப்
பொன்றினும் பொன்றுக: பொறித்த என் அரசியல்
மற்று அவை தம்மொடு மாண்டிடும்: மாண்டபின்
அற்றதோர் கவந்தம் அமர்க்களத்து ஆடும்
பெற்றிபோல் மூச்செறி பிணமா யானும்
85. நடித்தலோ உன் திருவடித் தாமரையைப்
பிடித்ததற்கு அழகாம் பேசாய் விடுத்தே!

சுந்தர. எடுத்த தன் முயற்சி யாதே யாகுக!
முடித்திடு முன்னர் அடுத்த தன் மதியால்
தீங் கெனத் தேர்ந்திடின் ஆங்கு அவற்றுட் பின்
90. வாங்கலே யார்க்கும் ஆம் பணி யென்ப.
தீமை கைவிடற்கு வேளை சிந்திப்போர்

சேய்மை யுனி மனை திரும்பார் ஒப்பர்.
ஆதலால் ஜீவக! நீதென வருதற்கு
யாதோர் ஐயமும் இலை நீ தொடர் இயல்
95. என இன்று எய்தியவற்றால் உனது
மனத்திடை மயக்கு அற மதித்துளை யாயின்,
ஒழுங்கா இவையெலாம் ஒழித்து யான் குறித்த
மருங்கே யணைந்து வாழலை கருமம்.
வேறிலை தேறு மார்க்கம்.
100. கூறுதி யதனால் உன் மனக் கோளை. (உ)

ஜீவக. ஐய! யான் உரைப்ப தென்? அடுத்தவைஇவையெலாம்
கைவிடில் என்னுயிர் கழியும். அதனில்
இன்று யான் பட்ட இகழ்ச்சி முழுதும்
பொன்றிடப் பொருது பின் பொன்றுதல் அன்றோ
105. சிறப்பது செப்புதி! சிறியேன் ஒரு சொல்
மறுத்தது பொறுத்தருள் மாதவக் கொழுந்தே!

சுந்தர. சங்கரா! சற்றோ தாதான்மிய பலம்!
வெங்கரா பிடித்தவை விடினும் விடுமே!
நல்லது ஜீவக! நண்டு எனும் புல்லிய
110. அற்பமாஞ் சிற்றுயிர் அரிய தன் உடலையும்
பிற்கிளைக்கு இரை யென வீந்து அவை பேணல்
கண்டும் புகழிற் கொண்டனை பிராந்தி.
இவ் உயிரியல் உலகியற்கை யென்று எண்ணினேன்.
செவ்விதின் நின் நிலை தேர்ந்தபின் ஐயம்
115. வருவது. அதனால், மதிகுலம் வந்த
ஒரு மலர் நின்னுழை யுள்ளது : தமிழர்
ஆவோர் யார்க்கும் அஃது உரித்தாம் : நீ
காவாயாகிற் காப்பது எங் கடனே.

ஜீவக. இதுபோல் இல்லை அடிகள் செய்யும்
120. உதவி. தமியேற்கு உள துயர் இதுவே.
கண்மணி தனையணிப் புண்படும் உள்ளம்.
அருளுதி காக்கும் உபாயம்,
இருள் நிறை யிடுக்கணுக்கு இயைந்திடு மருந்தே. (ங)

சுந்தர. நல்லது! கேட்டி! சொல்லுதும். உரிய நீர்

125. விட்டால் முதலையும், விரும்பி அதில் அகப்-
பட்டாற் களிறும் பலம் இலவாகி
விடுமென அறிந்த கெடுவினையாளர்
தொடர்பினால், அவர் இடு தூண்டிலிற் சிக்கி
இடமது பெயர்ந்துழி, எடுத்த எவ் வினைக்கும்
130. கேடு முன் கருதிக் கோடலே முறையெனும்,
அறிவோர் மொழி அபர்ந்து இறுமாப்பு அகத்துட்
கொண்டு நீ நின்றதைக் கண்டு இக் கடிபுரி
தொட்டு என் உறையுள் மட்டும் ஓர் சுருங்கை
அதிரகசியமாய் அமைத்துளேன். அவ்வழி,
135. சதமென நம்பும் இச் சாலி புரமும்,
அதன்புறம் ஊன்றிய அடர் புலப் படையும்,
அறிந்திடாவகை யவை கடந்து சென்று உன்னை
மறந்திடா மா பதி யடைந்திடச் செயுமே.

ஜீவக. தேவரீர் செய்யும் திருவருளுக்கு மாறு
140. ஆவதும் உளதோ ஆ! ஆ! அடிகாள்!
வழுதியர் பலர் பலர் வழிவழி காக்கும்
முழுமதித் தொழுகுலத் தெய்வம் நீ போலும்.
பழுதற நீ யிவண் பகர்ந்ததோர் வழியிது
திருத்திட எடுத்த வருத்தம் எத் தகைத்தே!

சுந்தர. 145. நல்லது! முகமன் நவின்றனை. நிற்க.
சொல்லிய சுருங்கை யுனக்கும் இவ் இடுக்கணில்
உதவுமோ அன்றோ உரைக்குதி விரைந்தே.

ஜீவக. அடியேன் ஆசை திருவடி அறியும்.
கடி புரி விடில் உயிர் நொடியும் இங்கிராது.
150. பாண்டியர் குலமெனும் பாற்கடல் உதித்த
காண் தகு கன்னியை இவ்வழி யுன் திரு
உளப்படி கொடுபோய் அளித் தருளுதியேல்,
இந்துவின் குலமெனும் முந்தியபெயர் போய்ச்
சுந்தரன் குலமெனச் சந்ததம் வழங்கும்.
155. நீங்காது இதுகாறு என்னுளம் நிறைந்த
தாங்காப் பெரும் சுமை தவிர்தலால், யானும்
ஒருமனம் உடையனாய் மறலியும் வெருவ

ஆற்றுவன் அரும் போர். அதனிடை யமபுரம்
ஏற்றுவன் எம் குலந் தூற்றிய சேரனை ;
160. வென்றிடில் மீளுவன். அன்றெனிற் பண்டே
அனையிலாத் தனையனுக்கு அம்மையும் அப்பனும்
தயாநிதி ! நின் திருச்சரணமே யென்ன
வியாகுலம் அறவே விடுவன் என்னுயிரே.

சுந்தர. விடுகிலை, ஆகினும் வெளிக்கட லோட்டம் !
165. நடு நிசி நாம் இனி வருகுதும். கொடிய
கடி புரிக் கனலிடைக் காய்ந்திடும் உன்றன்
சிறுகொடி மறு இடம் பெயர்த்துதும். சிறந்த
அந்தமில் செழியரைத் தந்திட உரித்தே. (எழுந்து)

ஜீவக. கட்டளைப்படியே ! கட்டிய கற்படை
170. கண்டிட ஆசை யொன்று உண்டு அடியேற்கு.

சுந்தர. காட்டுதும் இன்றிரா கற்படை சேர் முறை.
ஒருவர் ஒருபொருள் அறியில் இரகசியம்;
இருவர் அறிந்திடிற் பரசியம் என்ப.
கைக்கு எட்டியது தன் வாய்க்கு எட்டுதற்குள்
175. வந்துறும் அந்தமில் பிரதிபந்தங்களே.

(முனிவர்போக.)

ஜீவக. (தனிமொழி) வந்தனம். வந்தனம். அடிகாள் ! வந்தனம்.
என்னே ! என்னே ! இந்நாள் இயன்றவை !
கொன்னே கழிந்த தன்று ஓர் இமைக் கொட்டும்.
குகு நாள் மழையொடு மிகு காற்று எறிந்த
180. பரவையின் பாடெலாம் பட்டது என்னுளமே.
இரவினில் வருபவை எவையெலாங் கொல்லோ !
தாயே ! தாயே ! சார்வன சற்றும்
ஆயேன், எங்ஙனம் பிரிந்து உயிர் ஆற்றுவேன் ?
விடுக்குமாறு எவன் என் விளக்கே ? உன்னைக்
185. கெடுக்குமாறு எவன் இக் கிளர் போரிடை ? அது
தடுக்குமாறு எவன் இனி ? சமழ்ப்பு அற்று உடலம்
பொறுக்குமாறு எவன் ? இப் பொல்லா வல்லுயிர்
துறக்குமாறு எவன் உனைத் துணையற விடுத்தே ?
அந்தோ ! அந்தோ ! என்றன் தலைவிதி !

190. நாற்புறம் நெருப்பு உறின் நளியுந் தனது
வாற்புற நஞ்சால் மாய்ந்திடும் என்ப.
நரனலன்; நரேந்திரன்: நான் அதுபோற் சுதந்-
தரன் அலன் எனில் என் தலைவிதி கொடிதே!
பிரிவு என என்னுளம் கருதிடு முனமே
195. பிரையுறு பாலென உறைவது என் உதிரம்.
நாணுது உன் முகம் காணுவது எவ்விதம்?
நடுநிசிப் பொழுது தொடு கற்படை வழி
முனிவரன் பிறகு உனைத் தனிவழி விடுத்து இவண்
தங்குவன் யானும்! தங்குவை நீயும்!
200. இங்கு அதற்கு இசையேன். இறக்கினும் நன்றே!
(மௌனம்)
கற்படை யிதுதான் எப்புறத் ததுவோ!
உரைத்திலர் முனிவர். ஒளித்தனர். இஃதும்
உளதோ? இலதோ? உணர்பவர் யாவர்?
களவழி யிது முனி கட்டற் பாற்றோ?
205. முனமே முனிவன் மொழி மணம் அன்றோ
இனைய இப்போர்க் கெலாம் ஏதுவாய் நின்றது!
கூடிய தன்று அது! ஏ! ஏ! குடிலனை (சேவகன் வர)
ஓடி யிங்கு அழையாய்! (சேவகன் போக)
உண்மை யெப்படி யென
நாடுமுன் வாடி நலிதல் என் பயன்?
210. நம்புதல் எல்லாம் துன்பமே தருவது.
நம்பினோம் நாராயணனை. அதற்கா
வம்பே செய்தான் மாபாதகன் அவன்.
நட்பே நமக்கு இங்கு உட்பகை யானது!
முனிவரோ முது நகர் விடுத்த நாள் முதலா
215. மனத்திடைக் களங்கம் வைத்துளர். அஃது அவர்
விளம்பிய மொழியே விளக்கிடும். நன்றாய்
ஆராயா முனம் அனுப்புதல் தவறே. (குடிலன் வர)
வாராய் குடில! மந்திரி யுனக்கு
நேர்தான் ஆரே! நிகழ்ந்தவை அறிவை கொல்?
220. சுந்தர முனிவர் ஓர் சுருங்கை தொட்டுளராம்;
நந்தமை யழைத்தனர் ஒளித்திட அவ்வழி;

மறுத்திட, மனோன்மணியேனும் அங்குஅனுப்பென்
ஒறுத்தவர் வேண்டினர்; உரிய நம் குலமுனி
ஆதலின் ஆமென இசைந்தோம்; அவ் வழி
225. யாதென வினவியதற்கு ஓதாது ஏகினர்;
பாதி ரா. வருவராம்.—பகர்ந்த இக் கற்படை
மெய்யோ பொய்யோ? மெய் யெனில் எவ் வயின்
உளதென உணர்தியோ? ஒழுங்கு கொல், நமது
இளவரசியை யங்கு அனுப்புதல்?

குடில. இறைவ!
230. முன்னர் நாம் ஒரு நாள் இந் நகர் காண
அழைத்தோம்; அந் நாள் யாம்நர் பூசை
இழைத்திட ஓரறை இரந்தனர்—

ஜீவக. ஆம்! ஆம்!

குடில. அவ் அறை யெவ் அறை?

ஜீவக. அது யான் அறிவேன்.
செவ்வே வடக்குத் தேம்பொழிற்கு இப் புறம்.
235. மூறு முறி மணவறை.

குடில. (தனதுள்) அறிவு இது வெகு நலம்!
(ஜீவகனை நோக்கி) உறுவது அங்கு என் னென உணர்ந்தனை?

ஜீவக. உணர்ந்திலேன்.

குடில. அதுவே கற்படை. அறிந்துளேன். பழுது
செயத் தகு வினையல ஆதலில் திருவுளம்
உணர்த்திலேன். முனிவர் ஓதியது இதுவே.
240. இவ் அரண் முற்றும் இயற்றிய நமக்குச்
செவ்வியில் இதுவோ செய்தற்கு அரியது?
சுந்தரர் நமை யெலாம் புந்தி யற்றவரென
நொந்து தாம் உழைத்ததை நோக்கிடில் நகைப்பே!

ஜீவக. நந் தொழில் பழித்திலே சிந்தை யெப்பொழுதும்:
245. பண்டே கண்டிலோம். யாங்கோ அனுப்புதல்?

குடில. பழுதல: யானுறுங் குழவி கை யிருப்ப
மல்லு யுத்தம் செய வல்லவர் யாரே?
அனையினை யொருபாற் சேமமாய் அனுப்பிய

பிணை யிலை கவலையும் பீதியும் பிறவும்.
250. உட்பகை வெளிப்பகை யெப் பகை யாயின் என் ?
கவலை யொன்றிலதேல் எவர் உனை வெல்வர் ?
ஆதலால் முனிவர் ஓதிய படியே
அனுப்புதல் அவசியங் குணப் பிரதம்மே.
ஆனால் அறியா அரச கன்னியர்கள்,
255. தேனார் தெரியல் சூடுமுன் இரவில்
தனி வழி அரியர்பால் தங்குதல்—?

ஜீவக. தவறே.

குடில. முனிவரே யாயினும், அரியரே. உலகம்
பைத்தியம். பழித்திடும். சத்தியம் உணராது.

ஜீவக. மெய்மை. வதுவைமுன் விதியன்று அனுப்புதல்.

குடில. 260. அனுப்பினும் அதனால் ஆம் பயன் என்னே ?
மனத்துள கவலை மாறுமோ ? கவலை
முன்னிலும் பன்னிரு பங்காய் முதிரும்.

ஜீவக. அதுவே சரி ! சரி ! ஐய மொன்று இல்லை.
வதுவைக்கு இதுவோ தருணம் ?

குடில. மன்னவ !
265. அடியேன் அறிவிப்பதுவும் இங்கு அதுவே !
கொடிதே நம் நிலை. குற்றம் எப்புறமும்,
அடிகள் அறைந்தவாறு அனுப்பாது இருக்கில்
உட்பகைச் சதியால் ஒருகால் வெற்றி
தப்பிடின் நம் குலம் எப்படி யாமோ ?
270. வைப்பிடம் எங்கு பின் ? எய்ப்பிடம் எங்கே ?
திரு மா முனிவரோ கருநா வுடையர்.
நம்பிய தலைவரோ வம்பினர். துரோகர்.
இத்தனை பொழுதும் அங்கு எத்தனை கூச்சல் !
எத்தனை கூட்டம் ! எத்தனை குழப்பம் !
275. முருகனும் நாராயணனும் மொழிந்த
அருவருப்பு உரை யிங்கு அறையேன். அவர்தாம்
சேவகர் குழாங்களைத் திரட்டி யென்மேல்
ஏவினர்; அதற்கு அவ ரிசைந்திலர். பிழைத்தேன் !
வேண்டினர் பின்னையும்; தூண்டினர் உன் எதிர்.

ஜீவக. 280. காண்டும் ! காண்டும் ! கடுஞ்சிறை சேர்த்தனே !

குடில. சேராது இவரை மற்று யாரே விடுவர் ?
ஆயினும் தலைவர் நிலைமை யிஃதே !
வெல்லுவதெலாம் நம் வீரமே யல்லால்
இல்லை யவர் துணை யென்பது தெளிவே.
285. அல்லொடு பகல் போல் அல்லல் செய் கவலையும்
வீரமும் எங்ஙனம் சேருமோ அறியேன்.
கவலை தீர் உபாயங் கருதில், நுவல் தரு
கல்லறை நன்றே கடிமணம் முடியில்.—
கடிமணம் அதற்கோ, முடி புனை மன்னர்
290. வேண்டும் என்றன்றோ ஆண்டகை நினைத்தனை ?
வருடக் கணக்காய் வேண்டும் மற்று அதற்கே.
ஒரு நலங் காணின் ஒரு நலங் காணோம்.
எற்ற குணமெலாம் இருப்பினும் இதுபோல்
மாற்றலன் ஆய்விடின் மனோன்மணி யென்படும் ?
295. பிரிதலே யரிதாம் பெற்றியீர் ! பிரிந்தபின்
பொருதலே ஆய்விடிற் பொறுப்பளோ தனியள் !
பூருவ புண்ணியம் அன்றோ மன்றல்
நேருமுன் இங்ஙனம் நெறியிலான் துர்க்குணம்
வெளியாயினதும் ? எளிதோ இறைவ !
300. வேந்தராய்ப் பிறந்தோர்க்கு உனைப்போற் சாந்தமும்
பிறர் துயர் பேணும் பெருமையும் ஒழியா
அறம் நிறை யகமும் அறிவும் அமைதல்.
பாண்டமேல் மாற்றலாங் கொண்டபின் ! என்செய !
ஆண்டுகள் பழகியும் அறிகிலஞ் சிலரை.
305. ஐயோ ! இனி நாம் அந்நிய ராயின்
நன்றாய் உசாவியே நடத்துதல் வேண்டும்.
அன்றேற் பெரும் பிழை !

ஜீவக. ஆ ! ஆ ! சரியே !

குடில. ஆதலின், இறைவ ! ஆய்விடத்து எங்கும்
ஏதமே தோன்றுவது என்னை இந் நிலை ?

ஜீவக. 310. அரசு அலவெனின் நமக்கு ஆம் பிழை யென்னை ?

குடில. திருவுளப் பிரியம், தீங்கு என் அதனில் ?

உன்றன் நுகத்திற்கு ஊன்றுகோல் போன்று
முடிமன்னர் பலர் அடி தொழ நினது
தொழுமை பூண்டு நல் ஊழியம் இயற்றும்
315. வீரமும் மேதையும் தீரமும் திறமும்
குலமும் நலமும் குணமும் கொள்கையும்
நிரம்பிய நெஞ்சுடைப் பரம்பரை யாளராய்
நிற்பவர் தமக்கு மற்று ஒப்பு எவ் அரசர்?
அற்பமோ ஐய! நின் அடிச் சேவகமே?

ஜீவக. 320. என்னை மனோன்மணிக்கு இச்சை? அறிகிலேன்!

குடில. மன்னை. மற்றது வெளிப்படை யன்றோ?
அன்னவட்கு இச்சை யுன்னுடன் யாண்டும்
இருப்பதே யென்பதற்கு என் தடை? அதற்கு
விருத்தமாய் நீ கொள் கருத்தினைச் சிந்தையிற்
325. பேணியே கலுழுதல் போலும். பிறர் பால்
நாணி யிங்கு ஓதாள். வாணியேல் நவில்வள்.

ஜீவக. உத்தமம்! உத்தமம்! மெத்தவும் உத்தமம்!
பலதேவன் தன் நலம் அவள் கண்டுளாள்?

குடில. பலகால் கண்டுளாள். கண்டுளான் இவனும்.
330. ஆர்வமோடு அந்தோ மார்பிடைப் பட்ட புண்
'மனோன்மணி மனோன்மணி' எனும் மந்திரத்தால்
ஆற்றுவான் போலவே அவ் அறை யிருந்து அவன்
சாற்றலுஞ் சற்றுமுன் ஜாடையாய்க் கேட்டேன்.
ஆயினும், அரச! பேயுலகு என் குணம்
335. அறியாது அதனால் வறிதே பலவுஞ்
சாற்றும். தன்னயங் கருதல்போற் பிறர்க்குத்
தோற்றும். அதனால் தூற்றுவர். அதுவும்
மாற்றலே மந்திரத் தலைவர்தம் மாட்சி.
ஆதலின், இறைவ! அவைக் களத்து அநேக—

ஜீவக. 340. ஓதலை. ஓதலை. உனதன்று அத் தொழில்.
தனையைக்கு உரியது தந்தையே யுணருவன்!
இனையதே யென் மகட்கு இந் நிலைக்கு ஏற்பதும்.
அரசனைப் ஆய்கினுஞ் சரி யிம் முடிபு.
மிகைத் தெரிந்து அவற்றுள் மிக்கது கொளல் எனுந்

345. தகைமையில் தகுவ...ம் இதுவே. அதனால்,
குடிலா ! மறுக்கலை.

குடில. அடியேன். அ

ஜீவக. இந் நிசி யிரண்டாஞ் சாமம் அன்றோ
முன்னம் நாம் வைத்த முகூர்த்தம்?

குடில. ஆம்! ஆம்!

ஜீவக. செவ்விது செவ்விது ! தெய்வ சம்மதமே !
350. ஆவா ! எவ்வளவு ஆழினது என்னுளம்
ஓவா என் துயர்க்கு உறு மருந்து இதுவே !
பிரிந்திடல் ஒன்றே பெருந்துயர்.

குடில. பிரிந்து நீர்
இருந்திடலெல்லாம் ஒருநாள். அதற்குள்
வெல்லுதும். காண்டி. மீட்குதும் உடனே.

ஜீவக. 355. நல்லது ! வேறிலை நமக்காம் மார்க்கம்.
ஒருமொழி மனோன்மணியுடன் கேட்டு இஃதோ
வருகுதும். அதற்குள் வதுவைக்கு
அமைக்குதி அவ் அறை அமைச்சர் ஏறே ! (ச)
(ஜீவகன் போக)

குடில.(தனிமொழி) தப்பினன் நாரணன். சாற்றற்கு இடமிலை.
360. இப்படி நேரும் என்று எண்ணினர் யாவர் ?
முனிவரன் வந்ததும், நனி நலம் நமக்கே !
மறுப்பளோ மனோன்மணி ? சீ சீ ! மனதுள்
வெறுப்புள ளேனும் விடுத்து அவளொன்றும்
மொழியாள். சம்மதக் குறியே மௌனம்.
365. அழுவாள் : அதுவும் பிரிவாற்றாமையே
ஆய்விடும், அரசன் ஆய்விலா வுளத்துள்.
நடு நிசி வருமுன் கடி மணம் இவண் நாம்
முடிக்கின் முனி பின் தடுப்பதும் எவ் விதம் ?
ஏய்த்திட எண்ணினன் என்னையும் ! பேய்ப் பயல்!
370. வாய்த்தது இங்கு எனக்கே மற்று அவன் கற்படை.
(மௌனம்)

ஊகஞ் சென்றவாறு உரைத்தோம். உறுதி-
யாக மற்று அதன் நிலை அறிவதார் ? உளதலது

உரைப்படரோ முனிவர்? உளதெனில் உரைத்தவாறு
இருத்தலே யியல்பாம். எதற்கும் ஈது உதவும்.
(மௌனம்)

375. சென்று கண்டிடுவம். திறவு கோல் இரண்டு
செய்தது எதற்கெலாம் உய் வகை யானதே!
எத்தனை திரவியம் எடுத்துளேம் : கொடுத்துளேம்.
அத்தனை கொடுத்தும் அறிவிலாப் படைஞர்,
நன்றியில் நாய்கள் இன்று அஃதொன்றும்
380. உன்னாது என்னையே யோட்டிடத் துணிந்தன.
என்னோ நாரணன் தனக்கும் இங்கு இவர்க்கும்?
எளியனென்று எண்ணினேன். வழி பல தடுத்தான்.
கெடு பயல் பாக்கியம், கடி மணம் இங்ஙனம்
நடுவழி வந்ததும்! விடுகிலம்.
385. கொடியனை யினிமேல் விடுகிலம் வறிதே. (ரு)

நான்காம் அங்கம் : ஐந்தாம் களம்
முற்றிற்று.

---

கலித்துறை

அரிதா நினைத்த தன் அங்கங்கள் யாவும் அழிந்த பின்னும்
புரியே பொருளெனப் போற்றிய ஜீவகன் புந்தி யென்னே!
பிரியாத சார்பு பெயர்ந்து விராகம் பிறந்திடினுந்
தெரியாது தன் நிலை ஆணவம் செய்யுந் திறஞ் சிறிதே!

**நான்காம் அங்கம் முற்றிற்று.**

| | | | |
|---|---|---|---|
| ஆசிரியப்பா | 12-க்கு | அடி | 1297 |
| வஞ்சிப்பா | 1-க்கு | ,, | 14 |
| கலித்தாழிசை | 3-க்கு | ,, | 12 |
| கலித்துறை | 1-க்கு | ,, | 4 |
| ஆக அங்கம் 1-க்கு பா : | 17-க்கு | ,, | 1327 |



# ஐந்தாம் அங்கம்.

## முதற் களம்.

---

இடம்: கோட்டைக்கும் வஞ்சியர் பாசறைக்கும்
நடுவிலுள்ள வெளி.

காலம்: யாமம்.

குடிலன் தனியே நடக்க.

(நேரிசை ஆசிரியப்பா.)

குடிலன்.
(தனிமொழி)

திருமணங் கெடினுந் தீங்கிலை யீங்கினி.
இருசர மின்றி யெப் போரிடையும்
ஏகார் மதியோர். இதில் வரு கேடு என் ?
ஆகாவழியும் அன்று இது. சேரனை
5. அணைந்து அவன் மனக்கோள் உணர்ந்ததன் பின்னர்
சுருங்கையின் தன்மை சொல்லுதும் ஒருங்கே.
இசைவனேற் காட்டுதும். இன்றேல் மீள்குதும்.
பிசையிலா மனத்தன்! பணிதலே விரும்புவன்.
பாண்டி நாடு ஆளவோ படையெடுத்தான் இவன்!
10. தூண்டிடு சினத்தன் : தொழுதிடின் மீள்வன்.
வேண்டிய நீரும் விழைந்ததோர் தாரும்
பாண்டில் பாண்டிலா யாண்டுகள் தோறும்
அனுப்புதும். குறைவு என் அதனில் ? இதுவே
மனக்குறை நீக்கு மார்க்கம்.—வதுவை
15. போயின் என்? ஆயின் என் ? பேயன் நம் மதன்
எடுத் தெறிந்திடுவன் இப்போதே நம் மொழி.
அடுத்த நம் படைஞரோ பகைவர் : அவர் நமைக்
கெடுத்த நாரணற்கே கேளொடு கிளைஞர்.
ஆதலில் இஃதே தீதறும் உறுதி.—
20. என்னை நம் ஊகம்! என்னை நம் ஊக்கம்!
முன்னர் யாம் அறியா இன்ன நற் சுருங்கையில்
துன்னிருள் வழிதனி தொடர்ந்து இவண் சேர்ந்
ஊக்கமே பாக்கியம். உணர்விலார் வேறு [illegible]

பாக்கியம் ஊழ் எனப் பகர்வதெலாம் பாழ்.
25. சாக்கியம் வேறு என்? சாத்தியா சாத்தியம்
அறிகுறி பலவால் ஆய்ந்து அறிந்து ஆற்றுந்
திறமுள ஆகமே யோகம்: அன்றி
(நக்ஷத்திரங்களை நோக்கி) வான்காட தனில் வறிதே சுழலும்
மீன்காள்! வேறும் உளதோ விளம்பீர்?
30. மதியிலா மாக்கள் விதியென நும்மேற்
சுமத்துஞ் சுமையும் தூற்றுஞ் சும்மையும்
உமக்கிடு பெயரும் உருவமும் தொழிலும்,
அமைக்குங் குணமும், அதில் வரு வாதமும்,
யுக்தியும் ஊகமும் பக்தியும் பகைமையும்,
35. ஒன்றையும் நீவிர் உணரீர்!—அஃது என்?
வென்றவர் பாசறை விளங்குவது அஃதோ!
இங்கு மற்று உலாவுவன் யாவன்? பொங்குகால்
வருந்தொறுஞ் சிலமொழி வருவ. அஃதோ
திரும்பினன்! ஒதுங்குவம். தெரிந்துமேற் செல்குவம்.
(புருஷோத்தமன் தனியாயுலாவிவர)

(குறள் வெண் செந்துறை)

புரு. (பாட) உண்ணினைவில் ஒருபோதும் ஒப்பின்றிக் கலந்திருந்தும் உயிரே யென்றன்
கண்ணிணைகள் ஒருபோதுங் கண்டிலவே நின்னுருவங் காட்டாய் காட்டாய். (1).

அவத்தை பல அடையுமனம் அனவரதம் புசித்திடினும் அமிர்தே யென்றன்
செவித்துளைகள் அறிந்திலவே தித்திக்கும் நின்னுமஞ் செப்பாய் செப்பாய். (2)

பொறிகள் அறியாதுள்ளே புகும்பொருள்கள் இலையென்பர் பொருளே யுன்னை
யறிய அவாவிய கரணம் அலமாக்க அகத்திருந்தாய் அச்சோ அச்சோ. (3)

(புருஷோத்தமன் சற்றே யகல.)

குடில. (தனிமொழி) 40. மனிதன் அலன் இவன்! புனித கந்தருவன்!
தேவரும் உளரோ? யாதோ? அறியேன்.

இருளெலாம் ஒளிவிட இலங்கிய வுருவம்
மருள் தரு மதனன் வடிவே ! மதனற்கு
உருவிலை யென்பர்.—ஓசையும் உருவும் !—
45. பாடிய பாட்டின் பயன் என் ? அஃதோ !
நாடி யறிகுதும். நன்று நன்று.

(புருஷோத்தமன் திரும்பிவர)

புரு. (பாட) புலனைக் காண்பதுவே பொருளென்னும் போதமிலாப்
புன்மையோர்க்கிங்
குலவாதென்னுளம் நிறையும் உனதுண்மை யுணர்த்தும் வகை
யுண்டே யுண்டே. (4)

பெத்தமனக் கற்பிதமே பிறங்கு நினைவெனப் பிதற்றும்
பேதையோர்க் கோர்
யத்தனமற்றிருக்க என்னு ளெழுமுனது நிலை யுரைப்ப
தென்னே யென்னே. (5)

தேர்விடத்தென்னுள்ளம் நிறைதெள்ளமுதே யுன்னிலைமை
தோராதிங்ஙன்
ஊர்விடுத்தும் போர்தொடுத்தும் உனையகல நினைத்ததும் என்
ஊழே யூழே. (6)

குடில. சேரனே யாம் இது செப்பினேன்.—போரினில்
ஒருபுறம் ஒதுங்கி யரசனை யகற்றி
நின்றதாற் கண்டிலேன். நிறைந்த காமுகன்.
50. ஒன்று அனுகூலம் உரைத்தான். நன்றே
ஊர் இவண் விடுத்ததும் போர் இவண் தொடுத்ததும்.
எண்ணிய கொள்கைக்கு இசையும் புகன்றவை.
நண்ணுதும் நெருங்கி. நல்லது ! திரும்பினன்.

(புருஷோத்தமன் திரும்பிவர)

புரு. (தனிமொழி) என்றும் கண்டிலம் இன்று கண்டதுபோல்.
55. எத்தனை முகத்திடைத் தத்துறு துயரம் !
இவ்வயின் யான் வந்து இறுத்த நாள் முதலாக்
கௌவையின் ஆழ்ந்தனை போலும்.—ஐயோ !

(குடிலன் எதிர்வர)

(குடிலனை நோக்கி) ஜடிதி ! பெயரென் ! சாற்றுதி ! தத்க்ஷணம் !

குடில. அடியேன் ! அடியேன் ! குடிலன் ! அடிமை !

புரு. 60. வந்ததென் இருள்வயின்? வாளிடு என் அடியில்!

குடில. வெந்திறல் வேந்த நின் வென்றிகொள் பாசறை
சேர்ந்து உன் அமையந் தேர்ந்து தொழுது ஓர்
வார்த்தை நின் திருச்செவி சேர்த்திடக் கருதி
வந்தனன் அடியேன் : தந்தது தெய்வம்
65. உன்றன் திருவடி தரிசனம் உடனே!
சிந்தை யெப்படியோ அப்படி யென் செயல்!

புரு. செப்புதி விரைவில். செப்புதி வந்தமை!

குடில. ஒப்பிலா வீர! எப் புவனமும் நின்
மெய்ப்புகழ் போர்த்துளது அதனால், இப் புவி
70. நீ வரு முனமே நின் வசப்பட்டுத்
தாவரும் இன்பந் தடையறத் துய்ப்பப்
பாக்கியம் பெற்றிலம் பண்டே யென்று உனி
ஏக்கம் உற்றிருந்தமை யான் நெடுநாளாய்
அறிந்துளன். இன்று நீ யாற்றிய போரிற்
75. செறிந்து இருபடையுஞ் சேர்தரு முனமே
முறிந்து யாம் ஓடிய முறைமையுஞ் சிந்தையிற்
களிப்பு அடையாமலே கை கலந்தமையும்
வெளிப்படை யன்றோ? வேந்த! இப் புவியோர்
வெல்லிடமும் வெலா இடமும் யாவும்
80. நல்லவாறு அறிவர். நாயினேன் சொல்வதென்?
வேஸ்சியர் தங்கள் ஆசையில் முயக்கம்
அன்றோ இன்று அவர் ஆற்றிய போர்முறை?
என்செய்வார் அவர்? என்செய்வார்? ஏழைகள்!
நின்புகழ் மயக்கா மன்பதை யுலகம்
85. யாண்டும் இன்றெனில், அணிதாம் இந்தப்
பாண்டியும் நின்பாற் பக்கங்கொளத் தகுமே!
ஒருவாறு அறமே யாயினும், மருவாக்
கொற்றவர் பிழைக்கக் குற்றமில் மாக்களை
மற்று அவர் மன நிலை முற்ற அறிந்த பின்
90. கருணையோ காய்தல் தருமநல் லுருவே?

புரு. (தனதுள்) யாதோ சூது ஒன்று எண்ணினன். அறிகுவம்.
(குடிலனைநோக்கி) வேண்டியது என்னை யதனால்? விளம்புதி

குடில. ஆண்டகை யறியாத தென்? இன்று
மாண்டவர் போக மீண்டவரேனும்
95. மாளாவழி நீ யாளாய் என்னக்
கைகுவிப்பதே யலாற் செய்வகை யறியா
அடியேன் என்சொல! ஆ ஆ! விடியில்
வாளா மாளும் மனிதர் தொகுதி
எண்ணி யெண்ணி யெரிகிறது என்னுளம்.
100. எண்ணுதி கருணை! இவர்க்குள் தாய்க்கு ஒரு
புதல்வராய் வந்த பொருநர் எத்தனையோ?
வதுவை முற்றுறு வயவர் எத்தனையோ?
புதுமணம் புரிந்த புருடர் எத்தனையோ?
நொந்த சூலினர் நோவு பாராது
105. வந்து இவண் அடைந்த மள்ளர் எத்தனையோ?
தாய்முகம் வருந்தல் கண்டு அழுந் தன் சிறு
சேய் முக மறவாச் செருநர் எத்தனையோ?
செயிருறு முழந்தாள் சேர்ந்து அழு பாலரைத்
துயிலிடைத் துறந்த சூரர் எத்தனையோ?

புரு. 110. சரி. சரி! இவை யுன் அரசர்க்கு ஆங்கு
சாற்றுது ஒழிந்த தென்?

குடில. சாற்றில் என்?
போற்றான் யார் சொலும் புந்தியுஞ் சற்றும்.
அன்பு இலன்: பிறர் படுந் துன்பஞ் சிறிதும்
அறியா வெறியன். அன்பொடு இம் மாலை
115. குறியா நீ விடு தூதையுங் கொண்டிலன்.
அண்டிய ஜீவராசிகள் அனைத்தையும்
மண்டு அமர் இதில் நின் வை வாள் தனக்கே
இரையிட லொன்றே விரதமாக் கொண்டனன்.
பித்தனொருவன் தன்னால் இத் தமிழ்-
120. நாடெலாம் வெறுஞ் சுடுகாடாய் விடுமே.
ஆவ! இப்பெரும் பாவமும் பழியும்
அஞ்சினேன். அஞ்சினேன். எஞ்சலில் கருணை-
யுருவே! அடியேற்கு ஒரு மொழி கருவையேல்
ஒருவர்க்கேனும் உறா துயரின்றி

125. அரசனும் புரிசையும் அரைநொடிப்போதில் உன்
கரதலமாம் ஒரு கௌசலம்,
காட்டுகேன் அடியேன் கேட்டருள் அரசே! (க)

(நிலைமண்டில ஆசிரியப்பா)

புரு. (தனதுள்) பாதகா! விசுவாச காதகா!
ஆ! ஹா! (சிரித்து)

குடில. அரசன் கைப்படில் ஆங்குளார் யாரும் என்
130. உரை தவறாது உன் குடைக்கீழ் ஒதுங்குவர்.
மங்கல மதுரையும் இங்கு இவர் வழியே
உன் ஆணைக்கீழ் ஒதுங்குதல் திண்ணம்.
தொல்புவி தோற்றியது தொட்டு அரசுரிமை
மல்கிய புவி யிஃது அதனால், "மன்னவன்"
135. என்ற பேரொன்று நீ யீவையேல் என்றும்,
நின் ஆணையின் கீழ் நின்று நீ முன்னர்
வேண்டிய தாரொடு நீருமே யன்றி மற்று
ஈண்டுள எவையே யாயினும் வேண்டிடில்,
சிரமேற் சுமந்து உன் மூரசார் அனந்தைக்
140. கோயில் வாயிலிற் கொணர்ந்து உன் திருவடி
கண்டு மீள்வதுவே கதி யடியேற் காம்.
பண்டு ராகவன் தன் பழம்பகை செற்று
வென்றதோர் இலங்கை விபீஷணன் காத்தவாறு
இன்று நீ வென்ற நாடு இனிது காத்திடுவேன்.

புரு. 145. சமர்த்தன் மெத்தவும்! அமைத்த தந்திரம் என்?

குடில. அரசனது அந்தப் புரமது சேர
யாவரும் அறியா மேவருஞ் சுருங்கை
ஒன்று உளது; அவ்வழி சென்றிடில் அக்கணங்,
கைதவன் கைதியா யெய்துவன் உன் அடி.

புரு. 150. உண்மை?

(சேவகரை நோக்கி) யாரது!

குடில. உதியன் கண்முன்
மெய்ம்மையலாது எவர் விளம்புவர்? (அருள்வரதன் வர)

அருள். அடியேன்!

புரு. கைத்தளை கால் தளை கொடுவா நொடியில்.

(அருள்வரதன் போக)

(குடிலனை நோக்கி) எத்திசை யுளது நீ யியம்பிய சுருங்கை?

குடில. அணிதே! அஃதோ! சரணம் புகுந்த

155. எளியேற்கு அபயம் இயம்புதி யிறைவ!

புரு. அவ்வழியோ நீ யணைந்தனை?

குடில. ஆம்! ஆம்!

செவ்விதின் ஒருமொழி செப்பிடில் உடனே

காட்டுவன் அடியேன்.

(அருள்வரதனும் சேவகரும் விலங்கு கொண்டுவர.)

புரு.(குடிலனைச் சுட்டி) பூட்டுமின்! நன்றாய்!

குடில. ஐயோ! ஐயோ! ஓஹோ! செய்ததென்?

160. மெய்யே முற்றும். பொய்யிலை! பொய்யிலை!

(அருள்வரதன் விலங்கு பூட்ட)

புரு. எத்திசை யுளது அச் சுருங்கை? ஏகாய்!

சித்திர வதையே செய்வேன் பிழைப்பில்!

குடில. தேடியே வந்து செப்பிய அடியேன்

ஓடியோ போவேன்? ஓஹோ! உறுதி

165. முந்தியே தந்திடில்—

புரு. மூடு நின் பாழ் வாய்.

சேரன் விஜயமும் திருடான். அறிகுதி.

(சேவகரை நோக்கி) சூரர் பதின்மர் சூழுக இருபுறம்!

(குடிலனை நோக்கி) நடவாய் உயிர் நீ நச்சிடில். கெடுவாய்!

எத்திறம் பிழைப்பினும் சித்திரவதையே! (உ)

(யாவரும் சுருங்கை நோக்கிப்போக)

ஐந்தாம் அங்கம்: முதற் களம்

முற்றிற்று.

# ஐந்தாம் அங்கம்.

## இரண்டாம் களம்.

---

இடம்: கன்னிமாடத்து ஒரு சார்.

காலம்: யாமம்.

சில தோழிப்பெண்களும் ஒருகிழவியும் அளவளாவியிருக்க.

(நிலைமண்டில ஆசிரியப்பா)

கிழவி. எதுக்கும் இவ் விளக்கும் இச் சிறு செம்பும்
ஒதுக்கி வை அம்மா ! உதவும் வழியில்.

முதல் தோழி. என்னடி கிழவி சொன்னால் அறிகிலே.
போம் வழி அறியோம்! போம் இடம் அறியோம் !
5. மந்திரக் குளிகையோ ! அந்தர மார்க்கமோ !
மூட்டையேன்? முடிச்சு ஏன்? கேட்டியோ தோழி !
காதும் இல்லை ! கண்ணும் இல்லை !
ஏதும் இல்லை ! என் உயிர் இருப்பதோ !

கிழவி. கிழவி பேச்சு ஏற்குமோ கின்னரக்காரிக்கு !
10. படும்போது அறிவை ! இப்படியே பண்டு
முன் ஒரு சண்டையில் உன்னைப் பெறுமுன்
ஓடினேம்—

முதல் தோழி. போடீ ! உன்கதை யறிவோம்.

(கிழவிபோக)

சிரிக்கவா ? என்செய ! சிவனே ! சிவனே !

(நகைக்க)

உ-ம் தோழி. அம்மணி யென் செய்தாள் ? அக்காள் ! அதன்பின்.
15. 'அப்படி யரசன் மீண்டான்.' செப்பாய் !

முதல் தோழி. எப்படிச் செப்ப யான் ? ஏந்திழை பட்டபாடு
அய்யோ ! அத் துயர் தெய்வமே யறியும் !
மன்னவன் வாசல் கடந்தான் எனுமுனந்
தன் நிலை தளர்ந்தாள், சாய்ந்தாள். வாணியும்

20. அருகுள செவிலியும் யானுமாய் விரைவில்
தாங்கினேம்; பாங்குள அமளியிற் சேர்த்தோம்.
மூச்சிலை; பேச்சிலை; முகமெலாம் வெயர்வை.
இட்ட கை யிட்ட கால் இட்ட அப்படியே.
இப்படி முடிந்ததே! இனி யென் செய்வோம்!
25. தப்புமோ இவ் வொரு தத்தும் என்று எண்ணி
ஏங்கினேம்; தியங்கினேம்; பாங்கிருந்து அழுதோம்

உ-ம் தோழி. ஐயோ தெய்வமே! அப்போது அவளுயிர்
பட்டபாடு எதுவோ! கட்டம்! கட்டம்!

முதல் தோழி. விதியிது! அலது இது கதையிலும் உளதோ?
30. நொந்தபுண் ணதனிலே வந்திடும் நூறு இடி.
தந்தை தேறிடத் தன் துயர் மறைத்து
மகிழ்ச்சி காட்டினள், வந்தது இத் தளர்ச்சி.
மூடிடில் தீயும் மூளும் மும் மடங்காய்.

உ-ம் தோழி. எத்தனை வேதனை! எத்தனை சோதனை!
35. யாதும் அறியாட்கு ஏது இத் துணிபு?
ஓதிய கட்டுரை யொருமுறை யினியும்
நவிலுதி அக்காள்!

க-ம் தோழி. நங்கை நன்மொழி யென்
செவியிடை யினியும் மணிபோல் திகழும்!
அரசனை யடிபணிந்து ஒரு சார் ஒதுங்கி
40. நீக்கமில் அன்பும் ஊக்கமும் களிப்பும்
காட்டிய மதிமுகங் கோட்டியே நின்ற
தோற்றம் என் கண்ணின் மாற்றுதல் அரிதே!
"என்னே இதற்கும் யோசனை யெந்தாய்!
கொன்னே வருந்தலை! கொள்கையிற் பிறழா
45. நீதி நம்பால் எனின் நேர்வது ஜயமே.
ஏது அதற்கு ஐயம்? இது விட்டு அடிமை
பெயர்வது பெரிதல. பேருலகு அதற்குத்
துயர் வரும் எல்லை நம் துயர் நோக்குதலோ
பெருமை! அண்ணிதே முனியிடம்! கருதிய
50. பிரிவோ ஒருதினம்! குருவுந் தந்தையுஞ்
சமமெனிற் சுந்தர விமலன் தன் திருப்

பாதாரவே போதாதோ துணை ?
ஆயினும் அத்தனை யவசிகமாயின்,
ஆகுக ஆஞ்ஞைப்படியே ! தடையிலை.
55. அன்னையும் நின்னை யன்றி வேறு அறியேன்.
உன்னதே இவ் வுடல். உன் திரு வுள்ளம்
உன்னிய படியெலாம் உவப்பச் செய்குவன்.
அடிமையின் கவலையால் அரசர்க்கு இயல்பாங்
கடமையிற் பிறழுங் கலக்கம் விலக்குவை !
60. அன்பாம் உன்பால் ஐய ! உன்மகள்
வேண்டும் வரமெலாம் யாண்டும் இவ் வொன்றே."

உ-ம் தோழி. மொழியோ இதுவும் ? ஆ ஆ ! ஆ ஆ !
இதுவெலாங் காணவோ எழுதினன் பிரமன் ?

க-ம் தோழி. எதுவெலாங் காணவோ இருப்பது இக் கண் ?

உ-ம் தோழி. 65. என் செய்கின்றனள் இப்போது ஏழை ?

க-ம் தோழி. வஞ்சி இவ் அறையே வருவள் வல்லே !
ஏதோ எழுதுகின்றனள். வாணி
கோதி நின்று ஆற்றுகின்றனள் கூந்தல்.

உ-ம் தோழி. நீராடினளோ இந் நிசி ?

க-ம் தோழி. ஆம் ! ஆம் !
70. எழுந்து வாச நீ ராடி முன்சாத்து
அழுந்திய அன்று தான் அணிந்த வெண்பட்டினைக்
கொடுவரப் பணித்து அங்கு அதுவே தரித்து
நெடுநுதல் திலகமும் நேர்படத் தீட்டி,
அன்றிரா அணிந்த முத்தாரமும் அணிந்து,
75. நின்று தன் நிலையெலாம் ஆடியில் நோக்கி,
'நன்றே நங்காய் ! வாணி ! நவிலுதி !
அன்றுபோ லன்றே இன்று என் நிலைமை !'
என்று சிறுமுறுவலித்தனள். என்சொல !
உருவமும் உடையும் உரையும் நடையும்
80. சருவமும் பாவனை பண்ணியும்—(அழ)

(மனோன்மணியும் வாணியும் வர)

உ-ம் தோழி. அஃதோ !
வந்தனள். காணுதி. வாணியும் பின் உளள்.

மறைகுவம் அவ் அறை. வருக இவ் வழியே !
(தோழிமார் போக.)

மனோன்மணி. எந்தைபோல் தயாநிதி யெங்கணும் இல்லை.
வந்தனம் வழங்கவும் வாய்கூசுவதே !
85. ஏதோ ஒருவிதம் எழுதினேன் என்க !
வாணி ! உன் மணத்திற்கு இசைந்தான் மன்னன்.
காணாய் ஈதோ அதற்குள கட்டளை.
(திருமுகங் காட்ட: வாணி வாசிக்க)
சொன்னேன் அன்றே வாணீ ! முன்னமே.
அன்னை தந்தையர் அன்பு அறியார் சிறார்.

வாணி. 90. இத் தருணத்தில் இது வென் ? அம்மணி !
சத்தியம். எனக்கு இது சம்மதம் அன்று.
நினைப்பருந் துயரில் நீ யிவண் வருந்த
எனக்கு இது தகும் தகும் ! ஏதிது தாயே !
உன்மனப்படி யெலாம் உறுங்காற் காண்குவம்.

மனோ. 95. என்மனப்படி யெது ? எனக்கு ஒரு மனதோ ?
எந்தையின் மனப்படி யென்மனப் படியே.
வந்த இச் சுரத்திடை மாண்டது என் சித்தம்.

வாணி. ஆயினும் அம்மா ! யார் இஃது அறியார் ?
பாயிருள் தொகுதியும் பரிதியும் கொடிய
100. வெஞ்சினக் கழுகும் அஞ்சிறைக் கிளியும்
பொருந்தினும் பொருந்தீர். ஐயோ ! இத் தகைப்
பெருந்துயர்க்கு எங்ஙனம் இசைந்தனை யென்க.
என்னை யுன் நினைவோ ! என்னை யுன் துணிபோ !
இன்னன மகிழ்ச்சியில் என்மனமே குறை ! (அழ)

மனோ. 105. வருந்தலை வாணி ! வா வா. இன்னும்
தெரிந்திலை. ஐயோ ! சிறுமியோ நீயும் ?
உண்மை யான் உரைத்தேன். உணருதி. உறுதி.
என் மனமாரவே யிசைந்தேன். மெய்ம்மை.
ஏதென எண்ணினை இவ்வுயிர் வாழ்க்கை ?
110. தீது அற இன்பந் துய்ப்ப நீ யெண்ணில்
ஈது அல அதற்காம் உலகம். இமையவர்
வாழ்க்கையிலுந் துயர் வந்துறும் எனில் இவ்

யாக்கையில் அமையுமோ நீக்கமில் இன்பம்.
எனக்கு எனக்கு என்றெழும் இச்சையாதிகளெனும்
115. மனக் களங்கங்களாம் மாசுகள் அனைத்துந்
தேய்த்து அவை மாற்றித் திகழொளி யேற்றி
மண்ணிய மணியாப் பண்ணிட என்றே
வைத்த இக் கடிய வாழ்க்கையாஞ் சாணையை
பைத்த பூஞ் சேக்கையாப் பாவித்து உறங்க
120. யத்தனஞ் செய்திடும் ஏழையர் போல,
என்ன நீ யெண்ணினை! வாணி! இந்தச்
சுக விருப்பே நமைத் தொழும்பு செய் பந்தம்.
தவமே சுபகரம். தவ மென்? உணருவை?
உடுப்பவை யுண்பவை விடுத்து அரணடைந்து
125. செந்தீ யைந்திடைச் செறிந்து அமைந்து உறைதல்
ஆதியா ஓதுப அல்ல. அவற்றைத்
தீதறு தவமெனச் செப்பிடார் மேலோர்.
இவ் வுயிர்வாழ்க்கையில் இயைந்திடுந் துயரம்,
ஐயோ! போதாது என்றோ அன்னோர்
130. போனகந் துறந்து கான்கம் புகுந்து
தீயிடை நின்று சாவு அடைகின்றார்?
தந்தை தாய் ஆதியா வந்த தன் குடும்ப
பந்த பாரத்தினைப் பேணித் தனது
சொந்தமாம் இச்சைகள் துறந்து மற்றவர்க்கு
135. எந்த நாளுஞ் சுகம் இயைந்திடக் கடமையின்
முந்துகின்றவரே முதல் தவ முனிவர்.

வாணி. அத்தகைத் தவம் இங்கு அடியேன் தனக்கும்
ஒத்ததே யன்றோ?

மனோ. ஒத்ததே யார்க்கும்.
மேம்படக் கருதிடில் ஓம்புதி நீயும்.
140. அடுத்தவர் துயர்கெடுத்து அளித்தலே யான் இங்கு
எடுத்த நல் தவத்தின் இலக்கணம் ஆதலின்,
நடேசனை நச்சும் நின் நன்மண மதுவும்
விடாது எனை யடுத்த வீர நாரணன் தன்
கடுஞ்சிறை தவிர்த்தலும் கடனெனக் கருதி
145. வழுதினேன். இஃதோ! வழுதியும் இசைந்தான்.

என் கடன் இதுவரை : இனியுன் இச்சை.

வாணி. ஆயிடிற் கேட்குதி அம்மணி! என் சூள்.
கண்டவர்க் கெல்லாம் பண்டைய வடிவாய்
நீ யிவண் இருக்க நின்னுளம் வாரி
150. வெள்ளிலா மெள்ள விழுங்கி யிங்ஙனம்
வேதகஞ் செய்த போதக யூதபம்,
பேரிலா வூரிலாப் பெரியோன் அவன் தான்
யாரே யாயினும் ஆகுக, அவனை நீ
அணையும் நாள் அடியேன் மணநாள். அன்றேல்,
155. இணையிலா உன்னடிக்கு இன்றுபோல் என்றும்
பணிசெயப் பெறுவதே பாக்கியம் எனக்கு.
கடமையும் பிறவுங் கற்றறியேன் விடை
மடமையே யாயினும் மறுக்கலை மணியே!

மனோ. பேதைமை யன்றோ ஓதிய சபதம்?
160. ஏதிது வாணி! என்மணந் தனக்கோ,
இனி அரை நாழிகை. இதற்குள் ஆவதென்?
அன்பின் பெருக்கால் அறைந்தனை போலும்.
மன்பதை யுலகம் வாஞ்சா வசமே.

வாணி. உடலலால் உயிரும் விழியலால் உணர்வும்
165. கடபட சடமலாற் கடவுளும் இலையேல்
வேண்டிய விளைக! விசனம் என்? அன்றேல்
காண்டி யவ்வேளை கருணையின் இயல்பே. (க)

(இருவரும் போக)

ஐந்தாம் அங்கம் : இரண்டாம் களம்

முற்றிற்று.

# ஐந்தாம் அங்கம்.

## மூன்றாம் களம்.

---

இடம்: அரண்மனையில் மணமண்டபம்.

காலம்: நடுநிசி.

அமைச்சர் படைவீரர் முதலியோர் அரசனை எதிர்பார்த்து நிற்க.

முதற்படைத் தலைவன். (நிலைமண்டில ஆசிரியப்பா.)
அடிகள்பின் போயினர் யாவர்? அறிவீர்?

உ-ம் படை. நடராசனை நீர் அறியீர் போலும்!

முதற்படை. அறிவேன்! ஆ! ஆ! அரிவையர் யாரே
வெறிகொளார் கண்ணில்! வீணில் வாணியைக்
5. கெடுத்தான் கிழவன்.

ங-ம் படை. அடுத்தது அம் மணமும்!
தெரியீர்போலும்!

முதற்படை. தெரியேன். செய்தி யென்?

ங-ம் படை. கோணிலா நாரணன் கொடுஞ்சிறை தவிர்த்தலும்
வாணியின் மனப்படி மன்றல் நடத்தலும்
இவ் வரம் இரண்டும் அம்மணி வேண்ட
10. அளித்தனன் அனுமதி களிப்புடன் அரசன்.

முதற்படை. இருதிரை யிட்டவாறு இப்போது அறிந்தேன்.
ஒருதிரை வாணிக்கு ஒருதிரை மணிக்கே.

ங-ம் படை. எத் திரை தாய்க்கென்று இயம்புதி. கேட்போம்.

முதற்படை. இத் திரை தாய்க்காம்.

ங-ம் படை. சீ! சீ! அத் திரை.

உ-ம் படை. 15. எத்திரை யாயினென்? என் இரைகின்றீர்?

முதற்படை. இருதிரை வந்தவாறு இதுவே யாயினும்
ஒருதிரைக் கொருதிரை யெத்தனை தூரம்?

ங-ம் படை. அதோ அவன் அறிகுவன். அறிந்திதோ வருவேன்.
(ங-ம் படைஞன் மற்றோர் இடம் போக.)

முதற்படை. ஐயோ! பொய்யறும் அன்னை அம்மணிக்கும்

20. பொய்யன் பலதேவனுக்குமோ பொருத்தம் ?

உ-ம் படை. வருத்தம் ஏன் உனக்கு ? மன்னன் திருவுளக்
கருத்து அனுசரித்து நாம் காட்டலே கடமை.

(ரு-ம் படைஞன் மீண்டுவர)

ரு-ம் படை. இப்புறம் வருதி. செப்புவன் ரகசியம்.

(முதற்படைநோக்கி) சத்தியம் செய்தபின் சாற்றினன். நீயும்

25. எத்திறத்தோர்க்கும் இயம்பலை. பத்திரம் !
அத் திரை மணத்திற்கு அன்று. மற்று அப்புறம்
நெருங்கிய சுருங்கை பொன்று உளதாம். அவ்வழி
செல்லில் வெகுதொலை செலுமாம். இப்போர்
வெல்லும் வரையும் அவ்வழி மணந்தோர்

30. இருவரும் எய்தி வாழ்ந்திருப்பராம்.

முதற்படை. சரி ! சரி !
பொருவரும் புத்திமான் குடிலன். எத்தனை
விரைவினிற் சமைத்தான் ! வெகுதிற முடையான்.

ரு-ம் படை. இப்போது அன்று அது; நகராரம்பம்
எப்போது அப்போதே வருந் துயரம்

35. கருதி முன் செய்தனன்.

முதற்படை. ஒருவரும் அறிந்திலம் !

(முருகன்வர)

ரு-ம் படை. யாரது ? முருகனோ ? நாரணன் எங்கே ?

முருகன். நாரணன் அப்புறம் போயினன்; வருவன்.

ரு-ம் படை. பிழைத்தீர் இம்முறை.

முருக. பிழைத்திலம் என்றும் !

ரு-ம் படை. அத்திரைச் செய்தி யறிவாய். வைத்தது ஆர் ?

முருக. 40. வைத்தது ஆர் ஆயினென் ? வெந்தது வீடு !

(இருவரும் நகைக்க)

உ-ம் படை. வாயினை மூடுமின். வந்தனன் மணமகன்.

முருக. ஈயோ வாயில் ஏறிட நாயே !

முதற் படை. அரசனும் முனிவரும் அதோ வருகின்றார்.

(ஜீவகன், சுந்தரமுனிவர், கருணாகரர், நிஷ்டாபரர்,
பலதேவன், நடராஜன், நாராயணன், முதலியோர் வர.)

ஜீவகன். இருமின் இருமின்! நமர்காள் யாரும்!

(ஜீவகன் முனிவர் முதலியோர் தத்தம் இடத்து இருக்க)

45. கொலுவோ கொல் இது! மணவறை! இருமின்.
பலதேவரே நும் பிதா இதுகாறும்
வந்திலர் என்னை?

பலதேவன். மன்னவர் மன்ன!
அந்தியிற் கண்டேன் அடியேன். அதன்பின்
ஒருவருங் கண்டிலர். தனி போயினராம்.

ஜீவக. 50. இரும் இரும் நீரும். எங்கு ஏகினும் நம்
காரியமே யவர் கருத்து எப் பொழுதும்.

(நாராயணனை நோக்கி)பாரீர் அவர் படும் பாடு!

நாராயணன். பார்ப்பேன்
சத்தியஞ் சாவிக்குமேற் சாற்றியபடியே!

ஜீவக. இத்தகை யுழைப்போர் எப் புவனமும் இலை.
55. எண்ணி நிச்சயித்த இத் தொழில் இனி யாம்
பண்ணற்கு என் தடை? சுவாமி! அடிகள்
தந்த நன்முகூர்த்தம் வந்ததோ?

சுந்தரர். வந்தது!

(புருஷோத்தமனும், குடிலனும், அருள்வரதன் முதலிய மெய்காப்பாளருடன் கற்படைவழி வர.)

புருஷோத்தமன். நின்மின்! நின்மின்! பாதகன் பத்திரம்.

(கற்படையில் அருள்வரதனை நோக்கி) என் பின் இருவர் வருக.

(தனதுள்) இது வென்?

60. இந் நிசி யெத்தனை விளக்கு! ஏதோ
மன்னவை போலும்! மந்திரா லோசனை!
இவர் சுந்தரரே! அவர் நடராஜர்!
இவர்கள் இங்கு உளரோ! எய்தியது எவ்வழி?
இத் திரை யெதற்கோ? அத் திரை யெதற்கோ?
65. இத்தனை கோலாகலம் என் சபைக்கு?
மாலையுங் கோலமுங் காணின் மணவறை
போலாம். அறிந்து இனிப் போவதே நன்மை.
மந்திரமாயின் மற்று அதும் அறிவோம்.

இந்த நற்றிரை நமக்கு எத்தனை யுதவி !
(திரைக்குப்பின் மறைந்து நிற்க.)

ஜீவகன்.

70. என் குலங் காக்க வென அருள் பழுத்துக்
கங்கணங் கட்டிய கருணை நிதிகாள் !
மனத்திறத் தாழ்ந்த மதி மந்திரிகாள் !
எனக்கென வுயிர் வாழ் என் படைவீரர்காள் !
ஒருமொழி கூறிட அனுமதி தருமின்.
75. ஆடையின் சிறப்பெலாம் அணிவோர் சிறப்பே;
பாடையின் சிறப்பெலாம் பயில்வோர் சிறப்பே;
எள்ளரு மதிகுலச் சிறப்பெலாம் எமர்காள் !
கள்ளமில் நம்முனோர் காப்பின் சிறப்பே.
ஆதலில் உமக்கு உபசாரம் யான் ஓதுதல்,
80. மெய்க்கு உயிர் கைக்கு நா விளம்புதல் மானும்.
ஈண்டு காத்திடுவல் யான் எனக் கடன் பூண்ட நம்
மதிகுல மருந்தாய் வாய்த்த என் சிறுமி
விதைபடும் ஆலென விளங்கினள். அவளைக்
காத்திடும் உபாயங் கண்டிட இச் சபை
85. சேர்த்தனன் என்பது தெரிவீர் நீவிர்.
இன்று நாம் பட்டதோர் இழுக்கு இவ் வைகறை
பொன்றியோ வென்றோ போக்குவம் திண்ணம்.
ஒருகுலத் தொருவன் ஒருமரத் தோரிலை.
அப்படி யன்று நங் கற்பகச் சிறு கனி !
90. தப்பிடின் மதிகுலப் பெயரே தவறும்.
அரிய இச் சந்தியைப் பெரிதுங் கருதுமின்.
இருந்திடச் சிறியள் : அபாயம்! தனியே
பிரிந்திடப் பெரியள் : பிழை! அஃது அன்றியுங்
குலமுடிவு எண்ணிக் குலையும் நம் உளத்திற்கு
95. இலையதனாலோர் இயல் சமாதானம்.
ஆதலில் அரிய தற்காலத்து இயல்பை
யாதென நீவிர் ஆய்ந்து யான் இப்போது
ஓதிடும் உபாயத்தால் உறு நன்மையும்
தீமையும் நன்றாய்த் தெரிந்து செப்புமின் !
100. குடிலனை யறியார் யார் இக் கொற்றவை ?

உ-ம் படை. குடிலனை யறியுமே குவலயம் அனைத்தும்.

ஜீவக. அறிந்திடில் இறும்பூது அணையார் யாவர்?
மதியுளர் யார் அவன் மதி அதிசயித்திடார்?
நெஞ்சுளார் யார் அவன் வன் திறற்கு அஞ்சார்?
105. யார் வையார் அவனிடத்து ஆரா ஆர்வம்?
உண்மைக்கு உறைவிடம்: திண்மைக்கு அணிகலம்.
சத்திய வித்து: பத்தி யுன்மத்தன்.
ஆள்வினை தனக்கு ஆள்: கேள்வி தன் கேள்வன்.
ஏன்மிக? நமர்காள்! இந் நடு நிசியிலும்
110. யான் அறியாது உழைக்கின்றனன் எனக்கா.
நன்றே யிங்கு அவன் இலாமையும்: அன்றேல்
தற்புகழ் கேட்க அற்பமும் இசையான்.

புரு. (தனதுள்) எத்தனை களங்கமில் சுத்தன்! கட்டம்!

ஜீவக. பற்பல பாக்கியம் படைத்துளர் பண்டுளோர்.
115. ஒப்பறும் அமைச்சனை யிப்படி யொருவரும்
முன்னுளோர் பெற்றிலர்: பின்னுளார் பெறுவதும்
ஐயமென்று உரைப்பேன், அன்னவன் புதல்வன்
மெய்ம்மையும், வாரமும், வீரவாசாரமும்,
பத்திசேர் புத்தியும், யுத்திசேர் ஊக்கமும்
120. உடையனாய் அடையவுந் தற்பிரதிமைபோல்,
இனி யொரு தலைமுறை நனி சேவகஞ்செய
இங்குவீற் றிருந்திலனாயின். எமர்காள்!
எங்கு நீர் கண்டுளீர் இச் சிறு வயதிற்
பலதேவனைப்போல் பலிதமாஞ் சிறுதரு?

உ-ம் படை. 125. இலையிலை யெங்கும்! இவர்போல் யாவர்!

ஜீவக. எனது அரசுரிமையும் எனது அரசியல்பும்
தமது ஆருயிர்போல் தாம் நினைந்து இதுவரை
எவ்வளவு உழைத்துளார் இவ் இருவருமெனச்
செவ்விதின் எனைவிட நீவிரே தெரிவீர்.
130. இக் குலம் அவர்க்கு மிக்கதோர் கடன்பாடு
உடையதென்று ஒருவரும் அயிர்ப்புறார். அதனால்
தடையற அக் கடன் தவிர்க்கவும் நம்முளம்
கலக்கிடும் அபாயம் விலக்கவும் ஒருமணம்
எண்ணினேன். பண்ணுவேன் இசைவேல் நுமக்கும்.

135. மணவினை முடிந்த மறுகணம் மணந்தோர்
இருவரும் இவ்விடம் விடுத்து நம் முனிவரர்
தாபதஞ் சென்று தங்குவர். இத் தகை
ஆபதங் கருதியே யருட்கடலடிகள்
தாமே வருந்திச் சமைத்துளார் அவ் இடம்
140. போமாறு ஒருசிறு புரையறு சுருங்கை.
அவ்வழி யிருவரும் அடைந்தபின், நம்மைக்
கவ்விய கௌவையும் கவலையும் விடுதலால்,
வஞ்சிய னொருவனோ, எஞ்சலில் உலகெலாம்
சேரினும் நம்முன் தீச்செறி பஞ்சே.
145. இதுவே யென்னுளம். இதுவே நமது
மதிகுலம் பிழைக்கும் மார்க்கமென்று அடிகளும்
அருளினர் ஆஞ்ஞை. ஆயினும் நுமது
தெருளுறு சூழ்ச்சியும் தெரிந்திட விருப்பே. (க)

(நேரிசை யாசிரியப்பா.)

உரையீர் சகடரே யுமது அபிப்பிராயம்.

சகட. 150. அரசர்குலம் அன்று. ஆயின் என்? சரி சரி!

நாரா. (தனதுள்) மருகன் தப்பிய வருத்தம் போலும்.

ஜீவக. குலந் தேர்வது நற் குணந் தேர்வதுவே.
பெயரால் என்னை? பேயன் இவ் வஞ்சியான்
பெயரால் அரசன்! செயலாற் புலையன்!

உ-ம் படை. 155. செய! செய! சரி சரி! தெளிந்தோம்! தெளிந்தோம்!

நாரா. மனிதரால் ஆவதொன்று இல்லை. மன்னவா!
இனியெலாம் ஈசனது இச்சை.

சகட. சரி! சரி!

யாவரும். சம்மதம்! சம்மதம்! சர்வ சம்மதமே!

ஜீவக. வாராய்! நாரண! ஆனால் அப்புறஞ்
160. சென்று நம் மனோன்மணிச் செல்வியை யழைத்து
மன்றல் திரைப்பின் வரச் செய்.

(நாராயணன் போக.)

யார்க்கும்
சம்மதமெனில் இச் சடங்கினை முடிப்போம்.
வம்மின்! இனி யிது மங்கல மணவறை.

கவலை யகற்றுமின் கட்டுடன்! பனிநீர்த்
165. திவலை சிதறுமின்! சிரிமின்! களிமின்!
இன்று நாம் வென்றோம் என்றே யெண்ணுமின்!
இனி நாம் வெல்லற்கு என் தடை? தினமணி
வருமுன் ஏகுவம். அரைநாழிகைத் தொழில்!
ஆற்றுவம் அரும்போர் கூற்றுமே யஞ்ச.
170. நாளை நல்வேளை: நம் மணி பிறந்த நாள்.
பாரீர்! பதினாறாண்டும் இந் நாளில்
ஓரோர் மங்கல விசேடம்!

சகட. ஓ! ஓ!
சரி! சரி! ஒவ்வொரு வருடமும் அதிசயம்!
(நாராயணன் திரும்பிவர — மனோன்மணி வாணி முதலிய
தோழியருடன் திரைப்பின் வந்து நிற்க.)

நாரா. இட்ட நின் கட்டளைப்படியே யெய்தினர்.

ஜீவக. 175. மற்று இவர் கவலை மாற்றிட ஒரு பா
(நாரணனைநோக்கி) சற்று இசைத்திடுவளோ வாணி? சாற்றுதி.

(கொச்சகக் கலிப்பா.)

வாணி. நீர்நிலையின் முதலையின்வாய் நிலைகுலைந்த வொருகரிமுன்
(பாட) ஓர்முறை யுன்பெயர் விளிக்க வுதவினைவந் தெனவுரைப்பர்;
ஆர்துயர அளக்கர் விழும் அறிவிலி யான் அழைப்பதற்குன்
பேர்தெரியேன் ஆயிடினும் பிறகிடல் நின் பெருந்தகையோ. (1)

பாரரசர் துகிலுரியப் பரிதவிக்கும் ஒரு தெரிவை
சீர்துவரை நகர்கருதிச் சிதைவொழிந்தாள் எனவுரைப்பர்;
ஆர்துணையும் அறவிருக்கும் அறிவிலி யான் அழைப்பதற்குன்
ஊர்தெரியேன் ஆயிடினும் உறுதிதரல் உனக்குரித்தே. (2)

மறலிவர மனம்பதறும் மார்க்கண்டன் உனது லிங்கக்
குறிதழுவி யழிவில்வரங் கொண்டான்முன் எனவுரைப்பர்;
வெறிகழுமிப் பொறியழியும் வெம்பாவி விரவுதற்குன்
நெறியறியேன் ஆயிடினும் நேர்நிற்றல் நினதருளே. (3)

சுந்தரர். எதுவோ இதனினும் ஏற்புடைப் பிரார்த்தனை?
மந்திரம் தந்திரம் வழங்கு நற் செபம்
யாவையும் இதுவே. பாவாய்! மனோன்மணீ!
180. வருதி யிப்புறம். வாங்குதி மாலை.

(மனோன்மணி மணமாலைகொண்டு பலதேவனெதிர்வர)
ஒருதனி முதல்வன் உணர்வன் உன்னுளம்.
உன் அன்பு உண்மையேல் இன்னமுங் காப்பன்.
(புருஷோத்தமன் திரைவிட்டு வெளிவந்துநிற்க.)

முதற் படை. ஆற்றேன்! ஆற்றேன்! ஐய! இத் தோற்றம்.
௨-ம் படை. ஊற்றிருந்து ஒழுகி யுள் வறந்தது கண்.
௩-ம் படை. 185. அமையா நோக்கமும் இமையா நாட்டமும்,
ஏங்கிய முகமும் நீங்கிய இதழும்,
உயிரிலா நிலையும் உணர்விலா நடையும்
பார்த்திடிற் சூத்திரப் பாவையே. பாவம்!
(மனோன்மணி புருஷோத்தமனைக் காண :
உடன் அவன் நிற்குமிடமே விரைவில் நடக்க.)

யாவரும். எங்கே போகிறாள்? இது யார்? இது யார்?
புரு. 190. இங்கோ நீ புலே! என்னுயிரமிர்தே!
(புருஷோத்தமன் தலைதாழ்க்க : மனோன்மணிமாலைசூட்டி
அவன் தோளோடு தளர்ந்து மூர்ச்சிக்க.)

சுந்தரர். மங்கலம்! மங்கலம்! மங்கலம்! உமக்கே!
யாவரும். சோரன்! சோரன்! சேரன்! சோரன்!
நிஷ்டாபரர். கண்டேன்! கண்டேன்! கருணாகரரே!
(கருணாகரரைத் தழுவி)

யாவரும். பற்றுமின்! பற்றுமின்! சுற்றுமின்! எற்றுமின்!
பலதே. 195. கொன்மின்! கொன்மின்!
(யாவரும் புருஷோத்தமனைச் சூழ : சுந்தரர் கூட்டம் விலக்க)

சுந்தரர். நின்மின்! நின்மின்!
(அருள்வரதனும் மெய்காப்பாளரும் வர)

அருள்வரதன். அடையின் அடைவீர் யமபுரம். அகன்மின்!
(புருஷோத்தமனையும் மனோன்மணியையுஞ் சூழ்ந்து நின்றுகாக்க)

யாவரும். படையுடன் பாதகன்! (பின்னிட)
அருள். (விலங்குடன் குடிலனைக்காட்டி) பாதகன் ஈங்குளான்.
ஜீவக. குடிலா வுனக்கும் இக் கெடுதி யேன்? ஐயோ!
அடிகாள்! இதுவென்! இதுவென்! அநீதி!
200. அறியேன் இச் சூது அறியேன்! அறியேன்!

சுந்தர. பொறு! பொறு! ஜீவக! அறிகுதும் விரைவில்!

புருஷோத்தமன். வஞ்சியான் வஞ்சியான்! மன்னவ! உன்சொல்
அஞ்சினேன். சூது உன் அமைச்சன் செய்கை.
சுருங்கையின் தன்மை சொல்லி யென்னை யிங்கு
205. ஒருங்கே யழைத்தான் உன்னகர் கவர.
உன் அரசுரிமையும் உன் நகர் நாடும்
என்னிடம் இரந்தான் இச் சூதிதற்கா!
ஓதிய சுருங்கையின் உண்மைகண்டு இவன் தன்
சூதும் துரோகமும் சொலி யுனைத் தெருட்ட
210. எண்ணி யான் வந்துழி யிவ்வொளி விளக்கும்
பண்ணியல் பாட்டும் பழைய புண்ணியமும்
தூண்டிட ஈண்டு மற்று அடையவும், யாண்டும்
எனது உயிர் அவாவிய இவ் அரு மருந்தை
நனவினிற் காணவும் நண்ணவும் பெற்றேன்.
215. பிரிகிலம் இனி மேல். உரிய நின் உரிமை
யாதே யாயினும் ஆகுக. ஈதோ!
மீள்குவன். விடைகொடு. நாளையும்
வேட்பையேற் காண்போம் ஞாட்பிடை நாட்பே.(உ)

ஜீவக. உண்மையோ? குடிலா! உரையாய்!—

(குடிலன் முகங்கவிழ்த்து நிற்க)

நாரா. இதுவும் நின்
220. உண்மையோ! மௌனம் ஏன்?

யாவரும். ஓகோ! பாவி!

நாரா. படபடத்திடு நின் பாழ்வாய் திறவாய்!

சுந்தரர். விடு விடு! விசாரணைக்கு இதுவன்று அமையம்!
நன்மையே யாவும் நன்மையாய் முடியின்.
வாராய் ஜீவக! பாராய் உன் மகள்
225. தாராத் தன்னிரு கை தோள் சூட்டி
எண்படு மார்பிடைக் கண்படும் நிலைமை.
இருமனம் ஏன் இனி? என்றும் இப்படியே
மருகனும் மகளும் வாழ்க! வாழ்த்துதியே.

ஜீவக. கண்மணி! அதற்குள் கண்வளர்ந்தனையோ!
230. உன்னையும் மறந்து உறங்குதியேல் இனிமேல்

என்னை யெங்கு எண்ணுவை? இறும்பூது இருவரும்
ஒருவரை யொருவர் உணர்ந்தமை!

(மனோன்மணி திடுக்கிட்டு விழிக்க)

வெருவலை! மணியே! பிரியீர் இனியே. (ரு)

(வாழ்த்து மருட்பா.)

பள்ள வுவர்க் கடலிற் பாய்ந்தோடும் வெள்ளமென
உள்ள முவந்தோடி யொன்றுனய் - விள்ளா
மணியின தொளியும் மலரது மணமும்
அணிபெறு மொழியின் அருத்தமும் போல,
இந்நியாக எஞ்ஞான்றும்
மன்னிய அன்புடன் வாழ்மதி சிறந்தே!

(யாவரும் வாழ்த்த)

ஐந்தாம் அங்கம்: மூன்றும் களம் முற்றிற்று.

---

கலித்துறை.

சிறிதாயினும் பற்றிலாது கை யற்ற திருமகள் தன்
குறியாந் தலைவன் குடிலன் பின் எய்திய கொள்கை கண்டோர்
அறிவாம் எனும் நம் அகங்கர மாறும் அவத்தையினிற்
செறிவர் யிருக்குந் திருக்கு வெளிப்படுஞ் சீரிதுவே.

## ஐந்தாம் அங்கம் முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| ஆசிரியப்பா | 6-க்கு | அடி | 569 |
| வெண்செந்துறை | 6-க்கு | ,, | 12 |
| கொச்சகக்கலிப்பா | 3-க்கு | ,, | 12 |
| மருட்பா | 1-க்கு | ,, | 6 |
| ஆகப் பாக்கள்: | 16-க்கு | ,, | 599 |

---

| | | |
|---|---|---|
| பாயிரம் | அடி | 57 |
| அங்கம் 5-க்கு | ,, | 4445 |

ஆக இந்நாடகத்துள்வந்த அடிகள் 4502.

## மனோன்மணீயம்

முற்றிற்று.



# APPENDIX I.
## EXPLANATORY NOTES
## அநுபந்தம்—I.
## விவரணக் குறிப்புகள்.

[ ] இவ் அடையாளத்துட் காணப்படுபவை ஆசிரியரவர்கள் முதற் பதிப்பில் எழுதிச்சேர்த்துள்ளனவாகும்.

மு-ப. = முதற் பதிப்பிற்கண்ட பாடம் ; ப-ப. = பரீக்ஷைக்கு ஏற்பட்ட பகுதிகளில் ஆசிரியரவர்கள் திருத்திய பாடம்.

---

### பாயிரம்.

தரவு—1. கடலாடையுடுத்த நிலமடந்தையின் வதனம் போல்கின்றது இப் பரதகண்டம். அவ்வதனத்திற் பிறைநுதல் போல்கின்றது தக்ஷிணதேசம். அந்நுதலில் இட்ட திலகம் போல்கின்றது தமிழ் நாடு. அத்திலகத்தின் வாசனை போல்கின்றது தமிழ்ப் பாஷை.

2. பரம்பொருள் இருந்தபடியிருப்பதுபோல், உலகவழக்கு அழிந்தொழிந்து சிதையாது இருந்தபடியிருக்கும் உன் இளமைத்திறம். உலகவழக்கு-உலகில் பேசப்பட்டு வழங்கும் தன்மை. *Cf* தாயுமானவர்: 'அகிலாண்டகோடியீன்ற—அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசும் ஆனந்தரூபமயிலே'–மலைவளர்காதலி.–(5)

தாழிசை. 1. ஒருகாலத்தில் மித்திரவருணர்கள் பேரழகுவாய்ந்த ஊர்வசியைக் கண்டார்கள். கண்டமாத்திரத்தில் அவர்களிடமிருந்து ரேதஸ் ஸ்கலிதமாயிற்று. அதில் பாதி ஒரு குடத்திலும் பாதி ஜலத்திலுமாக விழுந்தது. குடத்தில் விழுந்ததினின்று அகஸ்தியரும், ஜலத்தில் விழுந்ததினின்று வஸிஷ்டரும் பிறந்தார்கள். இதனால் அகஸ்தியருக்குக் குடமுனியென்ற ஒரு பெயருமுண்டு. உலகைவருத்திக்கொண்டிருந்த அசுரர்கள் கடலில் ஒளித்துக்கொள்ள, இந்திரனது வேண்டுகோளின்படி அகஸ்தியர் கடல் நீரையுண்டு அசுரர்களை வெளிப்படுத்தினர். இவர் நைமிசாரணியமுனிவர்களோடு மாறுபட்டுத் தென் திசைக்கு வந்து பொதிய மலையில் இருந்து முருகக்கடவுளை வழிபட்டு, அவரது அனுக்கிரகத்தால் தமிழையுணர்ந்தார். சிவபிரான் உபதேசித்தாரென்ற கதை வரலாறுமுளது.

தாழிசை–2. [இதில் குறிக்கப்படுவது நக்கீரர் கதை.] மதுரையில், தருமியென்ற ஆதிசைவன் கலியாணஞ் செய்து கொள்ளப் பொருளில்லாது வருத்தமுற்றுச் சோமசுந்தரக் கடவுளைப் பிரார்த்தித்து வழிபட்டுக்கொண்டிருந்தான். அக்காலத்தில் அரசாண்டு வந்த வங்கியசூடாமணியென்ற பாண்டியன் தனது தருமபத்தினியின் கூந்தலில் பூவின்றியும் நறுமணமிருக்கக் கண்டுஆச்சரியமடைந்தவனாய்த்தனது மனக் கோளுணர்ந்து பாடவல்லார்க்குப் பெருநிதி கொடுப்பதாகக் கூறிப் பொற்கிழி யொன்று கட்டிவைத்தான். இதனையறிந்த தருமி கடவுளிடத்துச் சென்று முறையிட, அவரும் 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற செய்யுளை அருளிச்செய்தார். அதைப்பெற்று அரசனிடங் கொடுக்க அவனும் அதனைச் சரிபார்க்கச் சங்கப்புலவர்களுக்கு அனுப்பினான். இச்செய்யுளை நக்கீரனார் குற்றங்கூறவே சோமசுந்தரக்கடவுள் தாமே நேரில் தோன்றியும் தக்க விடையிறுக்க மாட்டாது தமது

நெற்றிக் கண்ணைத் திறந்து குற்றங் கூறிய நக்கீரரைத் துன்புறுத்தினர்.
உன்ரியிழந்து விழித்தல்—இரு பொருள்.

3. [ஆரிய பாஷை பிரபலப்படு முன் தமிழ்போன்ற ஒருமூல பாஷை ஐரோப்பாவிலும் ஆசியா கண்டத்திலும் பரவியிருந்ததென்பது பல பாஷைகளையும் கற்றுணர்ந்த ஆங்கிலேய பண்டிதர்களின் துணிபு.]

4. [சம்பந்தர் மதுரையில் சமணரோடு வாதஞ்செய்த கதை.] கூன் பாண்டியன் முன்னிலையில், சமணருக்கும் ஞானசம்பந்தருக்கும் சமய வாதம் நிகழ்ந்தது. அப்போது 'இரண்டு சமயக்கோட்பாட்டின் உண்மைகளையும் ஏட்டில் எழுதி அவ்வேடுகளை வைகைநதியி விடுவோம்; எந்தச்சமயத்தைச்சார்ந்த ஏடு எதிரேறி யோடுமோ அந்தச் சமயமே உண்மையான தென்று ஒப்புவோம்' எனச்சமணர்கள் கூறினார்கள். இதற்குச் சம்பந்தமூர்த்தியும் இணங்கி 'வாழ்க அந்தணர்' என்ற திருப்பதிகத்தை யெழுதி அவ் ஏட்டினை வைகையில் விடச் சமணர்களும் தங்கள் உண்மைகளெழுதிய ஏட்டை நதியில் விடுத்தார்கள். சம்பந்தரது ஏடு வெள்ளத்திற்கு எதிரேறிச் சென்றது. சமணர்கள் தோற்றார்கள். காலநதி etc.-காலநதியில் அழிவின்றி நிற்பாய் என்பது பொருள்.

5. [வாசகம்-திருவாசகம்.] ஒருகால் மாணிக்கவாசக சுவாமிக ளிடத்துச் சிவபெருமான் வேதியவேடம் பூண்டு வந்தார். ஆசனமிட்டுத் 'தேவரீர்க்கு எந்த ஊர்' என்று மாணிக்கவாசகர் வினவ, வேதியர் 'நான் இருப்பது பாண்டி நாடு, உம் புகழைக்கேட்டு நீர் பாடிய செய்யுட்களை ஓத வந்தேன், அவைகளை நான் எழுதிக்கொள்ளல் வேண்டும்' என்ன, வாதவூரரும் அதற்கு இணங்கித் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் சொல்லியருள, வேதியர் அவைகளை எழுதிமுடித்துக் கடைசியில் 'மாணிக்க வாசகன்சொற்படி அம்பலவாணன் கையெழுத்து' எனக் கைச்சாத்திட்டு மறைந்தார்.

6. சங்கப்பலகை தக்கவழி விரிந்திலகியது தமிழும் தக்கவழி விரிந்திலகும் என்றதற்கு அறிகுறியாயிற்று. சங்கப்பலகை தக்கார் வந்தவழி விரிந்து இடங்கொடுத்து விளங்கியது. தமிழும் நூலாராய்ச்சியாளர் அங்கீகரிக்கத்தக்க வழியில் சிறந்த நூல் ரூபமாக விரிந்து விளங்குகின்றது.

7. [உத்தமமான கிழக்குத் திசையே முகமாகக் கலைமகளிருக்கில் அவள் வலப்புறவிழி தென்புறமாக இருக்கும் என்பதுபற்றி வலதுவிழி தென்மொழி எனக் கற்பனையாகக் கூறப்படுகிறது.] கிழக்கொடு மேற்குணரார்-இருபொருள் :— (i) ஒன்றுமறியார் (ii) கிழக்கு மேற்கு என்ற திசைகளை யறியார்.

8. [குண திசை—கீழ்த்திசை. நன்மையான வழி என்பது தொனி.]

9. [பூர்வதிசை—கீழ்த்திசை. பழைய நிலைமை என்பது தொனி.]

10. பொருளுக்குப் பொருந்த வேண்டுவ தான முக்கிய லக்ஷணம் சிறிதும் அமையாத கற்பனை. பத்துப்பாட்டு—கடைச் சங்கப்புலவர்கள் இயற்றிய ஒருதொகைநூல். அதில் அடங்கியன:—1. திருமுருகாற்றுப்படை. 2. பொருநராற்றுப்படை. 3. சிறுபாணாற்றுப்படை. 4. பெரும்பாணாற்றுப்படை. 5. முல்லைப்பாட்டு. 6. மதுரைக்காஞ்சி. 7. நெடுநல்வாடை. 8. குறிஞ்சிப்பாட்டு. 9. பட்டினப்பாலை. 10. மலைபடுகடாம். என்பனவாம்.

12. [கன்ஞ் சடை—வேதத்தை உருவிடும் விகற்பங்கள்.]

வேதம் ஓதும் முறை நான்கு வகைப்படும் : பதம், கிரமம், ஜடை, கனம் என. இவற்றில்,

பதபாடம்:—பதங்களைத் தனித்தனியே நிறுத்திச் சொல்லுவது : அதாவது "அக்நிம் ஈளே புரோகிதம் யக்ஞஸ்ய" என்பதையெடுத்துக்கொண்டால், அக்நிம் | ஈளே | புரோகிதம் | யக்ஞஸ்ய : என்று பிரித்துத்தெளிவாய்க் கூறுதலாகும்.

கிரமபாடம்:—ஒரு பதத்திற்குப்பின் அடுத்துவரும் பதம் இன்னதென்று பதக்கிரமத்தைக்காட்டியிரண்டிரண்டு பதங்களாகச் சேர்த்துக் கூறுதல். அது அக்நிம் ஈளே | ஈளே புரோகிதம் | புரோகிதம் யக்ஞஸ்ய : என வரும்.

ஜடா பாடம்:—ஜடை போற் பின்னிக்கூறுதல். அது
அக்நிம் ஈளே, ஈளே அக்நிம், அக்நிம் ஈளே | ஈளே புரோகிதம், புரோகிதம் ஈளே, ஈளே புரோகிதம் | புரோகிதம் யக்ஞஸ்ய, யக்ஞஸ்ய புரோகிதம், புரோகிதம் யக்ஞஸ்ய : என வரும்.

கனபாடம்:—கஷ்டப்பட்டுப்படிக்க வேண்டுவதாயுள்ளபாடம். அது
அக்நிம் ஈளே, ஈளே அக்நிம், அக்நிம் ஈளே புரோகிதம், புரோகிதம் ஈளே அக்நிம், அக்நிம் ஈளே புரோகிதம் | ஈளே புரோகிதம், புரோகிதம் ஈளே, ஈளே புரோகிதம் யக்ஞஸ்ய, யக்ஞஸ்ய புரோகிதம் ஈளே, ஈளே புரோகிதம் யக்ஞஸ்ய : என வரும்.

## முதல் அங்கம் : முதற் களம்.

ஜீவகன் மதுரைநகரை விடுத்துத் திருநெல்வேலியடைந்து அங்கே கோட்டை முதலியன அமைத்த பிற்பாடு, அவ் அரசனிடத்தே தமக்குள்ள பேரன்பு காரணமாகச் சுந்தரமுனிவரும் திருநெல்வேலிக்கு எழுந்தருளுகின்றனர். முனிவரை எதிரேற்று உபசரிப்பதுடன் நாடகம் தொடங்குகின்றது.

வரி. 2. சேர்மின் = சேர்த்துமின், கொணர்ந்து வையுங்கள்.

சீரிதே—சீர் இதே எனப் பிரித்துணர்க. 'சீரிது' என ஒரு பதமாகக் கொள்ளினும் அமையும்.

7. 'களிறினம்' மு-ப. 'களிறுகள்' ப-ப.

7-9. களிறு, புரவி, முரசு, இவைகள் சுந்தரமுனிவரை வரவேற்று உபசரித்தற் பொருட்டு வந்தன.

18. இவ்வரிக்குக் கீழுள்ள நடர்க் குறிப்பில் 'கருணாகரர்' என்பது பரீக்ஷைப் பகுதியை நோக்கிச் சேர்க்கப் பட்டுள்ளது.

21-23. ஒப்பு நோக்குக :—
முன்னமே துயின்றருளிய முது பயோததியோ, பன்னகாதிபப்பாயலோ பச்சையாலிலையோ, சொன்ன நால்வகைச் சுருதியோ கருதி நீயெய்தற், கென்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடி லென்றான்.
-பாரதம்-கிருட்டினன் தூது 80.

28 'தொலைய' மு-ப. 'தொலைந்து' ப-ப.

35. கடக்கரும் = (கடக்க + அரும்) கடக்கமுடியாத.

43. 'சுந்தரமூர்த்தே.' மு-ப. 'சுந்தரமூர்த்தி.' ப-ப.

46-47. 'அப்பாண்டி நாட்டைச்சிவலோகமாக்குவித்த, அப்பார் சடையப்பன்'-திருவாசகம்-திருவம்மானை-11

48-51. [இவ்வரிகளின் பொருள் பூகோளபடம் நோக்கில் எளிதில் விளங்கும். நிலப்பகுதியை ஒரு பசுவாகவும் அதிற் பரதகண்டமாகிய இந்தியாவை அப் பசுவின் மடியாகவும் பாவிக்கில் தென்பாண்டி நாடு அம்மடியினின்றும் பால்சுரக்கின்ற சுரையாக, தானே தோற்றும்.]

51. ஒருகால்—சிவபிரானது திருக்கலியாண காலம்.

55. [தலையாகவும் - உம்மை உயர்வு சிறப்பும்மை.]
'ஒருதலையாகவும்' மு-ப.'ஒரு தலையாக' ப-ப.

58. [இங்கு அகத்திய முனிவர்க்குச் சூட்டி வழங்கும் பெருமை மலயமலை மேல் ஆரோபிக்கப் பட்டிருக்கிறது.]

59. 'செவிவழி தந்த' மு-ப.'செவி வழித் தந்த' ப-ப.

சந்நு.—பூர்வத்தில் அரசாண்ட ஓர் அரசர். சுகோத்திரர் என்பவருடைய குமாரர். பகீரதனது பெருமுயற்சியால் பூமிக்குக் கொண்டுவரப்பட்ட கங்கையானது இவரது யாககுண்டத்தை நிரப்பி யழிக்க வருகையினாலே இவர் அதன் நீரனைத்தையும் உண்டுவிட்டார். பின் தேவரும் முனிவரும் பகீரதனும் இவரை வேண்டிக்கொள்ள, தமது காது வழியே கங்கா ஜலத்தை விடுவதாக ஒப்புக்கொண்டு அவ்வாறே செய்தார். இதனால் கங்கை 'ஜாஹ்நவீ' என்றவொரு பெயர் பெற்றது.

60. தேவேந்திரன் தனது நந்தவனஞ் செழிக்கும் பொருட்டு விநாயகக் கடவுளை வழிபட்டான். விநாயகக்கடவுளும் காக்கை வடிவமாய் வந்து, தெற்கே பொதியமலையை நோக்கிப் போய்க்கொண்டிருந்த அகஸ்தியருடைய கமண்டல நீரைக் கவிழ்த்துவிட்டனர். இதுவே காவிரி யாயிற்று என்பர். வேறு காரணங் கூறுவாருமுளர். *Cf.* மணிமேகலை-ix. *52–53*, உரை.

61. இவ்வரி ப-ப. 'மண்ணுலகெல்லாம் விண்ணுலகாக்க' என்பது மு-ப.

64-68. ஒப்பு நோக்குக:—
வேழவெண்மருப் பெறிந்துவெண்ணித்திலம் வரன்றிக், காழகிற்றுணி சந்தொடு கையரிக்கொண்டு, கோழரைச் செழுங் குங்குமத் தடஞ்சினை சாடி, ஆழ்திரைக் கடலகடு கீண்டொழுகியதன்றே,
கங்கையென் றுலகேத்திய கடவுள் மாநதி வெண், சங்கு சூலுளைந்தலறிய தடம்பணை தவழ்ந்து, கொங்குயிர்த்த பூந் தடத்துலாய்க் குளம்பல நிரப்பி, அங்கண் மாநிலத் தமிழ்தெனப் பரந்ததையன்றே.
-நைடதம்-நாட்டுப்படலம் 4, 5.

70. [தாமிரவர்ணி, தாமிர பன்னி தாம்பிரபூரணி என்ற பலபெயரால் வழங்கும் பொருனை நதி.]
'பண்ணிய' மு-ப;'பண்ணுமிப்' ப-ப.

74. தொடுகடல்-சகரரால் தோண்டப்பட்ட கடல்.

74-75 [அகழ்விரிவிற்கும்சத்துருக்களின் பயத்தளவிற்கும் உவமை.]

76. 'அகழ்ப்புறத்து' மு-ப.; 'அகழுடுத்த' ப-ப.
[புறத்து = அகழ்க்கரையில்]

79-80. மீன்கள் அசுத்தங்களையுண்ணுதல் இயற்கை.

82-83. பொறிகளும் (யாரும்) வெறிகொள் கிறிகளும் என்றேனும் அல்லது, பொறிகளும் வெறிகொள் கிறிகள் என்றேனும் பொருளுணர்க.

84. 'அம்பிகாபதயே', மு-ப; 'அம்பிகாபதேஎ' ப-ப.

86. 'ஆகிய' மு-ப ; 'நீயாக்கிய' ப-ப.

90-91. 'பொருது பின்னிவையெலாம்வெல்லுவர்' மு ப. 'பொருதிவை வென்று கைக்கொள்ளுவர்' ப-ப.

100. 'உதித்திடு' மு-ப. 'உதித்தநம்' ப-ப.

105. 'உணர்த்தே' மு-ப. 'உணர்த்தாய்' ப-ப.

107. 'கன்னியின்' மு-ப. 'கன்னிதன்' ப-ப.

108. 'நணுகினர்' மு-ப. 'இங்குளர்' ப-ப.

இவ்வரிக்குக் கீழுள்ள நடர்க்குறிப்பில்'சீடரும்' என்றுள்ளது முதற்பதிப்

பில்இல்லை; பரீக்ஷைப் பகுதியில் சேர்க்கப்பட்டது.

116. [புராணம் = பழங்கதை, வெறுங்கற்பனை.]

120. 'ஏமாப்படைந்தது' மு-ப. 'ஏமாறினதே' ப-ப.

125. 'முனிவர்' மு-ப. 'பாழ்த்தவித்' ப-ப.

136. 'அதிக' மு-ப. 'அவள்மேல்' ப-ப.

136-149 *Cf. The Secret Way. ll. 85-90.*

137. 'என்று முள்ளதே' மு-ப. 'இன்றுமற்றன்றே.' ப-ப.

141. 'மற்றும்' மு-ப. 'குடிலனும்' ப-ப.

147. 'மணி' மனோன்மணியென்ற பெயரின் சுருக்கம். அன்புமேலீட்டால் இவ்வாறு சுருக்கி யழைத்தல் வழக்கு.

[காவியங்களுக்குரிய மலை, நதி, அரண் இவற்றின் வருணனை இக்களத்தில் ஒருவாறு வந்தமை காண்க.]

## முதல் அங்கம் : இரண்டாம் களம்.

தாழிசைகளின் அமைப்போடு ஒப்பு நோக்குக:—

'ஒன்றே காண் பெண்ணே யுலகம் பதினாலும், உள்ளது போதமென்றூடாய் கழல், ஒழிவற நின்றூ மென்றூடாய் கழல்.'

—பாடுதுறை—பக்-300.

[முதல் தாழிசை. சுடுகணை தூர்ப்பவன் = மன்மதன்.]

[2-ம் 4-ம் 6-ம் தாழிசைகள் காமதகனனுடைய அருத்தநாரீசத் தன்மையைக் குறிப்பிடுகின்றன.]

காமனையெரித்தகதை வருமாறு:—

ஒரு காலத்தில் தாரகாசுரன் தேவர்களையெல்லாம் மிகத் துன்புறுத்திக் கொண்டிருந்தான். இவனையழித்தற்கு குமாரக் கடவுளைச் சிவபெருமான் உதவியருள வேண்டுமென்று தேவர்கள் விரும்பினார்கள். ஆனால் சிவபெருமானோ யோகத்தில் அமர்ந்திருந்தார். இவரை யோக நிஷ்டையினின்றும் கலைத்துப் பார்வதிதேவி மீது இச்சை கொள்விக்கும்படி மன்மதனைத் தேவர்கள் ஏவினார்கள். மன்மதன் தனது மலர்ப் பாணத்தைச் சிவபெருமான் மீது பிரயோகிக்க, அவர் தமது நெற்றிக் கண்ணைத் திறந்து நோக்கினர். நோக்கின அளவில் மன்மதன் எரிந்து சாம்பராயினான்.

தாழிசை 3. 'ஏந்திழையார்கள்' மு-ப. 'ஏழையர் தங்கள்' ப-ப.

,, 4. 'கடுவுண்ட கண்டர்.'—தேவர்கள் அமுதத்தின் பொருட்டுத் திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது அங்கு நின்றும் விஷம் புறப்பட்டுத் தனது கொடுமையால் தேவர்களையெல்லாம் பதை பதைத்தோடச் செய்தது. அவ்வாறோடிய தேவர்கள் சிவபெருமானைச் சரண்புக, அவர் விஷத்தைக் கையிலெடுத்து உண்டு தேவர்களை ரக்ஷித்தார். உண்ட விஷத்தைப் பார்வதிதேவியார் வேண்டுகோளால் தமது கண்டத்தில் நிறுத்தியருளினார் கரிந்தது-தேவியிருக்குமிடப்பாகம்.

,, 5. தாருகாவனவாசிகளாகிய முனிவர்கள் தங்கள் தபோமகிமையினாலேசெருக்குற்றிருந்தார்கள். அந்தச் செருக்கை யழித்தற் பொருட்டுச் சிவபிரான் கங்காள நாதராகச் சென்று பிக்ஷையெடுத்தார். அப்போது முனிவர்களது பத்தினிகள் பிக்ஷாடனமூர்த்தியைப் பின் தொடர்ந்து நிறையழிந்தார்கள்.

,, 6. 'உருவிலி யாயினென்' மு-ப. 'உருவங் காந்தாலென்' ப-ப.

அர்த்தநாரீசுரவடிவத்தில் சிவபெருமானுக்குப் பாதிவடிவே யுளதாதலி

னல் 'அரையுருவானார்' என்று கூறினாள்.

வாணியின் காதலனாகிய நடராஜன் காதற்பிணியால் வருந்தி அரையுருவாய் மெலிந்திருக்கின்றான் என்பதும் இங்கே தொனிக்கின்றது.

மனோன்மணி காதற்சுவைஅறியாதவள் என்பதும் வாணி அச்சுவைஅறிந்தவள் என்பதும் அவரவர் பாட்டுக்களே உணர்த்துகின்றன.

4.[மன்றலு மானது போலும்-மணந்த பின்னர் நாயகன் பேர் நவிலாமை வழக்கானதால்.] ஒப்பு நோக்குக :—

'அவருடைய திருநாமம் அறைவேனோ அடிகாள்'-சிவகாமி சரிதம் 32.

12. [சிவந்த = நாணத்தால் சிவந்த -*Cf.Blushing.*] இந்தக் கருத்து தமிழ்நூல்களிற்காணுதல் அரிது. ஆங்கிலநூல்களில் மிகுதியாகக்காணலாம்.

14.ஒளிக்குதல்—இந்தரூபத்தில் இச்சொல்சாதாரணமாய் வருதலில்லை.

15. 'காதலன்'என்றது நடராஜனை.

16–17. இதுபோன்று ஒரு மலையாளப்பழமொழியுண்டு.

18.திரிபவர்-வேலையற்றுத்திரிபவர்.

28.ஒப்புநோக்குக:-'எட்டுலாமலரேசிய நாசியாய்'-கம்பர்.

34. ஒப்புநோக்குக:-'தந்தையுங்கொடியன் நற்றாயுந் தீயளால்'-கம்பர்.

38. 'முதலையும் மூர்க்கனுங்கொண்டதுவிடா' என்பது- பழமொழி.

39-40. ஒப்புநோக்குக:- 'யாரொடுநோகேன் யார்க்கெடுத் துரைக்கேன் ஆண்டநீ யருளிலையானால், வார்கடலுலகில் வாழ்கிலேன் கண்டாய் வருகவென்றருள் புரியாயே'.

—திருவாசகம்- வாழாப்பத்து. 1.

43. கைரவம்—வெள்ளாம்பலுக்கு உரிய பெயர். இங்கே செவ்வாம்பலைக் குறிக்கின்றது.

53. வலம்புரிச்சங்கு—கழுத்திற்கு உவமானம்.

59.'ஒக்குமோ'மு-ப.'ஒப்போ'ப-ப.

[ஒக்குமோ = ஒப்பரோ.]

61. 'எமக்கே'மு-ப.'எனக்கே'ப-ப.

66 காற்று காரணமில்லாமலே ஒவ்வொருதிசைநோக்கிவீசுகின்றது.காதலும் காரணமில்லாமலே ஒருவர் மீது எழுகின்றது.ஆதலால்காற்றும்காதலும் தம்முட் சமமாகின்றன. ஒப்புநோக்குக:-*The Secret Way 236-237. Also ' Love free as air '—Pope.*

67. 'எற்றமுமொக்கு மென்றிசைப்பர்' மு—ப.

[எற்றமும் = எற்றவும்,மிகவும்.]

இப் பொருள் மலையாளவழக்காதல் பற்றிF. A. பரீக்ஷைப்பகுதியில்'ஆற்றவுமொக்குமென்றறைவர்' என, ஆசிரியரால் மாற்றப்பட்டது.

71.'இலையோ?'மு-ப.'இலையாம்!'ப-ப.

72.'தானோ?' மு-ப. 'தானும்!' ப-ப.

77–78. என் மனமானது எனது காதலனுடையவடிவழகிலேஈடுபட்டுச் சென்றொழிந்தது.

86. பெண்களுக் கெல்லாம் இக்காதல் உரியதென வாணி சொல்லியதனால், தன்னையும் அவள் உட்படுத்துகின்றாளென்று மனோன்மணியெண்ணித் தனது கருத்தைக்கூறுகின்றாள்.

89-94. ஆசிரியரது குரு கோடகநல்லூர் ஸ்ரீ சுந்தரசுவாமிகள் என்பது இங்கேஉணரத்தக்கது. இம்நகானது ஞாபகமே இவ் அழகிய அடிகளுக்குக் காரணமாயிருந்திருக்க வேண்டுமென நினைக்க இடமுண்டு.

108. [சக்கர மிருத்திட = யந்திரஸ்தாபனஞ்செய்ய]

109. சுழி கொப்பூழுக்கும், திரை வயிற்று மடிப்புக்கும் உவமை.

112. வாசிட்டம் வசிஷ்டர் இராம பிரானுக்கு அருளிய ஞானசாஸ்திரம். இதைத்தமிழில் ஆளவந்தார் என்பவர் செய்யுள் நடையிலியற்றி யிருக்கிறார்.

117. 'உக்தையின்'. மு-ப. 'உந்தை தன்.' ப-ப.

118. மன்றல்-மன்றலைக் குறித்து.

119. ஆமை புறவடிக்கும், அலவன் முழந்தாளுக்கும் உவமை.

131. உயிர்-மனோன்மணி.

133-4. ஒப்புநோக்குக:-'அனிச்சமு மன்னத்தின் தூவியுமாதர்-அடிக்குநெ ருஞ்சிப்பழம்' குறள்-*1120.*

141. [தாமே நட்டுவளர்த்த முல்லை பூக்குங்கால் இராஜகன்னியர்க்குவிவா கம் நேரிடுமென்பது காவியவழக்கு.]

*Cf. Sakuntala. Act. I.*

*Sakun.* This Madhavi-creeper, though it be not the usual time for flowering, is covered with gay blossoms from its root to its top.

*Both.* (*Approaching it hastily*) Is it really so, sweet friend ?

*Sak.* It is so. Look yourselves.

*Priyamvada.* (*with eagerness*) From this omen, Sakuntala, I announce you an excellent husband, who will very soon take you by the hand.

143. ஒப்புநோக்குக:-'போதினைவெறு த்தரசர்பொன்மனைபுகுந்தாள்.'கம்பர்.

147. நெருப்பைக் கறையான் அரிக்குமா? நெருப்பிற் புழுப்பற்றுமா? இவை பழமொழிகள்.

152. 'வாவே'மு-ப.'வருகவே'ப-ப. [இக்களத்தில் மன்மதோபாலம்பனமும் கேசாதிபாத வருணனையும் ஒருவாறு வந்தமை காண்க.]

முதல் அங்கம் : மூன்றாம் களம்.

நடர்களுக்குரிய குறிப்பில் 'சம்பாஷித்திருக்க' என்பது ப-ப-வில் சேர்த்திருக்கிறது. 'நடர்: ஜீவகன், குடிலன், நாராயணன்.' மு-ப.

வரி. 8. வேப்பமாலை பாண்டிய அரசர்களுக்கு உரியது.

12. *Cf. The Secret Way l. 350.*

18. 'ஒழுக்கமுமன்று குருவென்றுன்னிலே' மு-ப. 'ஒழுக்கமன்றே குருவன்றோவவர்?' ப-ப.

20. கோவில்தானோ?-கோவில் அமைத்தல் தானோ?

24. சிலவற்றை மறந்து போனார்களேயன்றி ஒன்றையும் உள்ளத்தால் துறந்தவர்களல்லர்.

28. வசிஷ்டர் அருந்ததியைக் கல்லாக்கித் தெய்வலோகத்து வைத்துவிட்டுப் பூலோகத்துக்கு வந்து அரசர்களுக்கெல்லாம் யாககாரியஞ் செய்து கொண்டிருந்தார்.

30. மௌலிவேந்தன் = சக்கரவர்த்தியாகிய அரிச்சந்திரன். இவனது சரித்திரம் லோகப்பிரசித்தமாயுள்ளது.

32-33. (*1*) சியவநமுனிவர் அச்வநிதேவர்க்கு அவிர்ப்பாகங் கொடுக்கையில் இந்திரன் கோபங்கொண்டு அவர் மீது வச்சிராயுதத்தை எறிந்தான். முனிவரும் அவ்வச்சிராயுதம் ஏந்தியகை ஸ்தம்பிக்கவென்று சாபமிட அத்தண்டனையேற்றுக்கடலில்இந்திரன்ஒளித்தான்.

(*2*) துருவாசர் சிவபூசைக்கு உபயோகப்படுத்தின மலரைத் தேவேந்திரனுக்குக்கொடுக்க, அவன் அதை மதியாது தன் யானையின் மத்தகத்தில் வைத்தான். யானை யதனைத் தும்பிக்கையாலெடுத்துத் தன் காலில் வைத்துத்தேய்த்தது. அந்த அபராதத்திற்கு துருவாசரால் இந்திரன் சாபம்பெற்று

வேடனாகத் திரிந்தான்.

(3) இந்திரன் அகலிகையைக்கற்பிற் பிழைபடச் செய்த காரணத்தால்கௌதமர் சாபமிட்டார். இந்தச் சாபத்தால் வெளியில்வருதற்கு வெட்கமடைந்து இந்திரன் ஒளித்துக்கொண்டிருந்தான்

39. இது ஒரு பழமொழி.

[இதன்பின் வரும் வெண்பா உண்மைத் துறவியாகிய முனிவர்மேல் குடிலன் அவமே பொருளாசை ஆரோபித்ததைப் பழித்து நாராயணன் செவியறிவுறுத்துந் துறையாக்கூறும் கூற்று.]

ஒரு நாயானது வெறு மெலும்பைக் கவ்விக் கடித்துப் பிடித்துக் கொண்டிருக்குஞ் சமயத்தில் உன்போன்ற பேரரசன் அதன் அருகே செல்ல, அந்தநாய் தன் வாயிலிருக்கும் எலும்பைப் பிடுங்கிக்கொள்ள வருகிறானென்று நினைத்து உறுமுகின்றது. இது என்ன மடமை!

இதன் உட்கருத்து :—குடிலன் தனக்கு அரசனிடத்தேயுள்ள செல்வாக்கின் மூலமாகப் பெரும்பதவியும் அதிகாரமும்பெற்று அவை தன் கையினின்று நழுவிவிடா வண்ணம் பலவாறு முயன்று வருகின்றான். அப்பொழுது தவராஜராகிய சுந்தரர் வரவே தன் செல்வாக்கு, அதிகாரமுதலியவற்றைக் கவர்ந்துகொள்ள வருகிறாரென்று எண்ணி, குடிலன் அவர் மீது பொறாமைகொண்டு கோள் சொல்லுகின்றான். முனிவருக்கு இவனது அதிகாரமுதலியன வெல்லாம் வெற்றெலும்புக்குச் சமானமென்பதை மறந்தான். இது என்ன மடமை!

நூலாசிரிய ரவர்கள் ஆங்கிலத்தில் தந்த குறிப்புப் பின்வருமாறு:—

'Exactly as the silly dog, engaged complacently in crunching a dry and useless bone, snarls with suspicious jealousy at the approach of a crowned sovereign like yourself who could not have the least intention of contending for it, so does ambitious Kudila feel jealous of the Muni's influence with you, suspecting it may be used for depriving Kudila of his power or possession and turning them to his own account, forgetting that all his worldly pomp and power must appear to the Muni even worse than a dry marrow-less bone to a king. It is to be seen then that 'நீ' refers to the King in its primary sense and to சுந்தரமுனிவர் in its application when the dog must be taken as Kudila and the bone his power. Narayanan thus wishes to warn his master against the back-biting of his minister. 'நீ' refers to Jivaka in one sense.'

ஒப்புநோக்குக:—'பட்டினத்துப்பிள்ளையினைப்பத்ரகிரியைப் பாவி, விட்டுவிடமாட்டார் வெறுவீடர்-வெட்ட—வெறுவெலும்பை நாய் கறண்ட வேந்தர்வர நாய்பார்த்துறுமுவதைக்காட்டுவோமோ'—ஒழிவிலோடுக்கம்.

46. இது ஒரு பழமொழி.

56. எந்தன்- 'என்தன்' என்பதன் சிதைவு.

66. கரும்பு என்றது பெண்ணை.

71. அடியனேன் மு-ப. அடியேன்ப-ப.

75. [பேய் போல்-'ஓராள்' என்பதோடு சேர்க்க.]

78. 'இனிமேல்' மு-ப 'இதன்மேல்' ப-ப

87. [வாழ்தும்-இல்லாளோடுசேர்த்

துப் பன்மை வந்தது.] [ல்
கிருபையேல்=கிருபை செய்வீராஞ

95. [இவ்வரிக்குப் பின் வரும் வெண்பாவில் 'சோற்றதற்கா' என்னும் தனிச்சொல் சகடனைக் குறிக்குங்கால் சோற்றுக்காக என அவனது பொருளாசையையும், அரிச்சந்திரனைக் குறிக்குங்கால் சொற்றதற்கா என்பதின் நீட்டல் விகாரமாய் அவனது தவறு மொழியையும் சுட்டி நிற்கின்றது.]

இவ்வெண்பாவுக்கு ஆசிரியரவர்கள் தந்த ஆங்கில உரைக்குறிப்பு:—

'The meaning of சோற்றதற்கா: In the case of Harichandra, it is சொற்றதற்கா; that is, for the word he pledged to the முனி (Viswamitra) he gave up his worldly enjoyments to the extent of surrendering his child. In the case of சகடன், it is சோற்றதற்கா; that is, for the sake of சோறு, சகடன் is preparing himself for similar sacrifices. So says Narayana, of course in allusion to the avarice which prompts him to give his lovely daughter in marriage to one she hates from the bottom of her heart'.

'Harichandra is introduced to expose the falsity of the plea raised by சகடன் that he would retire to Kasi in case he should fail *to keep up his word*, as if he were another Harichandra, with குடிலன் to whose son he really through ambition wishes to wed his daughter.'

'*Cf.* தென்னவன் தென்னர் பெருமான் திறல் மதுரை, மன்னவன் நோக் களிற்றின் வல்லிக்கும்-பொன்னிளா-டாலிக்கும் வேந்தா மபயகுலன் மகளிர், தாலிக்கு மொன்றே தளை.

-புகழேந்திப்புலவர்.'

96. [தனி மொழி=தனிச் சொல் 'சோற்றதற்கா.']

110. 'கிளியை வளர்த்துப் பூனைக்குக்கொடுக்கவா?'-பழமொழி.

111-132. கடராஜனைப்பற்றி வரும் பகுதியெல்லாம் சிவபெருமானுக்கும் பொருந்துமாறு வாய்ந்து இருப்பதை நோக்கிக்கொள்க.

119. 'பிள்ளையைப் பெற்றுப்பேய்க்குக்கொடுக்கவா?'—பழமொழி.

126. 'ஆளைப் பார்த்தால் அழகு போலே; வேலையைப் பார்த்தால் இழவு போலே'-பழமொழி.

129. 'இதந்தர' மு-ப. 'இதந்தரு' ப-ப.

131. 'ஆகினும்' மு-ப. 'ஆயினும்' ப-ப.

133. [இராச்சிய தந்திரத்து=இராச்சிய காரியங்களில்.]

149-150. ஒப்பு நோக்குக:-'போது நீத் தெம்மனைபுகுந்தகற்றிருவே.' I-ii *143*.

151. 'மாலை இலீலை' என்றேனும் 'மாலையில் லீலை' என்றேனும் பிரித் துணர்க.

152. ஒப்புநோக்குக:-II-iii-*35*.

154. ' மலையமாருதம் வந்து வந்து (எங்கள் செல்வியை) உந்த அவளும் நிலாவெள்ளத்தில் நீந்தி நெடுமுற்றத்தே உவந்து பந்தாடி' என்று பொருளுரைக்க.

157 ஒப்புநோக்குக:—

சிலப்பதிகாரம்-IV. *66*.
நெடுநல்வாடை-*132*.
கலித்தொகை-*72*.

162. வளையும் கழலும் (கழன்றுவிழும்) என்க.

162-166. காதல் நோயின் அடையாளங்கள். 173-174. இவ் வரிகளும் அங்ஙனமே.

165.கண்தழலெரியும் எனப்பிரிக்க.

180.[சிரசிரா வென்று = சிரசாளை வருமென்று]

183-184. [பனம்பூமாலே சூடும்படி நும்மகளை மணஞ்செய்மின்--அதாவது வஞ்சி யரசனுக்கு விவாகம் செய்து கொடுமின் என்பது பொருள்.]

186. பனம்பூ மாலே சேரவரசர்க்கு உரியது.

[இக்களத்தில் கனுக்கண்டு காமங் கொண்ட மனோன்மணியின் காமசுர வருணனே ஒருவாறுவக்தமைகாண்க.]

முதல் அங்கம் : நான்காம் களம்.

ஈண்டுள்ளகடர்க்குறிப்பு ப-ப.'கடர்: ஜீவகன்,மனோன்மணி, வாணி, செவிலி.' மு-ப.

7.'தாய்க்கொளித்தசூலா?'என்பது பழமொழி.

11. களங்கம் என்றது மறைத்து வைக்கவேண்டிய தொன்றனே.

12-19. *Cf. The Secret Way. ll. 65-72.*

12-22. [இவ்வரிகளில், பஞ்சவன்--பிசிதம்-வானவன்-போக்தை என்ற மொழிகள் முறையே பாண்டியனேயும் அவனது மாலேயாகிய வேம்பையும், சேரனேயும், அவனது மாலேயாகிய பனம்பூவையும் குறிப்பித்து நிற்பதால் பாண்டியன் மகளாகிய மனோன்மணி சேரனதுபோரழகுகண்டுமயங்கியிச்சை யுறுவதை யுணர்த்த அறிகுறியா வக்த ஒரு கனுக் காட்சி தொக்நியார்த்தமாகக் கூறிய தாயிற்று.]

30. போன்ம்-மகரக்குறுக்கம்.

83-104.உண்மைக்காதலின்பெருஞ் சிறப்பினே இவ்வரிகள் அழகுறப் புலப்படுத்துகின்றன.

100-103. *Cf.*

It is the secret sympathy,
The silver link, the silken tie,
Which heart to heart, and mind to mind,
In body and in soul can bind.
—*Walter Scott.*

108. சுதக்தா பங்கர் = சுதக்தாம் அற்றவர்.

என்றும்: *Cf. Manu. V. 148.*

'In child-hood a female must be subject to her father, in youth to her husband, when her lord is dead to her sons; a woman must never be independent.'

114-5. ஒரு பழமொழி.

115. 'மதியாய்' மு-ப. 'மதிகொடு' ப-ப.

120. ஒரு பழமொழி.

121.["அரிவையர் பிழைப்பார்?" என்பதை 'எங்ஙனம்' என்ற ஜீவகன் சொல்லோடு சேர்த்துத் தன்மேல் சாட்டப்பட்ட பிடிவாதத்தை அரசன்மேலேற்றி வாணி மறுமொழி கூறினுள் என்க.]

154. முதற் பதிப்பிலும் பரீக்ஷைப் பகுதியிலும் 'எளியை' யென்றே காணப்படுகின்றது. அது முன்னிலேச் சொல்லாதலினுலும் இங்கே இருக்க வேண்டுவது படர்க்கை யொருமைச் சொல்லாதலினுலும் 'எளியள்'என்றேயிருத்தல் வேண்டும். இதன் கீழ், அடுத்த வரியினிறுதியில் வரும் 'வெளியை' என்பதனேடு ஒற்றுமை பெற 'எளியை' என அமைந்துள்ளது போலும்.

168-169. புளியம்பழமுக் தோடும் போல் ஒன்றுக்கொன்று சம்பக்தமில்லாதிருக்கும். *Cf. The Secret Way. ll. 79-80.*

ஒப்புநோக்குக:-'புளி சேர்பழமானுற் போற் புறம்போடுள்ளின், மூளைதா

னும் வேறாய் மூளே போய்'
-ஒழிவிலொடுக்கம்.

170. *Cf.* 'Passions are likened best to floods and streams.'
-*Sir Walter Raleigh.*

174. *Cf. The Secret Way.l.105-6.*

177-184. *Cf.The Secret Way. ll. 92-104.*

183.[அரசாடவி : அரச அடவி என்று பிரிக்க. பிற ஆண்டு=பிறண்டு என்றதுபோல.]

188-189. புருஷோத்தமனேடு ஒப்புநோக்கும்போது மற்றையரசர்களெல்லாம் கள்ளியும் கருவேலங்காடுமாய் இகழ்தற்குரியராயொழிய.

195. 'கனியாய்க் காய்த்து'–காய்த்துக்கனியாய் என மாற்றி யுணர்க.

208. குடிலன் தீங்கு செய்வான் என்பதைச் சுந்தரர் முன்னுணர்ந்தமை வெளியாகின்றது.

[இக்களத்தில் காதல் நிலைமை வாணியின் வாசகத்தால் வருணிக்கப்படுகிறது.]

முதல் அங்கம் : ஐந்தாம் களம்.

தனிமொழி : இதனை 'ஸ்வகதம்' எனவும் 'ஆத்மகதம்' எனவும்வடமொழி நாடகநூலார் வழங்குவர்.

1. *Cf.* 'Knowledge is power.' -*Bacon.* 'புத்திமான் பலவான்.'

3-6. மூட்டி, விடு(வி)த்து, கொணர்ந்து, கட்டுவித்தோம்.

8. *Cf. The Secret Way. l. 140.*

9. ஒரு பழமொழி.

13. புரிசையை வெருளுவர் என்க.

15. முழுதும் என்றது மதுரையும் உட்பட.

16. ஒப்புநோக்குக:-‘ அருவினையென்ப வுளவோ கருவியாற், காலம் அறிந்து செயின்.'–குறள். *483*,

30. 'அவசிகம்'. மு-ப. 'அவசியம்' பு-ப.

30-44. போர் மூட்டிப் பாண்டிய ராஜ்யத்தை அபகரித்தலே குடிலனது நோக்கம். மனோன்மணியின் மணவினை நிகழ்ந்தாலும் போர்விளைதற்கிடமுண்டு ; ஆனால் காலதாமசம் ஆகும். வேறொரு தந்திரத்தால் எளிதில்போர் உண்டாகலாம். இத்தந்திரமே 'செருவினைக்கிளைதல்.'

39. [இவ்வரி யோசனையின் முடிவு உள்ளநிறைவால்வெளிவந்தமை விளக்குகிறது.]

43. செருக்கினைக் கிளைதல்-கர்வபங்கம் விளைத்தல். *Cf.* 'prick the pride.'

46. 'கலகம் பிறந்தால் நியாயம் பிறக்கும்.' பழமொழி.

47. [அரசனைப்போர்க்களத்தில் தானே சூதாகக் கொலைபுரிய உட்கொண்ட குடிலன் கருத்தை அவாய் நிலைப் பொருளாயிவ்வரியுணர்த்துகின்றது.]

48. *Cf.The Secret Way.ll.149-151.*

49. *Cf.*'What can they see in the longest kingly line in Europe, save that it runs back to a successful soldier?"-*Scott.*

55. தன்னால் நேரிட்ட போரினால் அரசுரிமையுடையார் யாவரும் இறந்தொழியத் தான் முடியை அபகரித்தணிதல் தோஷம் என்று அறியாதார் கூறுவர்; அது கவனிக்கத்தக்கதன்று.

66.["சுவானசக்கரம்" நாய் கடியாதிருக்க உபாயம் வினவிய ஒருவனுக்கு உள்ளங்கையில் நவகோண சக்கரம் வரைந்துக் காட்டுக என்றும் ஆனல் அது பலிதமாவதற்கு மரத்தின் உந்நத கிளையிலேறியிருந்துகொண்டு அச் சக்கரம் வரைப்பதே விதியென்றும் ஒரு குரு உபதேசித்தான் என்பது கதை.]

76. [இந்தா=வழக்கச் சொல். இ

தோ என்பது பொருள்.]

88. [புண்ணியம் போல=போலிப் புண்ணியமாக.]

93-96. [ஒன்றாய்ச்சோறு பொங்க எண்ணினசிலயாத்திரைக்காரரில்ஒருவன் மற்றவன் உலையில் பெய்த அரிசியோடு தன்பங்குக்கு மணலை யிட்டுவிட்டால் யாரும் அறிவதற்கிடமின்றித் தன் பங்குக்குள்ள சோறு செலவில்லாமல் கிடைக்குமென்று நினைத்து மணலைச்சோறடும் பாத்திரத்தில் சொரிய அப்படியே யாவரும் தனித்தனியெண்ணி நடத்தினார்கள் என்பது ஒரு கதை.]

[இக்களத்தில்குடிலன் துர்க்குணம் அவனது மொழிகளாலேயேவிளக்கப்படுகிறது. முதலங்கம் முடிவில் வருங்கலித்துறை அவ்வங்கத்துள் நடந்த கதையைத்தொகுத்துக்கூறி ஞானபரமாகப்பொருட்படுத்துகிறது. மதுரையாகிய கூடஸ்தநிலை தவிர்ந்த ஜீவகனாகிய ஜீவன் நெல்வேலியாகிய அன்னமயாதி பஞ்சகோச சரீராபிமானத்தால் குரு வாசகமாகிய அருள்வழி விடுத்துக் குடிலனாகிய மாயாவசத்தனாய்த் துக்கத்திற்காளாகின்றான் என்பது குறிப்பு.]

இரண்டாம் அங்கம் : முதற் களம்.

26. ஒன்றும்=ஒரு தோஷமும், அல்லது ஒரு ஆக்ஷேபமும்.

39. ஒரு பழமொழி.

61. ஆகையில்-ஆதலால் என்னும் பொருள்பட நிற்கின்றது.

75. [நன்செய் நாடு=நாஞ்சி நாடு, நாஞ்சநாடு என்று இக்காலத்து வழங்குவர்.]

78-100. [திணைமயக்கம்.]

80-84. [நெய்தல் நிலத்தில் உலர்த்தப்படும் மீனை மருதநிலத்து வண்டானக்குருகு கவர அதை ஓட்ட நுளைச்சியர் எறிந்த பொற்குழை கடற்கரையிலுள்ள புன்னை நிழலிலுறங்கி அம்மலர்த்தாதுக்களால் பொன்னிறம் பெற்றுத்திரும்பி மருதநிலத்திற்குச் சென்ற எருமையின் மேலிருந்து சிறகுலர்த்தும் கடற்காக்கையை வருத்திற்று என்பதுபொருள்.]

85. ஒப்புநோக்குக:-'கேதகை மலர் நிழல் குருகென்று.'

-திருவிளையாடல்-நாட்டுப்-140.

85-87. [நெய்தலுக்குரிய கைதைமலரின் நிழலைத் தனதுபெடையென மயங்கிச்சென்ற மருதநிலத்துத்தாராக் குருகை யேளனஞ்செய்து சிரித்தலும் பல்மலரின் வாய்நிறையத் தன் மலர்த் தாதினைக் கொட்டிக் கோங்குமரம் விலக்கும் என்பது பொருள்.]

86. தழுவிட=தழுவுதற்கு.

91-92. 'கார்க்கரும்பின் கமழாலைத்-தீத்தெறுவிற் கவின்வாடி-நீர்ச் செறுவி னீணெய்தற்-பூச்சாம்பும்.'

-பட்டினப்பாலை.9-12.

100-145. [மழை-நதி-நிலம்-உழவு முதலான நாட்டுவளம்.]

102. 'தன்கடன்' பா-டி. 'தங்கடன்' மு-ப.

110-111. ஒப்பு நோக்குக:-'காவிரிப் புதுநீர்க்கடுவரல் வாய்த்தலை-ஒலி றந்தொலிக்கு மொலியே.'

-சிலப்பதிகாரம்-X. 108-109.

115. ஒப்பு நோக்குக:-'தாமரை விளக்கந் தாங்க.'-கம்பர்.

116-7. 'ஒப்புநோக்குக:-'மணிகள்-தெரிதருங்கர அலவனால்.'

-நைடதம்-நகரப்-14.

118-126. ஒப்பு நோக்குக:-'கம்புட் கோழியுங் கனைகுரனாரையும், செங்காலன்னமும் பைங்காற் கொக்கும், கானக்கோழியும் நீர் நிறக் காக்கையும்,

உள்ளும் ஊரலும் புள்ளும் புதாவும், வெல்போர் வேந்தர் முனையிடம்போலப், பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையும்.'

சிலப்பதிகாரம்-*X.114-119.*

125. [குழூஉக்குரல் குழூஉக்குறிகளால் வியாபாரிகள் பேசும்வழக்கம் குறிப்பிக்கப் படுகிறது. (அப்படியே கையுடித்தலும்)]

126. 'என்றுமே.' மு-ப. 'ஒன்றுமே' ப-ப.

127. 'எருதினம்' மு-ப. 'எருத்தினம்.' ப-ப.

128. [யாகத்துக்குரிய குதிரையைத் தேடிப் பூமியைப் பிளந்து பாதாளலோகம் சென்ற ஆயிரம் சகோதரர்களாகிய சகரர் கபிலர் சாபத்தால் சாம்பலாயினர். இந்நாட்டு உழவர் பூமியைப் பிளத்தலில் சகரரோடு சமமாயினும் ஆயிரமென்னும் எண்ணுள் அடங்கார் என்பதும் அவர்போல் இவர் அழிகிலர் என்பதும் விளக்க "ஈறிலாச் சகரர் எண்ணிலராம்" என்று அடைமொழிகள்கொடுக்கப்பட்டன.]

'பாருடைப்பனர்போற் பழிச்சினர் கைதொழ, ஏரொடு நின்றோர் ஏர்மங்கலமும்.'-சிலப்பதிகாரம்-*X.134-5.* உரையும் நோக்குக.

138. 'கிணிப்பறை'. மு-ப. 'கிணைப்பறை'. ப-ப.

140-144. செழுநிலநங்கை பயிர் மயிர் சிலிர்த்தல் என்பதனோடு கீழ்வருவதனை ஒப்புநோக்குக:—

'உடுத்த நீராடையள் உருவச் செவ்வியள்,பிடித்தரு நடையினள் பெண்மை நன்றிவன், அடித்தலந் தீண்டலினவனிக் கம்மயிர், பொடித்தன நிகர்க்குமாற் புல்லெனன் றுன்னுவாள்.'

-கம்பர். சூர்ப்பணகைப்படலம். *19.*

147. [நன்செய் நாட்டில் இன்னும் தமிழே வழங்குகின்றது. பாண்டியனுக்கும் சோனுக்கும் ஒருகால் நன்செய் நாட்டைப்பற்றி விவாதம் வந்தபோது அந்நாட்டில் வழங்கும் தமிழ்ப் பாஷையைச் சான்றாகக் காட்டினதாக ஒரு கதையும் உண்டு.]

157. [விடுப்பன்:இதற்குச் செயப்படு பொருள் நன்செய் நாடு.]

170-1. ஒப்புநோக்குக:-'சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம், சொல்லியவண்ணம் செயல்.'-குறள். *664.*

172-178. திருக்குறளில், 'தூது' என்ற 69-ம் அதிகாரம் இங்கே நோக்கத் தக்கது.

அன்பு etc : 'அன்புடைமையான்ற குடிப்பிறத்தல்வேந்தவாம், பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.'

210-1. இராஜ்ய பரிபாலனத்தின் பொருட்டு ஏற்பட்ட சாஸ்திரம் யாருக்கும் எய்க்க முடியாத ஆழமுடையது;முற்ற அறிந்தவரில்லையென்பது கருத்து. சூத்திரம்-இருபொருள்.

215-6. இங்ஙனம் ப-ப. 'அன்னையும் பின்னர் நோக்காதகன்று-தன்னையும் மறந்து தலைதடுமாற' மு-ப.

226. *Cf.* '*Delay is dangerous.*'

233. ஒப்பு நோக்குக:-'மதி நுட்ப நூலோடுடையார்க்கதி நுட்பம்,யாவுள முன்னிற்பவை.'-குறள். *636.*

244. மலைநாட்டரசரைத் 'திருமேனி' யென்றல் அந்நாட்டு வழக்கு.

247. ஆஞ்சனேயன் (அனுமான்) இராமபிரானிடத்து ஆராதஅன்புடையவன்.

248-9. வாஞ்சையாய்க் குடிப்பனே என்று கூட்டுக.

252-3. *Cf. I.* v. *75-6.*

259. சாட்சியுமோ-சாட்சியும் வேண்டுமோ?

260. 'கைப்புண்ணுக்குக் கண்ணுடி

வேண்டுமோ?' என்பது பழமொழி.

262-3. சுமித்திரை பயந்த புத்திரன்-லக்ஷ்மணர்; இராமருக்குத் துணைவர். வீரவாகு-முருகக் கடவுளுக்குத் துணைவர்.

268.['புறங்குன்றி கண்டனையரேனு மகங்குன்றி,மூக்கிற்கரிய ருடைத்து.' என்னும் திருக்குறளைக்குறிப்பித்துக் குடிலனுடைய வஞ்சகத்தன்மையை நாராயணன்கூறாமற் கூறுகின்றான்.]

278. ஒப்புநோக்குக:-'தேரான் தெளிவும் தெளிந்தான்கணையுறவும்,தீரா விடும்பைதரும்.'—குறள். *510.*

279-80.ஒப்புநோக்குக:-'எனைவகையாற் றேறியக்கண்ணும் வினைவகையான், வேறாகு மாந்தர் பலர்.'

-குறள்.*514.*

283. இதுபோன்று ஒருபழமொழியுண்டு.

286. 'வெளுத்ததெல்லாம் பாலா?' என்பது பழமொழி.

303. கருப்பு-கரும்பு (விகாரம்).

306-309. [பாம்பிற்கு விஷம் தலையிலும் தேளுக்குவாலிலும் ஆதலால் யாவும் அடிமுதல் முடிவரை அரசர் கவனிக்கவேண்டுமென்பதுகருத்து.]

ஒப்புநோக்குக:-

ஈக்குவிடந்தலையி லெய்து மிருந்தேளுக்கு, வாய்த்தவிடங் கொடுக்கில் வாழுமே-நோக்கரிய- பைங்க ணரவுக்கு விடம் பல்லளவே துர்ச்சன ருக்கு, அங்க முழுதும் விடமேயாம்.'

-நீதிவெண்பா.

312. ஒப்புநோக்குக:-'படைகுடிகூழமைச்சு நட்பரணாறும், உடையான் அரசருளேறு.'-குறள்-*381.*

'சூழ்வார்கண்ணாகவொழுகலான் மன்னவன், சூழ்வாரைச் சூழ்ந்துகொளல்.'-குறள்-*445.*

'இந்திரனதுமந்திராலோசனைசபையில் அமைச்சர்கள் ஆயிரவர் உளர். இவர்களே அவனது கண்கள்; இதுபற்றியே அவன் ஆயிரங்கண்ணுடையனாக வழங்கப்படுகின்றான். உண்மையில் அவனுக்குஇரண்டுகண்களேயுள்ளன.'

-கௌடில்யர்.

319-321. சித்திர வொளியானது சில நிலையினின்று நோக்குவார்க்கே நன்கு புலனாவது. அதுபோலக்குடிலனது யதார்த்தகுணம் சிலநிலையினின்று அவனை யுணர்பவருக்கே நன்கு வெளியாகும்.

320-323. [கிராமிய ஜனங்கள் சித்திரவுருவம் உணராமை உபமானம்].

[இக்களத்தில் நாட்டுவளம், திணைமயக்கம், தூதிலக்கணம், செங்கோன்மை அமைச்சுமுதலியன ஒருவாறு கூறப்பட்டமைகாண்க.]

## உ-ம் அங்கம் : உ-ம் களம்.

மு ப. வில் களத்தின் ஆரம்பத்திலுள்ள குறிப்பு 'ஊர்ப்புறம் ஒருசார்' என்றும் 'நடன்: நடராஜன்' என்றும் உள்ளது. ப ப. வில் ஈண்டுள்ளபடி மாற்றப்பட்டது.

4. நீவியம்- இம் மொழி முதலிற் கொய்சகத்திற்குப் பெயராகி, பின் மாதர்கள் அரையிற் சுற்றும் ஆடையெனப்பொருள்பட்டு, பின் பொதுப் படச்சீலையைக் குறிப்பதாயிற்று. இவ்விடத்தில் சித்திரமெழுதும் சீலையை (Canvas)உணர்த்தி நிற்கிறது.

5. 'தீட்டு'மு-ப. 'தீட்டுவான்' ப-ப. [தீட்டு=தீட்ட]

12. சுரைக்கொடி.: ஒப்பு நோக்குக:- 'சிற்றிலாங்கட்........சுரையிவர் மருங்கின்'-புறநானூறு *116.*

14. 'அங்காத்து' மு-ப;'அங்காந்து' ப-ப.

20. மெய்யாந் தம்பெயர் விளம்பி- 'கா கா' என்று கரைந்து.

28. [அது-கீழ்வருக் தோற்றம்.]

30-37. இரண்டு ஆண்பக்ஷிகள் ஒருபெண்பக்ஷிமீது அன்புபாராட்டுவதும், அப்பெண்பக்ஷி அவ்விரண்டினது நிலையினைக் கண்டுங்காணாததுபோல் வேறுதொழிலில் மனம்வைத்துமுயற்சி செய்வதாகப் பாவனை காட்டுவதும் கூறப்படுகின்றது.

33. 'காணார்'- காதலிக்குருகு (37) என்ற எழுவாயின் பயனிலை யன்று. 'கண்டுங்காணார்போல்' என்று சாதாரணமாய் வழங்கும் தொடர் அமைக்கப் பட்டுளது.

33-5. பவளம்போன்ற மூக்கினால் கூழாங்கல்லைப்பழமென்றுபாவித்துக் கொத்தி என்பது பொருள்.

சொரிந்த-மரத்தினின்றும் உதிர்ந்த.

37. போலிக் கூச்சங்காட்டும்- கூசியொடுங்குவதுபோல் நடிக்கும்.

41-48. *Cf.* III. iii. *50-68.*

50-1. ஒப்புநோக்குக:- 'கண்ணோடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச் சொற்கள், என்ன பயனு மில.'
-குறள். *1100.*

53. காரிகை-கற்றாய்.

54. [இவ்வரிக்குப்பின்வரும் ஆசிரியத்துறைகள் மூன்றும், களவு வழியாகப் பலதேவனது கைவசப்பட்ட ஒரு கன்னிகையின் தாய் அவனுக்கும் வாணிக்கும் விவாகம் நிச்சயிக்கப்பட்டமை கேட்டு அவனோடு அக்கற்றாய் கூறுங் கூற்றாய் நிற்கின்றன.]

[2-ம்ஆசிரியத்துறையில், 'காணா', 'பிறர்பொருளெனக் கண்டபின்']

ஆசிரியத்துறைகளின் அமைப்போடு பின்வரும்ஆசிரியத்துறையை யொப்புநோக்குக:-

'கரைபொரு கான்யாற்றங் கல்லதரெம்முள்ளி வருதிராயி,னரையிருள் யாமத் தடுபுலியோ நும்மஞ்சி யகன்று போக, நரையுருமேறுங் கைவேலஞ்சு நும்மை, வரையர மங்கையர் வெளவுத லஞ்சுதும் வாரலையோ.'-யாப்பருங்கலம். முதற்புத்தகம். பக்-*265.*

61. [கிழப்பிணம்=சகடன்.]

64. [மைச்சினி-தன் சோரகாதலிக்குப் பலதேவன் வைத்துக்கொண்ட முறை.]

[இவ்வரியில் கொடுக்கப்படும் பொற்றொடிதான் ௬-ம் அங்கம் ௬-ம் களத்தில் 105-ம் வரியில் கூறப்படும் பொற்றொடி.]

66. [இவ்விடம் எத்தனை?-இந்தச் சோரநாயகி கிரஹம் நீ யின்று ஏறியிறங்கிய கிரஹங்களுள் எத்தனை?]

67. [ஐந்தோ=ஐந்தாவதோ.]

72. [கணிசம்=கண்ணியம்- வழக்கச்சொல். அது=விவாகம். இது=சோரநாயகி போகம்]

88. 'எனிவன்' மு-ப. 'என்னிவன்' ப-ப.

98. இவ்வரிபலதேவனைக்குறித்தது.

99. வாணி தன்னைக்காதலிக்கின்றாள் என்ற உறுதிமொழி. *Cf.* I. ii. *124-5.*

100. முதற்பதிப்பிலும் பரீக்ஷைப் பகுதியிலும் 'உதியன்' என்றே காணப்படுகின்றது. முதியவர் (சகடர்) ஜீவகனிடமே அறிவித்தாராதலினால் (*Cf.* I. iii. *54-137*) பாண்டியன் என்று பொருள்படுஞ்சொல்லே இருத்தல் வேண்டும். 'உசிதன்' என்றது மைத்தவறுதலாய் விழுந்திருக்கலாம். அதனை 'உசிதன்' எனத் திருத்திக் கொள்க. 'உசிதன்' எனப்பாண்டியன் பிறிதோரிடத்தில்(II. iii. *111.*)குறிக்கப்படுகிறான். இறையனாரகப்பொருளுரையிலே வருங் கலித்துறைகளில் 'உசிதன்' என்னும் பிரயோகத்தையும் நோக்குக.

103. ஒப்புநோக்குக:- 'இறக்கினும்

இறைவ ! அதற்கு யானிசையேன்.'
-I. iv. 129.

106. ஒப்புநோக்குக:-' நீர்மேலெழு த்துக்கு நேர்.'

107. [மதி-எழுவாய். திடனே- பய னிலை.]

111-2. ' எரிமுன்னர்- வைத்தூறு போலக் கெடும்'- குறள். 435.

118. [அறிந்தேன்: பலதேவனது ஆ ணையினது உறுதியைக்கண்டு என்ப து அவாய் நிலை.]

119. 'தன்னயம்.' மு-ப. 'தந்நயம்.' ப-ப.

123-124. [அவர்=கடல், பெண்க ள், ஆகிய இருவரும்.]

127-8. கொள்கை விள்ளாமுரண்- சன்மார்க்கத்திற்குரிய கொள்கைகளை விடாதுபற்றிநிற்கும் மனவுறுதி.

132. 'கேடு அவர்' ப-ப. 'கேடு இ வர்' மு-ப. [இவர்=பெண்கள்.]

133. 'கொடிய அலகைகள்' மு-ப. 'கொடிய இவ் அலகைகள்' ப-ப.

134. [இவரும்=பலதேவனைப் போ ன்ற துன்மார்க்கரும்.]

137. 'வாணிபம்.' மு-ப.'வாணிகம்.' ப-ப.

152. 'சேர்க்கு.' மு-ப; 'சேர்த்து.' ப ப.

153. [மங்கையர்=முன் கூறிய மண விணையில் வரும் மனைவியர்.]

157-9. *Cf*. 'மந்திர வாள்பெற்றும் ப லகையை வெல்லார்-மற்றது கொண்டுந் தோதம் மெய்யையரி வார்போல்.'

158. [மாற்றலர்=மாற்றலரை.]

164-5. *Cf*.'இல்லதென் இல்லவள் மாண்பானல்'-குறள். 53.

166. *Cf*. 'பொன்மலர்நாற்றமுடைத் து.' -நீதிநெறிவிளக்கம்-5.

168-185. ' கருதாது , கம்மியனே யென நல்லுணர்வின்றி, மடத்தனங்க ருதிக் கெடுத்திடுமோர்தர்' என முடிக்க.

169. 'கற்பகத்தரு.' மு-ப. 'கற்பக தரு.' ப-ப.

181. [யாரையும்=எத்தன்மையனை யும்.]

192-3. நடராஜன் 'கேட்டதும் கண் டதும்' (187) நாராயணன் அறியாதத லினால் 'புதுமை' யென்றான்.

[இக்களத்தில் சூரியோதய வருண னையும் இல்லற இயல்பும் கூறினமை காண்க.]

உ-ம் அங்கம் : ரு-ம் களம்.

நடர்க்குறிப்பு : இங்ஙனம் ப-ப.
'நடன்: புருஷோத்தமன்' மு-ப.
*Cf.The Secret Way. ll. 257-290.*

9. ஒப்புநோக்குக:-'மத்துறு தண் டயிரிற்புலன் தீக்கதுவக்கலங்கி'
-திருவாசகம். நீத்தல்விண். 30.

13. நாள்பலவானவே-பலநாளாகக் காணுகின்றோமே.

17. கனவிற் காணப்படுந் தோற் றத்தைக்காட்டினும்தெளிவாகக்குறிப் பிட்ட காலத்தில் நியதமாய்த்தோன்று கிறது.

20.'வளருமே.'மு-ப.'வளர்வது.'ப-ப.

29. ஒப்புநோக்குக:-'யான்நோக்குங் காலை நிலனோக்கும் நோக்காக்கால்- தான் நோக்கி மெல்ல நகும்.'-குறள். 1094.

34. 'சற்றுகவிழ்த்தி.' மு-ப. 'சற் றுக்கவிழ்த்தி.' ப-ப.

36. அவணின்ற : (i) அவள்நின்ற (ii) அவண் நின்ற

39-40. 'தோகை மாதர்கள் மைந்த ரிற்றோன்றினர்சுற்ற'-கம்பர்.சுந்தர. -பிணிவீ-45.

57. குடங்கையைத்தலையணையாகக் கொண்டு சிற்றரசர்கள் உறங்க.

65-73. 'மாநகர் கண்டு, ஈட்டமும் அரசும் வெருவிஞெரோலென எல்லை யும்தாழ்ச்சியும்காண அகழ்வலக்தொட் டு, கட்டியமதிற்கணம்காக்க இயற்றி, எனக்கூட்டுக.

72. இவ்வாறுப-ப.'எழுந்துப ற்றி யிழுக்கும் புலன்களின்.' மு-ப.

76. இவ்வாறு ப-ப. 'நாடொன்று ளதே.' மு-ப.

89. இங்ஙனம் பரீக்ஷப்பகுதியிற் பாடம். முதற்பதிப்பில் 'உசிதனுமுதி யனும்-போர் தனிபுரியில்யாரேபிழை ப்பர்?, தங்குலமுதல்வராந் திங்களுமிர வியு, மெதிர்படுங்காலை கதிர் விடுங்க டவுள்.' என்று பாடம்.

91. [இரவியும் திங்களும் சமநிலைவ ருங்கால் திங்களின் சாயையால் சூரிய கிரஹணம் நேருமென்பதுகணித சித் தாந்தம்.]

101. இங்ஙனம் ப-ப. 'ஓர்ந்து மீ ளவே விடுத்தான். ஓஹோ!' மு-ப.

102. 'தீர்ந்ததோ' மு-ப. 'முடிந்த தோ.' ப-ப.

103. 'விளம்புவன்.' மு-ப. 'விளம் புதும்.' ப-ப.

108. 'பயந்தார்'. என்பது 'பயம்' என்னும் வடமொழிப் பெயர்ச்சொல் லினடியாகப்பிறந்த வினை.

113. மலர் - மனோன்மணி.

114. அளி - புருஷோத்தமன்.

118. பலாப்பழத்திற்கு ஈப்பிடித்து விடவேண்டுமா?'-பழமொழி.

119. 'கல்லது.' மு-ப. 'கன்று' ப-ப.

122. *Cf. The Secret Way.l. 230.*

127-130. இங்ஙனம் ப-ப. முதற் பதிப்பில்

" உடல் பொருளாவி யாவையுமொ ருத்து, கடை பிணம்போல நாள்பல திரிந்து, முடியுடன் செங்கோலடியி னை வைத்து மற்,றொருவரை வணங் காப் புரவலர் நிற்க" என்றுகாணப்படு கின்றது.

140. யார்பகை-யாருடையபகை.

168. ஒப்பிடுக:-'பேசாதநாளெல்லாம் பிறவா நாளே.'-நாவுக்கரசு.

179. 'அதிற்குழி.' மு-ப.'அலாற்கு ழி.' ப-ப.

[இது ஒரு பழமொழி.'அதில்' என் பதை 'அலால்' என்று மாற்றினும் அமையும்.]

182. குறித்து-செய்தற்பொருட்டு.

[இவ்வங்கத்தின் கடையில் வரும் கலித்துறை மனோன்மணியும்புருடோ த்தமனும் நேர்பட ஒருவரையொருவர் அறியாதிருக்கவும் அவர்க்குள் இச்சை யுண்டாம்படி யிருவருக்கும் நிகழ்ந்த கனுக்காட்சியைஞானபரமாகப் பொ ருட்படுத்துகின்றது.

பாசத்துக்குட்பட்ட ஜீவர்கள் செய் யும் ஈசுரபக்தியும் ஈசுரன் ஜீவர்களிட த்தில் வைத்திருக்கும் காருண்ணியமு ம் கேவல சாக்ஷாத்காரத்திற்கேதுவாயி னும் அவ்வனுபூதி நிலையில் இல்லாது நீங்குவதுபற்றி அவற்றையும் அஞ் ஞானதிசையில் தோற்றும் தீர்க்க சொற்பனமான ஜகதாதி திரிபுடியோ டு சேர்த்து விவகரித்தல் தத்துவ சாஸ் திர வழக்கம்.]

## மூன்றாம் அங்கம்: முதற் களம்.

1. 'அருஞ்சுள்'மு-ப.அச்சுப்பிழை.

10. முயற்சியிலும் மதியிலும் முதி ர்ந்தவன்.

21. லக்ஷ்மிதேவியும் தனக்கு அழ கினல் ஏற்பட்டபெருமை தொலைந்து விடுமோ என்று கவலைகொள்ளத்தக்க ரூபலாவண்யம்.

26. ஒப்புநோக்குக:-'சிறையு முண் டோ செழும்புனல் மிக்குழீஇ.'

-மணிமேகலை. V. 19.

43. முதற்பதிப்பில்' அவையகத்து' என்றுள்ளது: அச்சுப்பிழை. 'அவய வத்து' என்றிருத்தல் வேண்டும்.

56. பலதேவன் மனோன்மணியின் மீது மிக்க அன்புடையனுயிருக்குங் காரணத்தினுல்தான் அவளது தன்

மையெல்லாம் புருஷோத்தமன் நன் கறியும்வண்ணம் அவனுக்கு எடுத்து ரைத்திருப்பான் என்று யான் கூறியது (மேல் 40-ம் வரிநோக்குக).

78. அவ்விடத்து-அவ்விஷயத்தில்.

79. 'செறுக்கும்.' மு ப. அச்சுப் பிழை.

86-7. *Cf. The Secret Way l. 188.*

105. 'செறுக்கும்.' மு-ப. அச்சுப் பிழை.

107-8. ஒப்புநோக்குக:-தினைத்துணை யாங்குற்றம்வரினும்பனைத் துணையாக் கொள்வர்பழிகாணுவார்.-குறள். 433.

131. 'இழிவையும்' -'குற்றமும்' என்றதனோடொப்ப 'இழிவும்' என வேற்றுமையுருபுதொக்கு நிற்பின் நலம்.

144-5. ஒரு பழமொழி.

153. ஒழுங்கே-ஒழுங்காக.

162. 163. 164. பழமொழிகள்.

178. [முதலை தான்கொன்ற மிருகாதிகளைத்தின்னும்போது கண்ணீர் விடுக்குமென்பது உலகவழக்கு. *Cf. Crocodiles' tears.*] இக்கருத்து ஆங்கில நூல்களிற் காணப்படுகிறது.

180. இவையென்றது முற்கூறிய நீதிமொழிகளை.

## ௩-ம் அங்கம் : உ-ம் களம்.

1. காலை--நாளைக் காலையில். சுந்தர முனிவரது ஆச்சிரமம் நகர்க்கு வெளியேயுள்ளதாதலின் 'கடந்து' எனப் பட்டது. சுருங்கை வேலை பகலிலும் நடந்து வந்ததென்பது. 'பன்னாள் இரவும் பகலும் உழைத்தீர்' எனச் சுந்தர முனிவர் கூறுவதால் (III-iv. 269) அறியலாம்.

'கடிபுரி.' மு-ப. 'கடிநகர்.' ப-ப.

2. [வேலை = சுந்தர முனிவரும் நடராஜனுமாகப் பாண்டியன் மனைமுதல் முனிவர் ஆச்சிரமம் வரையும்வெட்டிவரும் சுரங்கவேலை.]

'வேண்டில்.' மு-ப. 'வேண்டின்.' ப ப.

1-3. இரவுகொண்டே முடிக்கக்கூடிய அளவில் சுருங்கைவேலை ஆய்விட்டது; ஆதலால் மறுநாட்காலையிற் சென்று எஞ்சியுள்ள வேலையைச் செய்து முடிக்கலாம் என்று நடராஜன் எண்ணுகிறான். ஆனால் சேரநாட்டுப் படை வருதல் கண்டதும் அவன் அதனைச் சுந்தரமுனிவரிடஞ் சென்று அறிவிக்க (III. ii. 219-20.) இருவரும் ஆலோசனை செய்து இரவிலேயே சுருங்கையை முடித்து விடுகின்றார்கள். (III. iv. 256-7.)

3-5. [இவ்வரிகள் முகத்தைச் சந்திரனோடும் பின்னியிட்ட கூந்தலைக் கிரஹணச் சாயையோடும் உவமிக்கின்றன.]

ஒப்புநோக்குக:— 'சிறுக்கின்ற வாண்முகமும் செங்கரந்தட் கையால், முறுக்குநெடு மூரிக் குழலும்—குறிக்கின்- கரும்பாம்பு வெண்மதியைக்கைக் கொண்ட காட்சி'-நளவெண்பா.

பேதை-வாணி. ஆபத்காலத்து உதவும்படி சுருங்கையியற்றப்படுவ்தாதலின், மனோன்மணி முதலிய பிறரோடொப்ப வாணியும் இச்சுருங்கையால் க்ஷேமமெய்துவள். இது பற்றியே வாணியின் இளமைமாறாதமுகம் தன்னுளத்திருந்து சுருங்கையியற்று கின்றதென நடராஜன் கூறுகின்றான்.

13-32. [தாவர சிருட்டிகளின் செய்கை விசித்திரங்களிலும் தெய்வ அருள் நிறைந்து கிடக்கும் தன்மையை இவ்வரிகள் விளக்குகின்றன.].

14. [குறிப்பு = நோக்கம்; உத்தேசம்.]

இங்கே குறிப்பு என்றது பாரம்பர்ய அபிவிருத்தியை (The Propagation of Species.)

15. அடி-அடிப்பிதழ். காம்பு அல்லது நாளம் எனினும் பொருந்தும். அதன்

பூக்குலையின் அடியிதழொன்றினை யுயர்த்தி யென்க.

15-18. பூக்களில் தேனிருக்குங் காரணத்தையும், அதனையுண்ணும் பொருட்டு ஈ, வண்டு முதலியன வந்துமொய்த்தலால் உண்டாம்பிரயோஜனத்தையும், பூம்பராகம் பரவவேண்டுதலின் ஆவசியகத்தையும் தாவர நூலில் (Botany) 'Pollination' என்ற பகுதியைநோக்கி யுணர்ந்துகொள்க.

20. தோட்டி– வித்துக்களெல்லாம் தாய்ச்செடியின் அடியில் விழுந்து முளைப்பதாயின் ஆகாரச் செழிப்பின்றி வளர்ச்சி குன்றிப்போகும். ஆதலால் வித்துக்கள் பலவிடங்களிலும் பரவிச் செல்லவேண்டும் ஆவசியகம் நேரிடுகின்றது. இவ்வாறு பரவுதற்கு அநுகூலமாகச் சிலஜாதிவித்துக்காய்களில் முட்கள், துரட்டிகள் முதலாயவை ஏற்பட்டுள்ளன. இவற்றின் உதவியால் மக்களது ஆடையினும் எருது, ஆடு முதலியவற்றின் சரீரத்தினும் சிக்கிச் சென்று தூரத்தே வீழ்ந்து வித்துக்கள் சிதறி முளைக்கின்றன. தாவரநூலில் 'The Distribution of Seeds' என்ற பகுதியை நோக்குக.

15-25. 'அதன்' என்ற பிரயோகங் காரணமாக 'உயர்த்தி', 'அழைத்து', 'அருத்தி', 'பரப்பித்து', 'ஆக்கி', 'கொடுத்து' என்பனவற்றைப் பூக்குலையின் வினைகளாகக்கொண்டு கடைசியிலுள்ள எச்சத்தைக் 'கொடுக்க' எனத்திரித்துப்பொருள்கொள்வர் பண்டிதர்-சடகோப ராமாநுஜாச்சாரியார். இவற்றைப் புல்லினது வினைகளாகக் கொள்ளுதலே மிகப்பொருத்தமாவது.

23-4. உங்களையடுத்துவரும் பக்ஷி, பசு, எருது, ஆடுமுதலியவற்றின் அவயவங்களின் ஒவ்வொருபக்கத்தில் சிக்கிச்செல்லுங்கள்.

25. 'புக்க'- 'புக' என்பதுஎதுகைநோக்கி இங்ஙனந் திரிந்தது.

33-65 [பூதபௌதிகங்களாகிய ஜடபதார்த்தங்களின் சலனங்களிலும் விளங்கும் அருள்விசேஷத்தை இவ்வரிகள் காட்டுகின்றன.]

43 ஒப்புநோக்குக:-'காலத்தச்சன்-வெட்டிமுறிக்குமரம்.'

-பட்டினத்துப்பிள்ளை.

45. 'ஐயா' என்றது காலத்தச்சனை.

49. 'குடல்.' மு-ப. 'குடர்.' ப-ப.

54. 'இங்கு.' மு-ப. 'அங்கு.' ப-ப.

61. [யான் தடுப்பதால் வரும் காலதாமசத்தை யுன்னி நீ யிரைகின்றாய் போலும். இனி அழவேண்டாம். விடுகின்றேன் என்பது பொருள்.]

65. உனைப்போல்-உனக்கு இருப்பது போல. (80-ம் வரியிலும் இங்ஙனமே.)

66-82. [கிருமிகீடாதிகளாகிய அற்ப ஜீவஜந்துக்களிடத்திலும் பேரருள் அமைவுற்றிருப்பதை விளக்க எடுத்த இவ்வரிகள் கேவலம் ஓரறிவுயிராகிய நாங்கூழ்ப்புழுவின் செய்கை விசித்திரத்தை வர்ணிக்கின்றன. புற்பூண்டுகூடவும் முளைப்பதற்குத்தகாத சாரமற்றமண்ணினையும் நாங்கூழ்ப்புழுமென்று பசைப்படுத்தி வெளிப்படுத்துகின்றது என்பது ஜீவசாஸ்திர நிர்ணயம். அங்ஙனம் வெளிப்படுத்திக் குழியுள் மறையும்போது தன் அதோபாகத்தில் ஒட்டியிருக்கும் ஒரு உருளை மண்ணால் நாங்கூழ்ப்புழு அக்குழித் துவாரத்தை யடைத்துக் கொள்வது கவனித்தால் யாரும் காணலாம்.]

68. ஒப்புநோக் குக:'சுழன்றுமேர்ப் பின்னதுலகம் அதனால், உழந்து முழவே தலை.'-குறள். 1031.

78. ஒப்புநோக்குக:- 'எறும்பிடை நாங்கூழென'- திருவாசகம்.

83-85. மேற்கூறியவாறு இன்பமும்

அன்பும் இயற்கைத் தோற்றங்களில் அமைந்திருக்குந் தன்மையைக் கண்டு அதில் ஈடுபடாதவர்வாழும் வாழ்க்கை பயனற்றது.

86-89. சூரியனது கதிர்கள் ஒருமுகப்பட்டு வீழ்ந்து, பின்திரண்டு விளங்குதற்கு இடமாயிருப்பது சிற்றுடியின் மையம் (Focus). சிற்றுடிபோல்வது உடல்; அதன் மையம்போல்வது உள்ளம். மையத்திற்குச் சிற்றுடி ஆதாரமாயிருப்பதுபோல, உடலும் உள்ளத்தைத்தாங்கிநின்று அதற்கு ஆதாரமாயிருக்கின்றது. இவ் வுள்ளம், பரந்து சிதறிக் கிடக்கும் கல்வியல்புகள் யாவும் ஒருமுகப்பட்டு விளங்கித் தோன்றுதற்கு இடமாயுள்ளது.

88. [சிற்றுடி = சூரிய கிரணங்களை ஒன்றுசேர்த்து அக்கினி விளைவிக்கும் சிறு கண்ணுடி (hand lens) ]

90. [தீயன்-பலதேவன்.]

92. 'கிருபணன்', 'தீனன்'-சகடர்.

93. 'புகையல' மு-ப. 'புகையோ?' ப-ப.

94. ['செந்நிறப்படாமென' இதனை 99-ல் வரும் 'புதைத்த' என்பதோடு கூட்டுக.]

95. 'பொதியை' மு-ப. 'பொதியில்' ப-ப. பொதியில் என்ற மலையினது முகடாகிய கருவில்என்பது பொருள்.

101. 'அலவோ.' மு-ப. 'அன்றே.' ப-ப.

'பார்க்கில்' மு-ப. 'பார்க்கின்' ப-ப.

வஞ்சித்தாழிசை : 'இருசீராணுகிய காலடியுடைய செய்யுள் ஒருபொருள்மேல் மூன்றாய்வருவன வஞ்சித்தாழிசை.' -இலக்கண விளக்கம்.

,, 3. ['எள்' என்பது தம் சக்தியால் செய்யப்படும்தர்ப்பணக்கிரியை.] பிதிர்களுக்கு எள்ளுந்தண்ணீரும் இறைக்க உதவமாட்டீர்கள் என்பது கருத்து.

111. [வஞ்சித் தொடை = பகைவர் மேற் செல்லும் சேவகர் மாலை.]

114-5. இருகனல்-கண்கள்; முகில்-முகம்; கோபமிகுதியாற் கண்கள்சிவந்தன, முகம் கறுத்தது. மின்னல்-சினநகை.

119. கொய்யுளைத்திரைக் கடல் = குதிரைக்கூட்டம்.

120. மதமைம்முகிலீட்டம்-யானைக்கூட்டம்.

'வான்றெட நிமிர்ந்த' மு-ப. 'வான்றெடு விலோதனப்' ப ப.

122. சிறைவிரித்து செல்லும் அசலத்திரள்-தேர்க்கூட்டம். சிறை-கொடி.

131. ஒரு பழமொழி.

166. 'வலியோர்'-'பெரியோர்' என்றபொருளில் மலையாள வழக்கு. ஒப்புநோக்குக:-'வலியவீடு.'

166-168. முகக்குறி முதலியவற்றைப்போல வலியோரிடத்தில் தோன்றுவனவற்றில் வேறு எவை தாம் மனக்குறியைக் காட்டும்? (*Cf. l. 212-215.*) என்றேனும் மனக்குறி முதலியவற்றைப்போல் மேற் செய்யவெண்ணியிருப்பனவற்றை எவை தாம் காட்டவல்லன? என்றேனும் பொருள் கொள்க.

172, 177. காக்கைச் சுப்பன், இரும்படியிராமன்: கிராமாந்தர வாசிகளால் ஒவ்வோர் காரணம்பற்றி வழங்கப்பட்ட அடைமொழிகளோடு கூடிய பெயர்கள்.

187. ஒப்புநோக்குக:-'தாயிற் சிறந்த தயாவான தத்துவனே.'-திருவாசகம்.

189. *Cf.* 'Visiting the iniquity of the fathers upon the children'-*Exodus.* XX. *5.*

202-3. சிறுமியாது மழலைச் சொல்லினையும் கிளியினது மதுர மொழியினையும்போன்று கேட்போருள்ளத்தே இன்பம் விளைக்க வல்லதாகும்.

208. *Cf.* Vox Populi Vox Dei.

209. 'அரண்மனை ரகசியம் அங்காடிப் பரசியம்' என்பது மலைநாட்டுப் பழமொழி.

[இக்களத்தில் சூரியாஸ்தமனமும் சராசரங்களில் தோற்றும் திருவருள் வைபவமும் ஒருவாறு வருணித்தமை காண்க.]

௩-ம் அங்கம் : ௩-ம் களம்.

2. சுடுமே-உஷ்ணம்அதிகப்படுமே.

12. 'அம்ம!' மு-ப.'அம்மா!' ப-ப.

13-15. [அரண்மனை முதல் ஆச்சிரமம் வரையும் முனிவர் சுருங்கைதோண்டுவதால் உண்டாம் ஓசையை இவ்வரிகள் குறிப்பிக்கின்றன.]

19. [இவ்விதம் நீ காதல்கொள்ளக் காரணமானது கனாக்காட்சியோ என்பதுபொருள்.]

23. [கண்ணுளார் = கண்ணுக்குள்ளிருக்கின்றார்.]

29.'அலளே.' மு ப.'அலையே'ப-ப. [சித்திரரேகை = சித்திரலேகை = உஷையின்தோழி.]

பாணாசுரன் மகளாகிய உஷையென்பவள் ஒருபுருஷனைக்கனவிற் கண்டு காதலித்து விழித்து நோக்கிய அளவிற்காணாது வருத்தமுற்றுத் தன்குறையைத்தன்தோழியாகிய சித்திரரேகையிடங் கூறினாள். சித்திரரேகை அரசர்களுடைய உருவங்களையெல்லாம் எழுதிக்காட்ட, அநிருத்தன் தான் கனவில் தோன்றியவனென நிச்சயமாயிற்று. பின்னர் சித்திரரேகை தனது மாயாபலத்தினால் உறங்கிக்கொண்டிருந்த அநிருத்தனைக் கட்டிலோடு தூக்கிவந்து உஷையிடம் சேர்த்தாள் என்பது கதை.

34. பழகியும் உனையே = நடராஜனை நேரிற்கண்டுபழகியும்உள்ளாயே.[கண்டு பழகும் பாக்கியம் நான் பெற்றிலேன் என்பது கருத்து.]

37. [அவ்விசை = வாணி யத்தருணத்தில்யாழில் மீட்டியஇராகம். ஒவ்வுமித்தருணம் = செவ்விதித்தருணம்.]

சிவகாமிசரிதம்.

மு-ப வில் 'சிவகாமி சரிதை' யென்று பெயரிடப் பட்டிருக்கின்றது. 1889-ம் வருஷத்தில் அச்சிட்ட தனிப்பதிப்பில் 'சிவகாமி சரிதம்'என்றுள்ளது. Goldsmith என்னும் ஆங்கிலகவியெழுதிய '*The Vicar of Wakefield*' என்ற நூலில்வரும் ஒரு சிறு கதைப் பாட்டைத் தழுவித் தமிழ்நாட்டிற்கியையும் வண்ணம் இச்சரிதம் அமைக்கப்பட்டதாகும். தனிப்பதிப்பில் பின்வருங்காப்புச் செய்யுள் காணப்படுகிறது:-

'நானே சிவகாமி நற்சரிதஞ் செப்புவனென், றேனோ தடுமாற்ற மென்னெஞ்சே - மானேய்தீர் - போதகமே செய்யுமுக்கட் போதகமே நம்போதப், போதகமே வீற்றிருக்கும் போது.'

1. அளித்த- ரக்ஷித்த, பாதுகாத்த. *Cf.* 'Where wilds, immeasurably spread | Seem lengthening as I go.'-*Goldsmith.*

2. 'உடலமாறும்வகைவீடுளதேல் அடையும்நெறியருளாய்'-இருபொருள்.

3. 'சிந்தையற நொந்தவர்க்குச்சேர விலைபந்தம்'- தம்மையொறுத்து மனமெனப்படுவது இல்லையாம்படி செய்துகொண்டவர்களுக்குவீடுவாசல் என்ற பந்தங்கள் சேருதற்கில்லை.

4. ஆசையெலாந்துறந்த- அதிவீரர்: ஒப்புநோக்குக:-'மாரனைவெல்லும்வீர' -மணிமேகலை. XI. 61.

6. உ-ம் அடி [பழநினைவு = முன் சிதம்பரனோடு பழகிய பழக்கத்தால் அவனது குரல் சைகை முதலியவை முனிவனிடத்தில் கண்டதால் வரும் நினைவு. ஞானநூற்கும் பூர்வ வாசனை.]

8. 'கண்ணீரருவி அகமுடைத்து'- இருபொருள்.

10. அறிவரிய-அளவு அறிய முடியாத (சின்னம்).

12. நுழைந்தும்; குதித்தும், தாண்டியடைந்தார் என்க. 'ஒருங்கார நிறைமுளரியுழையொதுக்கி'-ஒன்றாகச்செறிந்து நிறைந்த முட்காடுகளை இருபுறமும் ஒதுக்கி என்பதுபொருள்.

13. 'தன்னுண் நிறுவு தலை வளைத்தழைக்கு நெருப்பு'=தனது நுண்ணிய நிமிர்ந்த ஜ்வாலைக் கொழுந்தாகிய தலையைத் தாழ்த்தி வணக்கஞ்செய்து அழைக்கும் நெருப்பு.

16. க-ம் அடி [சிஹ்வா சாபல்லியம்.]

20. உ-ம் அடி. [எலி பிடிக்கும் = எலிப்பிடிக்கும் = எலியைப்பிடிக்கும்.]

23. இலவு காத்தகிளி-பழமொழி.

24. 'மொய்க்கு நெய்க்குடந்தன்னை யெறும்பென்னவே'-திருவாசகம்.
நீத்தல்விண்ணப்பம். 24.

பெருங்கபடமிடுகலன்—எளிதிற் கண்டுபிடிக்கமுடியாதவஞ்சகத்தை யிட்டுவைத்த பாத்திரம்.

29. தன்மெய் விளங்க-இருபொருள். தெய்வமொடு etc. *Cf.*

And "Ah! forgive a stranger rude- | A wretch forlorn," she cried; | "Whose feet unhallow'd thus intrude | Where Heaven and you reside."-*Goldsmith.*

தனிப்பதிப்பில் 34 முதல் 37 வரையுள்ள செய்யுட்கள்பின்வருமாறு காணப்படுகின்றன:-

34. 'வந்தி சிறுதாயொரு நாள் வாதனையா யிந்த, வையகமு மென்பெரிய வாழ்வனைத்துமின்றே, தந்தனனென்றாள் தனுற்றமையுளம் வந்த, தருக்குமகங்காரப் பெருக்குஞ் சாற்றவெளிதன்றே.'

35. 'குறியா வென்னிலை யுணர்ந்தாகோதறுமென்றலைவர், கொண்டகருத்திற்தடுத்தேன்குடிமுழுதுங் கெடுத்தேன், அறியாமலறிவிலியானவர்காதல் வலியு, மளந்தறிய வெத்தனித்தேனது முதலாத்தனித்தேன்.'

36. 'பொருளிருந்து மெழிலிருந்தும் புகழிருந்து மருந்தும், போக்கியமும் பாக்கியமும் நீக்கமற விருந்தும், அருளரும்பு மதிபரென தகமகன்று மறைந்த, வன்றுமுத லிலக்கமிலா வலக்கணுள நிறைந்த.'

37. 'உய்யுநெறி யொவ்வொருகாலுன்னி நிறைசிந்தி, ஓ தலைவா வென்னிலன்னை யோதலை வாவென்பள், வையகமே வையகமேயென வொறுப்பள் வந்தி, வஞ்சகியரென்சகியர் வளர்த்திடுவரம்பல்.'

தனிப்பதிப்பில் கீழ்வருஞ் செய்யுள் அதிகமாகக் காணப்படுகின்றது.

'வண்டினமே தூதேகும் வண்டினமே தென்றல், வண்டினமென் கையொழியுங் கொண்டை துவண்டிழியும், எண்டொடி நீ யேகலையே யேகலையே யென்றா, லென்கலையு மேகலையுமே கலையுங்குலையும்.'

38. [வேலை = சமுத்திரம்: பிரவர்த்தி. கலைமதி = சந்திரன்: கலைஞானம். கால் = தென்றல்: உச்சுவாச நிச்சுவாசம்.]

40. கண்டுயிலுமில்லிடம் தீக்கதுவ வெளியோடுங் கணக்கு: ஒப்புநோக்குக:—

'நித்திரை செய்வீட்டில் நெருப்பும் பெரும்படையும், முற்றிப் புறப்பட்டார்முற்றத்தே-பித்தரைப் போல்-நில்லென்று சொன்னாலும் நிற்பரோ வப்படிக்காண், இல்லறத்தை நீத்தாரியல்பு.'
-ஒழிவிலொடுக்கம்.

42. [அஞ்ஞான மயக்கம்விடாத சகலகலைஞானங்களே! பிடிவாதமே வாழ்க்கையாக்கொண்ட மதச்சச்சரவுகளாலெழும் ஆரவாரமே! அனித்தசடதுக்கரூபமாகிய இஹலோகமே! சுகம்

சுகம் என்று கூறப்படும் இந்திராதிபத
மோக்ஷங்களாகிய பரலோகமே! என்
னும் தத்துவார்த்தம்ஒருவாறு தொனி
த்தல் காண்க.]

45. 'என்னலமும்.' மு-ப. அச்சுப்
பிழை.

தனிப்பதிப்பில் 'பரித்துவத்து' என்
றசெய்யுளோடு சிவகாமி சரிதம் முடி
வெய்துகின்றது. 'ஆழிபுடைசூழுல
கம்' என்னுஞ்செய்யுள் பின்னர்ச்சேர்
க்கப்பட்டதாதல் வேண்டும்.

---

40. 'இனிதாய்.'மு-ப. 'இனியவாய்'
ப-ப.

43. இங்ஙனம் ப-ப. 'மனதிலெப்
போது மன்னினர் : மாறுர்.' மு-ப.

54-55. நிலாநிழற் சிற்றில்-நீரிற்பிர
திபலிக்கின்ற சந்திரனது நிழலாகிய
சிறுவீடு. 'நிலவினொளியிலே செய்த
விளையாட்டுச் சிறுவீடு......சிற்றிலெ
ன்றது வாய்க்காற் கரைகளிலுள்ள சி
று மணல்திட்டைகளை'யென்பர் பண்
டிதர்-சடகோபராமாநுஜாச்சாரியார்.

'சிற்றில் சிதைத்தல்'-என்னும் அழ
கிய கருத்து பிள்ளைத்தமிழ்ப்பிரபந்தத்
தில் ஓர் உறுப்பாக வரும்.

61-68. ஒப்புநோக்குக:-II. ii. வரி.
41-48.

62. 'ஈந்தார்.' மு-ப. 'ஈந்தனர்'ப-ப.

64. மணம்முகத்திலன்-மணமனைத்
தையும் ஒருசேர உட்கொண்டிலன்.
மணம் உகத்திலன் எனப் பிரித்துப்
பொருள் காணுதலும் தகும்.

66. 'ஆர்வமும் அன்பும்'-'அன்பீனு
ம் ஆர்வமுடைமை' என்ற குறளின்
(74)உரையில் இவ்விரண்டிற்குமுள்ள
வேறுபாடு கண்டுகொள்க.

66-7. 'மான, விம்மித்து' என்று கூட்
டுக.

73-4. இவ்வாறு பரீக்ஷைப்பகுதியி
ல் மாற்றப்பட்டது. முதற் பதிப்பில்
'பதிலுரையொன்றும் பகராதேகினர்.
அதுமுதலிது காருயும், ஐயோ!' என்
றுளது

80. ஒப்புநோக்குக:-'புணர்ச்சிபழகு
தல் வேண்டா வுணர்ச்சிதான்,நட்பாங்
கிழமை தரும்.'-குறள். 785.

85-91. கருவி எத்துணை நுண்ணி
தாகின்றதோ அத்துணை காட்சியும்
தெளிவுபெறும் என்பது பொதுவிதி.
உதாரணமாகத் துவக்குஇந்திரியம் த
ன்மீது பட்டதொன்றனையே உணர
வல்லது ; இதனினும் நுண்ணிதாகிய
கண்ணோவெனின் எண்ணறச்சேய்த்
தாமொளியையுஞ் உணரவல்லது; இக்
கண்ணினும் மிக நுண்ணிதாகிய உள்
ளமானது, களங்கமற்றுவிடின், அண்
மை சேய்மை யென்றில்லாதபடி எல்
லாவற்றையும் அறியவல்லது.

85. 'நெடுந்தூரத்தையும் நுட்பமா
கக் கவரவல்லதொரு யந்திர சக்தி
போலக் கண்ணின் புலனுகிய காட்சி
விளங்கும்' என்பர் பண்டிதர்-சடகோ
பராமாநுஜாச்சாரியார்.

95.[வடக்குநோக்கி = திசைகாட்டும்
யந்திரம் (mariner's compass).]

105. இவ்வாறு பரீக்ஷைப்பகுதியில்
மாற்றப்பட்டது. முதற்பதிப்பில்'பொ
ரும்பக்குவமிலார்' என்றுள்ளது.

110. நம்பல்-நம்பிக் கொள்ளுதல்
(Complete Trust). 'ஆசைப்பெருக்
கம்' என்பர் பண்டிதர்-சடகோபராமா
நுஜாச்சாரியார்.

113. இவ்வாறு ப-ப. முதற்பதிப்
பில் 'இறுகிச்சீர்' 'வளர்ந்தி' என்
றுள்ளது.

123. இவ்வாறு பரீக்ஷைப்பகுதியில்.
முதற்பதிப்பில் 'இக்குளிர் காற்றிலெ
தற்கு மிங்கிருத்தல்' என்றிருக்கிறது.

135. உறுதி காரணமாக மீட்டும்
'விளம்புவன்' என்றான்.

[இக்களத்தில் சந்தியாவருணனையும்

மனோன்மணியின் சோகநிலையும் பக்தியின் சுபாவமும் உபயார்த்தமுடைய சிவகாமிசரிதமும் சொல்லப்பட்டமை காண்க.]

ரு-ம் அங்கம் : ச-ம் களம்.

26. கோவு சாவு என்பன ஈக்கும் கமக்கும் ஒன்றுபோலவேயாம்; யாதொரு வித்தியாசமுமில்லை.

29. இத்தப்பூமி ஐம்பதுகோடியோஜனை விஸ்தீர்ணமுடையதாகப் பௌராணிகர் கூறுவர். ச்ராவண உபாகர்மத்தில் (ஆவணியாவட்டம்) பிராமணர்கள் செய்துவரும் மஹாசங்கல்பத்தில் 'பஞ்சாசத்கோடி யோஜக விஸ்தீர்ணயாம்......பூம்யாம்'எனவரும்.

54. [மாயாகாரிய மாகிய பிரபஞ்சம்]

64. [ஆர்க்கும்=வருந்தியிரைகின்ற]

75. 'நிருபாதிகம்' மு-ப. அச்சுப்பிழை.

80. [சுதமாம்=சுவதசித்தமாம்=தானே பவிக்கின்ற.]

124. இதுவல-ஒருமைப்பன்மை மயக்கம். செறிகள் பலவாதல்பற்றி இம்மயக்கம் சேர்ந்தது.

142. பற்றுவிட்டதும் உண்மைநிலையைத்தொட்டதும் என்க.

146. *Cf.* வரி *24.*

160. *Cf.* வரி. *54.*

161. 'கூறிய': *Cf.* வரி *13-21.*

167-171. இருபொருள்.

173-175. *Cf.*'சுடச்சுடரும்பொன்போ லொளிவிடுக் துன்பம், சுடச்சுட நோற்கிற்பவர்க்கு'-குறள். *267.*

179-182. [பாரிஜாதம் முல்லைமுதலிய பூக்கள்வெண்மை நிறமும் சுகந்தமும் உடையனவாயிருப்பதற்கு அவை இராக்காலம் அலர்தலே காரணமென்பது ஜீவசாஸ்திரிகளின்கொள்கை.]

179-188. *Compare:-*

'Take one more case ......... the white campion, which flowers by night only, ...... lays itself out to be visited by moths in the twilight. Why is this kind white? Because no other colour is seen so well in the dusk ; a red or pink blossom would then be almost invisible. Moreover, the white campion is heavily scented, as are almost all other night-flowering blossoms, like the jasmine, the tuberose, the stephanotis, and the gardenia. Observe the numerous points of similarity : all these are white ; all are sweet-scented; all are moth-fertilised. Why is this ? Because the scent helps to show the moth the way to the flower when there is hardly enough light for him to see the white petals. Thus every plant is adapted to its particular station in life, and its adaptation is the result of the Struggle for Existence, and Survival of the Fittest.'

-*Grant Allen's 'The Story Of The Plants'.*

227. [பந்தம்=சம்பந்தம்.]

236. *Cf.* 'எய்ப்பினில்வைப்பென்பது'-பழமொழி. *37.*

'எய்ப்பினில் வைப்பு வாழ்க.'

-திருவாசகம். திருவண்டப். *105.*

277. [நீர் பிரபஞ்சத்தை யருள்வடிவாகப்பார்க்கும் பார்வையும் முடிந்த நிலமன்று. ஆயினும் உமக்கு பக்தநிவிர்த்தி சமீபமாய் விட்டது என்பது இவ்வரியின் குறிப்புப்பொருள்.]

278. 'படிம்'-படுத்து உறங்கும்.

[முடிவில்வரும் கலித்துறை சுந்தரர் சமைத்த சுராங்கத்தைத் தந்துவோப

தேசமாக உருவகப்படுத்தி அனுபூதி யாலன்றி யுபதேசார்த்தம்வெளிப்படா தென்று வற்புறுத்துகிறது.]

சா்ம் அங்கம் : முதற் களம்.

5. 'இளாவி' மு-ப.

5-7. 'முன்னர்...மாண்டிடும்' என்க.

8. இறத்தல் ஒரு பெரியகாரியம ன்று.

16-17. அறிவிற் பெரியோனே ம ன்னவனுகின்றுன். ஆதலால் அவன து ஆணைவழியொழிகலேஇவர்க்குரிய கடனுகும்.

32. 'கொக் கொக்க கூம்பும் பருவ த்து மற்றதன், குத்தொக்க சீர்த்த வி டத்து'—குறள். 490.

36. 'எண்ணித்துணிக கருமம் து ணிந்தபின், எண்ணுவமென்ப திழுக் கு'—குறள். 467.

43-44. [நாராயணனை போர்க்களம் விட்டு அகற்ற நினைத்த குடிலன் அர ண்காப்புக்கு நாராயணனை யனுப்ப அ ரசன் உத்தரவு கொடுத்திருப்பதுபோ ல இங்ஙனம் பேசி யுடன்படுத்துகின் றுன்.]

50. 'நாற்றிசை தோறும்'- 'தோ றும்' என்றதன் பிரயோகத்தைக் கவ னிக்க.

52. 'பரிதி வைவேல்,'- சூரியன் போன்று பிரகாசிக்கும் கூரிய வேல்.

65-68. 'நிழலொடு கறுவிப் பாகெ றிந்தூன் பெய் நிணத்தொடு பழகு கூன்பிறைக்கோட்டு......யானை.' -நைடதம்.

69. [இவ்வரி உக்கிரகுமார பாண்டி யன் இந்திரன்முடிமேல் வளையெறிந் த திருவிளையாடலைக் குறிப்பிக்கின்ற து.] உக்கிரகுமாரபாண்டியன் அரசு புரிந்து வருங்காலத்தில் பாண்டிநாடு ஒருமுறை மழையில்லாமல் மிக்கதுய ரமடைந்தது. மழைபெய்விக்கும் பொ ருட்டு இந்திரனிடத்துப் பாண்டிய ன் செல்ல, இந்திரன் உபசாரம் செய் பவன்போன்று தாங்குதற்குரிய ஒரு பெரிய மாலையைப் பாண்டியன் கழு த்திலணிவித்தான். பின்னர் பாண்டி யனும் தான் வந்த காரியத்தைக்குறித் து ஒன்றுங்கூறிக்கொள்ளாது திரும் பினன். சிலகாட்கழிந்து வேட்டைக் குச்சென்ற பாண்டியன் காட்டில் வந் துமேய்ந்து கொண்டிருந்த இந்திரன துமேகங்களைப்பிடித்துச் சிறையிலிட் டனன். இதனுல் இந்திரன்யுத்தத்திற் குவர அவன் முடிமேல் வளையெறிந் துமுடிவிழும்படிபங்கஞ்செய்து முது கிட்டோடச் செய்தனன்.

70. மலைகள் சிறகுபெற்றிருந்த கா லத்தில் இந்திரன் அவற்றின் துன்பம் பொறுக்கமாட்டாமல் சிறகுகளை அரிந் துவிட்டான். சில மலைகள் (மைநாகபர் வதம்) இந்திரன் கைக்குத்தப்பி யோ டியொளித்தன.

75. ஒப்பு நோக்குக:-'செழுமணிக் கொடிகளென்னுங் கைகளை நீட்டி.... அழைப்பது போன்றதம்மா.'-கம்பர்.

83. 'தயை' ப-ப. 'தயா' மு-ப.

88. கொடுந்தொழில்-இருபொருள்.

89. 'வீசை' ப-ப. 'மீசை' மு-ப.

91. [பாண்டி = பாண்டி நாடாகிய மாதா.]

92-3. 'ஆர்த்தனள்' இதன் எழுவாய் 'முதுக்திமாதா.' இங்ஙனம் பிரித்துக் கூறுதல் நாடகரீதிக்கு ஏற்றதாகும்.

93. ஒப்புநோக்குக:-'சரயுவென்பது தாய்முலையன்னதிவ்-வுரவு நீர் நிலத் தோங்கு முயிர்க்கெலாம்'-கம்பர்.

95. 'தாம்பிர' ப-ப. 'தாமிர' மு-ப.

100. இந் நீரினுடைய (தாம்பிரவர் ணிமாதாவினுடைய) கற்பு. 'நமது (நாற்படையாளர்களது)கற்பு நிலைமை' யென்பர் பண்டிதர்-சடகோபராமாநு ஜாச்சாரியார்.

106. *Cf.* 'அகத்தியன்பயந்த செஞ்சொலாரணங்கு'-பாரதம்.

'விந்தியம்,' மு-ப. 'விந்தம்.'ப-ப.

132. 'முற்றாம்' ப-ப. 'முற்றிலும்' மு-ப.

135. [பெருமையில் = பெருமையில்லாத.]

142-148. வாக்கிய முடிபைக் கவனிக்க.

146. [இதனை—காட் டபிமானமுடையார் என்னும் உண்மையை ]

159. 'இறந்து கோட்டக்கது': ஒப்பு நோக்குக :- 'இறந்துகோட்டக்கதுடைத்து'-குறள். *780.*

165. இங்ஙனம் ப-ப. 'உதும்பரந்தரு' மு-ப.

167. ஒப்புநோக்குக:-தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார், தோன்றலிற் றோன்றாமை நன்று.'-குறள் *236.*

176. *Cf.* III. i. *90.*

192. 'நாமே.' ப-ப. 'நாமாய்' மு-ப [நாமாய் = நாமாக = எம்மிச்சைப்படி.]

குறளடி வஞ்சிப்பா 4-5. இங்ஙனம் ப-ப. 'நொந்தாழ்துயர் தந்தே நமை நிந்தா செய நின்றாரிவர்.' மு-ப.

9. இங்ஙனம் ப-ப. 'சிரசுடைப்போம்' மு-ப.

[கலித்தாழிசை. க. சின்னம் எமன் அதிசயிக்கும் எனக்கருதிச் செருக்கொழிமின். அங்ஙனமன்றி, திரும்புவது சொற்பபுத்தி, எங்கள் வஞ்சியரசன் வெல்வான், எனவெண்ணிச் செருக்குவீராயின்; என்பது அடிமடக்கின்பொருள்.

கலித்தாழிசை. உ. விஜய லக்ஷ்மி வீரர்புயமே தனது குடியிருப்பாக உடையாள். ஆதலால் ஓடுமின். விஷம் போலஉயிருண்ணும் இவ்வீரர் வாளாயுதத்திற்கெதிரே ஓடாதுநிற்பீராயின்; என்பது பொருள்.

கலித்தாழிசை. ௩. தம்மனையைக் காக்க வுருவிய வாளுக்குப்பின் இடும்படியான உறையில்லை. அதாவது மத்தியில் சமாதானப்படுகையில்லை. இதனைக்கருதாது போருக்கு வந்த பின்னர் திரும்புதல் முறையன்றென வெண்ணி நிற்பீராயின்; என்பது கருத்து.]

[இக்களத்துள் நாற்படைவருணனையும் நாட்டபிமான விளக்கமும் வீரரசமும் வ[illegible]மை காண்க ]

## ௪-ம் அங்கம் : ௨-ம் களம்.

20. [சடையன் = குடிலனுடையசேவகன் பேர்.]

29. *Cf.* I. iv. *107.*

30. ஒன்றுமொன்னுடன்—எனக்கும் அவர்களுக்கும் பொருத்தமே இல்லை.

40. மேல் 26—ம் வரி நோக்குக.

97. [ஆம்பொழுது-வேண்டும்பொழுது.]

114. 'குறைவே' என்பதனை யடுத்துள்ளது வியப்புக் குறியீடாயிருப்பின் மிகப்பொருந்தும்.

[இக்களத்தில் தருமயுத்தத்தின் நீதியும், படைக்குள் குழப்பம் பிறக்க அரசனுக்கபாயம்நேர்ந்தவழி நாராயணன் காக்கச் சென்ற கதையும் குறிப்பிக்கப்படுகின்றன.]

## ௪-ம் அங்கம் : ௩-ம் களம்

45. இழந்தால் = உன்னையிழந்தால்.

47. *Cf.* 'இருதலைக்கொள்ளியினுள்ளெறும்பொத்து'-திருவாசகம். நீத்தல்விண்ணப்பம். *9.*

49-50. *Cf.* 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர் நீப்பர்மானம் வரின்'-குறள். *969.*

51-52 *Cf.* 'மருந்தோ மற்றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை பீடழிய வந்தவிடத்து' குறள். *968.*

60. தன்மையில் – தன்மையில்லாத

80. 'மும்மை' யென்றது மூவகையாற்றலை : அவை: அறிவு(மந்திரசக்தி)

ஆண்மை (உத்ஸாகசக்தி), பெருமை பிரபுசக்தி, யென்பன. *Cf.* குறள். *466*—உரை.

86-8. 'வெள்ளத் தனைய மலர் நீட்டம் மாந்தர்தம் உள்ளத் தனைய துயர்வு' -குறள். *595*.

92. [சான்றோர்சொல் = திருக்குறள்]

103-123. [குடிலன் தன துசூதினை அரசன் அறிந்துளானோ என ஐயுற்றுக்கலங்கியகலக்கம் காண்க.]

134-5. தகைமையையும் புகழையும் உகுத்துவிட்ட (எனது) கெடுமதியென்க.

138. [படைமேல்-படை யெழுவாய்; மேல் = உடல்மேல்.]

191. *Cf.* 'தூண்டிற்பொன் மீன் விழுங்கியற்று.'-குறள். *931*.

219. *Cf.* *The Secret Way. ll. 475-6.*

237-240. *Cf.* *The Secret Way. ll. 477-480.*

248. 'மண்வலி'-மதில்திறம். (மேல் (வரி *221*.)

249. *Cf.* I. iii. *39*.

256. இருபொருள்.

264-65. *Cf.* சிதைவிடத்தொல்கார் உரவோர்புதையம்பின், பட்டுப்பாடூன்றுங் களிறு.' -குறள். *597*.

270-1. *Cf.* 'காணகத் தில்லா ரியக்கம் மரப்பாவை, நாணா லுயிர்மருட்டியற்று.' -குறள். *1020*.

272-3. *Cf.* 'ஒட்டார்பின்சென்றொருவன்வாழ்தலினந்நிலையே, கெட்டானெனப்படுதல் நன்று.' -குறள். *967*.

282. இருமுறை. (i) போர்க்களத்திலும், (ii) தற்கொலைபுரிய எத்தனித்தபோதும். தப்பிலி-இருபொருள்.

291. [பிரியப்படுகை—காமித்தல் காமவழிசேரிட்டு படுகையாதலால்.]

297. மிண்டலைவறிதே = வீணாகப் பேசாதே. மிண்டுதல்—பேசுதல்(மலையாளம்). மதத்தால் அடர்த்தல் என்பர் பண்டிதர் - சடகோபராமாநுஜாச்சாரியார்.

302. 'இதுவே'- நாராயணன்மீது குற்றஞ் சுமத்தி அவனைக் கழுவேற்றுதல்.

[இக்களத்தில் ஜீவகன் சோகமும், குடிலனுடைய தந்திரநடபடியும், பலதேவனுடைய கீழ்ப்படியாத் தூர்க்குணமும், ஒருவாறு விளங்கலாம்.]

ச-ம் அங்கம் : ச-ம் களம்.

1-2. 'சேரசோழபாண்டியர் என்றாற்போலப் படைப்புக்காலத்தொடங்கி மேம்பட்டுவருதல்'- என்பர் பரிமேலழகர்.' -குறள். *955*. (உரை)

5. [தையலர்—மனோன்மணியின் செவிலி முதலிய அந்தப்புரத்தார்.]

9. 'வேரறக்களைகுதும்' என்றது நாராயணனை.

16. ஆதியர்-சிறந்தவர்கள் : பிரதானமாயுள்ளவர்கள்.

24-25 ஒரு பழமொழி.

31-32. ஒரு பழமொழி.

42. கொடுக்குங்கௌரவத்தாற்பன்மை பிரயோகிக்கப்பட்டது. அன்றிப் பலதேவனை யுளப்படுத்துக் குடிலன் கூறினனென்றலும் ஒன்று.

53. ஒருவரோயன்றிப்பலர்கட்டளையிடத்தொடங்கிவிடுவாராயின் என்க.

71. 'கைக்குட்கனி.' *Cf.* III. iv. *237*.

78. இவ்விடத்திருந்து நாம் எழுந்து போகுமுன்னே.

89. 'குடிலன்' என்பது வஞ்சகன் என்றும் பொருள்படுதல் அறியத்தக்கது.

106. [இது பலதேவனுடைய சோரகாதலியின் சகோதரன் பலதேவனை

வேலால் குத்தும்போது கூறியமொழி.]

112. [கூலி—கைக்கூலி—Bribe.]

149. [பதினாயிரவர் நாராயணனோடு கழுவேறத் துணிந்துளாரென்பது கருத்து.]

159. [வழி—சிறைச்சாலைக்குப்போகும் பாதை.]

160. [கொக்கொக்-சடையனுடைய விக்கலால் எழும் ஓசை.]

183. *Cf.* 'கெட்டார்க்குநட்டாரில் லென்பதோ.' -குறள். *1293.*

'கெட்டார்க்கு நட்டாரோவில்.'

-பழமொழி. *59.*

198-9. மனோன்மணியின் நிலைமை நெருப்பு நடுவிலே கட்டியிறக்கிய மயிர்உறியைப்போலும்.

209. 'கோட்டைக்குள்ளே படை வெட்டு.' என்பது நாஞ்சினாட்டில் வழங்கும் பழமொழி.

[இக்களத்தில்குடிலன் நாராயணன் மேல் பொய்க்குற்றம் சாட்டி நிலை நிறுத்திய தந்திரமும் ராஜபக்தியின் இயல்பும் வெளியாகின்றன.]

ச-ம் அங்கம் : ரு-ம் களம்,

1. ஒப்புநோக்குக:-

'பலவானாகிய பகைவனால் தாக்கப் படும்பொழுது துர்ப்பலனாயிருக்கும் ஓரரசன் தனது புத்திரர்களோடு (அப் பல்வானுக்கு)தாழ்ந்து வணக்கஞ்செய்து நதிவேகத்தில் எதிர்ப்பட்ட நாணலைப்போல்ஒழுகுதல்வேண்டும்'-கௌடில்யர். இதனை 'வைதஸீவிருத்தி' யென்பர் (வேதஸம் = நாணல்).

3. [மூளை—மூங்கில்.]

,, 'புல்லினம்' *Cf.* 'புறக்காழனவே புல்லெனமொழிப, அகக்காழனவே மரமென மொழிய'-தொல் பொருள் மரபியல்-*85.*

14. [நீக்குருவி-Ostrich.]

22. 'அகப்படின்'-குற்றஞ்செய்யும் போதே தாம் அகப்பட்டுக்கொள்வாராயின்.

26. துரத்திடும் = விடாது தொடர்ந்து வெருட்டுகின்ற.

28-9. ஒப்புநோக்குக:-

'தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு, மன்னுயிர் முதல்வன்'

-மணிமேகலை. XXV. *116-7.*

28. 'தன்னுயிர்'-ஒருமைப் பன்மை மயக்கம்.

30. வழிஞர்-அபூர்வ பதம்.

44. அரசுபுரிதலைக் கப்பல்செலுத்தலோடு உவமித்தல் ஆங்கிலவழக்கு. திமில் என்றது அரசாட்சியை.

45. சுழல்காற்றோடு-சுழல்காற்றினால். சுழல்காற்று-பகைமை. சுழி-ஆபத்து.

46. பாய்மரம்-மந்திரியாகிய குடிலன்.

49. [கைவழி-Channel.]

51. துவாதசாந்தம்- பூருவமத்திக்கு மேல் பன்னிரண்டு விரற்கிடையுள்ள இடம். பூலோக வடிவாயுள்ள விராட் புருஷனுக்கு துவாதசாந்த ஸ்தானமாயிருப்பதனால் மதுரை துவாதசாந்த ஸ்தலம் எனப்பெயர் பெற்றது.

52. நிவாதம்.(i) உறைவிடம் (நிவாஸம்) (ii) காற்றின்மை (நி + வாதம்)

53. 'என்குலம்'-பரீக்ஷைப்பகுதியிலுள்ள திருத்தம்; 'எங்குலம்.' மு-ப.

54. நயப்பிற்கு என்செய உமது அன்பிற்கு நான் என்ன கைம்மாறு செய்வது?

55. [பொதுவாகக் கூறிய முனிவர் மொழிக்கு, நாராயணன் கழுவேறவுடன்பட்டதைச் சுட்டுவதாக ஜீவகன் பொருட் படுத்திக்கொள்ளுகிறான். குடிலனைச் சுட்டிக்கூறிய பாய்மரமும் நாராயணனாகவே மயங்குகின்றான்.]

60. [வேற்றுமையுருவாய் = மாறுபாடு

செய்தலே இலக்கணமாகவுடைய.]

60-61. '*Cf.* காலம் என்பது கறங்கு போற்சுழன்று,மேலது கீழாய்க்கீழது மேலாய், மாற்றிடுந்தோற்றம்'
-I. i. *94-96*.

62-63. *Cf.* 'To take Time by the forelock.'

67. 'தந்தமக்கு' செய்யுளின்பம்நோக்கி இவ்வாறு நின்றது.

70. [இயல்-State Policy].

72-3. அவாது அரசாட்சி காலகதியினால் மறக்கப்பட்டொழியாது என்றும் ஞாபகத்தில் நிலைபெற்ற விளங்கித்தோன்றுமோ? என்பது கருத்து. ஒப்புநோக்குக:-

'காலகதி நினைக்கரவாக் காரணத்தின் அறிகுறியே'-பாயிரம்.

83. அற்றது—தலையற்றது. 'உயிரற்றது' என்பர் பண்டிதர்-சடகோபராமாநுஜாச்சாரியார்.

93-96. 'நீ கையாடிவரும் பரணதந்த்ர நயம் (State Policy) தீதாய் முடிதற்கு யாதொரு சந்தேகமும் இல்லையென்று இன்று நிகழ்ந்த சம்பவங்களால் உன்மனத்தில் தெளிவாகக்கண்டு வைத்திருக்கின்றாயாயின்' என்க.

'ஜீவகனே! (உன்முயற்சி) தீமையாக விளைதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. சங்கிலித் தொடரின் தன்மைபோல (பந்தப்படுத்தும்படி) இன்று (உனக்கு) நேர்ந்த ஆபத்துக்களால் நீ உனது மனத்தில் மயக்கமில்லாமல் ஆலோசித்தாயானால்.' என்பர் பண்டிதர்-சடகோபராமாநுஜாச்சாரியார்.

96. இவ்வாறுபரீக்ஷைப் பகுதியிலுள்ளது ; முதற்பதிப்பில் 'மனதினின் மயக்கமற் றுணர்ந்துளையாயின்' என்று காணப்படுகின்றது.

107. 'தாதான்மியம்'-ஒன்றுமற்றொன்றின் தன்மையாதல். இதில் நின்று சேர்க்கை வாசனையென்ற பொருள் பெறப்படுகிறது. இப்பொருளில்தான் இங்கே பிரயோகம். குடிலனைச்சேர்ந்ததனால் ஏற்பட்ட குணவேற்றுமை இங்கே கருதப்படுகின்றது.

108. ஒப்பு நோக்குக:- 'முதலையின் பிடிபோல் முடிக்கத் துணிந்தனர்.'
-I. ii. *38*.

109-112. மனோன்மணியைக் காப்பாற்றுதலே புகழ்பெறுதலைக் காட்டினும்சிறந்தது எனக் குறிப்பித்தவாறு.

113. இந்தத் தாய்நண்டின் ஸ்வபாவம் தான் உலகிலுள்ள எல்லா வுயிர்களிடத்தும் இயல்பாய்க் காணப்படுமென்று எண்ணினேன் என்பது கருத்து. 'எங்கும்பிராணிகளின் தன்மை உலக இயல்போடுஒற்றுமையுடையதென்று எண்ணினேன்' என்பர் பண்டிதர்-சடகோபராமாநுஜாச்சாரியார்.

125-6. *Cf.* 'நெடும்புனலுள் வெல்லுமுதலை யடும்புனலின், நீங்கின் அதனைப் பிற'-குறள். *495*.

129-130. *Cf.* 'வினைதெரிந்தாற்றும் வேந்தன் முனமுனம், ஆயற்பாற்ற தழிவு மஃதொழி, வாயிலுமாமென வையகம் புகலும்'—I. i. *97-99*.

135-138. இருபொருள் கருதுவது போல் தோன்றுகிறது: புரம் (i) நெல்வேலி (ii) சரீரம். புலம் (i) களம் (ii) ஐம்புலம். மாபதி = (i) மதுரை (ii) பரம்பொருள்.

138. [செயுமே—இதற்கு எழுவாய் வழி.]

150. ஒப்பு நோக்குக:-I. i. *133-4*.

164. மேல்வரி-47 நோக்குக.

167. [சிறுகொடி = மனோன்மணி.]

172-3. மலைநாட்டில் வழங்கும் ஒரு பழமொழி.

174. 'கைக்கெட்டினது வாய்க்கெட்டாமற்போதல்'-ஒரு பழமொழி.

174-5. *Cf*. 'There is many a slip between the cup and the lip.'

184. விளக்கே—குலதீபமே (விளி) -என்றது மனோன்மணியை.

184-5. உன்னைவிட்டுப் பிரிந்திருக்க எவ்வாறு மனம் வரும்? அன்றிப் போர் நிகழும்போது உன்னை இங்கேயே வைத்திருந்து நீ கேடுறும்படி செய்வதற்கு எவ்வாறு மனம் வரும்?

அது என்றதுகேட்டினை;'போரை' என்பர் பண்டிதர் - சடகோபராமானுஜாச்சாரியார்.

189.'என்றன்' ப-ப. 'எந்தன்' மு-ப.

190-1. *Cf*.

" The mind, that broods o'er guilty woes,
Is like the Scorpion girt by fire:
In circle narrowing as it glows,
The flames around their captive close,
Till inly search'd by thousand throes,
And maddening in her ire,
One sad and sole relief she knows,
The sting she nourish'd for her foes,
Whose venom never yet was vain,
Gives but one pang and cures all pain,
And darts into her desperate brain:
So do the dark in soul expire,
Or live like Scorpion girt by fire."—*Byron*.

192-3. 'அதுபோல்...எனில்'-கரர்ந்து மிகக்கீழ்ப்பட்ட அற்ப ஜந்து தேள். அதற்குள்ள சுதந்தரங்கூட நரேந்திரனாகிய எனக்கு இல்லையாயின் என்க. சுதந்தரம் என்றது 'இகழ்ச்சி முழுதும் பொன்றிடப்பொருது பின் பொன்றும்(வரி103-5)சுதந்தரம்; அன்றித் தற்கொலைபுரிந்துகொள்ளுதலுமாம் (IV. iii. *38-40*.)

195. *Cf*. 'The blood curdles'

199. தங்குதல்—உயிர்தரித்தல்.

200. இறக்கினும்- நீ இறந்து படினும்.

202.'மற்றிதும்.' மு-ப; 'இஃதும்.' ப-ப.

204. [களவழி=கள்ளவழி.]

208. உண்மை-சுருங்கையின் உண்மை.

215. 'மனதிடை' மு-ப; 'மனத்திடை' ப-ப திருத்தம்.

217. 'தவறே'ப-ப. 'சரியல' மு-ப.

219. 'சேர்தானோ' ப-ப; 'சேராயாரே' மு-ப.

223. ஒறுத்து அவர் எனப் பிரிக்க.

230-35. [இக்கேள்விகளால் குடிலன் சுருங்கையிருக்க வேண்டுமிடம் இன்னதென்று ஊகித்து நிச்சயித்துக் கொண்டு தான் அதனை முன்னமே கண்டுணர்ந்தவன் போலப் பாவனை காட்டுகிறான்.]

231. *Cf*. 'ஓர்- அறையுடனங்கணந் திறவுகோலொடு, தமக்கென வேண்டினர் அளித்தனமுடனே'-I.iii.*205-6*.

235. முறி (மலையாளம்) - அறை. 'மூலை' யென்பர் பண்டிதர்- சடகோபராமானுஜாச்சாரியார்.

236.அறிவு-செய்தி (information) இப்பொருளில் மலையாளவழக்கு.

245. [பண்டே—கோட்டை காண அழைத்த காலில்.]

255. கலியாணமாகுமுன்.

258. 'உணரா' மு-ப, 'உணராது' ப-ப.

271. கருணாவுடையர் சொல்லும்

தீமொழி பலித்துவிடும். 'கருநாவுடையர் விஷநாக்குடையவர்; என்றது நமக்கு எப்பொழுதும் அபாயமே கூறுபவர்' என்பர் பண்டிதர்-சடகோபராமாநுஜாச்சாரியார்.

280. *Cf*. IV. iv. *157*.

285. இரவும் பகலும் போலக் கவலையும் வீரமும் ஏககாலத்தில் சேர்ந்து நில்லா.

287. 'நுவல்தரு.' ப-ப. 'நுவலிய.' மு-ப.

288. கடிமணமுடியுமாயின் சுருங்கை மிக வுபயோகமாகவிருக்கும்.

293. [இதுபோல் - இச்சேனது தூர்க்குணம் போல்.]

303. [பாண்டம்-மட்கலம்.கடையிற் கொண்ட பொருள்களைக் கொடுத்து மாறிக்கொள்ளலாம் ; அப்படியன்றே விவாகத்தில் கொள்ளல். இது ஓர் கிராமியப் பழமொழி.]

312. 'உந்தன்.' மு-ப. 'உன்றன்.' ப-ப.

337. [அதுவும்- தன்னயம் கருதல் மாத்திரமன்றி அங்ஙனம் கருதுவதாகப் பிறர்க்குத் தோற்றத்தக்கதும்.]

341. 'தனையன்.' மு-ப. 'தனையை' ப-ப.

343. அரசன் என்ற நிலைமைக்கும் இம்மடிபு தக்கதே.

344-5. *Cf*. 'குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள், மிகைநாடி மிக்க கொளல்'-குறள். *504*.

354. [மீட்குதும்:மஞ்ஞென்மணியை.]

359. நாராயணன்சிறையில் அடைபட்டிருப்பதனால் எனது சூழ்ச்சியினின்றும் அரசனை விடுவிக்க இம்முறை தவறிவிட்டான்.

363. விடுத்து-வாய்விட்டு.

364. *Cf*. Silence implies consent.

364 [குறியே:இதனை 366-ல் உள்ள 'ஆய்விடும்' என்பதோடு சேர்க்க.]

369. [எண்ணினன் - முனிவன் எழுவாய்.]

373. உரைத்தவாறு-நான் அரசனுக்குக் கூறியபடி (234-237.)

380. [துணிந்தன—எழுவாய் படைஞராகிய நாய்கள்.]

382. எளியன்-நாரணன்.

383. கெடுபயல்-பலதேவன்.

385. கொடியன்-நாரணன்.

[இக்களத்தில் அரசர் கடமையும் ஆண்மையும் ஜீவகனது ஏழைமையும் குடிலனுடைய சமயோசித சாமர்த்தியமும் விளங்கலாம். அங்கமுடிவில் வரும் கலித்துறை தேகாபிமானபலத்தையும் 'ஞானமில் வைராக்கியம் நன்றன்று' என்னும் தத்துவ நூலின் கொள்கையையும் அவ்வங்கத்து நடந்த கதையால் விளக்குகின்றது.]

## ஐந்தாம் அங்கம் : முதற் களம்.

2-3. 'இருசாமின்றி'- இருவகையுபாயமின்றி யென்பது கருத்து. (*Cf*. "He has two strings to his bow"—'Two means of accomplishing his object : if one fails, he can try the other. The allusion is to the custom of the British bowmen carrying a reserve string in case of accident.'
—*Brewer's Dictionary of Phrase and Fable.*

'வில்லம்பு சொல்லம்பு என்ற இரண்டையும்' என்பர் பண்டிதர்-சடகோபராமாநுஜாச்சாரியார்.

7. [இன்றேன்—இசைகுவது இன்றேல்.]

10. தூண்டிடு சினத்தன்-எளிதிற் பொங்கியெழுங்கோபத்தையுடையன்.

15 [நம்மகன் = பலதேவன்.]

21. இங்ஙனம் ப-ப. 'முன்னர் கண்டறியா இன்னனசுருங்கையில்' மு-ப

25. இது சாத்தியம், இது அசாத்தியம் என்பதை.

27. யோகம் = அதிர்ஷ்டம். 'யோகாப்பியாசம்' என்பர் பண்டிதர் சடகோபராமாநுஜாச்சாரியார்.

28-35. [ஜோசிய நிந்தனை.]

33-4. 'அதில் வருவாதமும் யுக்தியுமூகமும்' என்பது ப-ப-விற்காணப்படவில்லை; 'அமைக்குங்குணமும் பக்தியும் பகைமையும்' என்றிருக்கிறது.

குறள்வெண்செந்துறை. 2.

**அவத்தை**- நிலை வேறுபாடுகள். அவை ஜாக்கிரம், சொப்பனம், சுஷுப்தி முதலியன.

,, 3. ஒப்புநோக்குக:-

'துடித்துமனம் புலன்வழியே தூறுசெய்து மாறுபடும் துணையிலேனை, அடித்தடித்துப் பாலூட்டியானந்தமெனக் களித்தான் அச்சோ அச்சோ.' -பாடுதுறை பக். *149*.

40. 'மனிதனன்றிது' மு ப. 'மனிதனலனிவன்' ப-ப.

குறள்வெண்செந்துறை. 5. 'யத்தினம்' மு-ப; 'யத்தனம்' ப-ப.

பெத்தமனக் கற்பிதம் etc. - பல அவஸ்தைகளாற் பந்திக்கப்பட்டுள்ள மனத்தினது முயற்சியாலன்றிப் பிறிதுவகையால் நினைவு பிறத்தலில்லையென்று பிதற்றும் பேதையர் என்க. யத்தனமற்றிருக்க-யத்தனமொன்றும் இல்லாதிருக்கையில்.

[குறள்வெண் செந்துறை 6-ல் கடைசியடியொழிந்தமற்றவை, ஞானசமாதியில் விளங்கும் பிரமானுபூதிக்கும் புருஷோத்தமன் கனாக்கண்ட மனோன்மணியின் காதல் வடிவிற்கும் பொருந்துவது காண்க.]

49. 'கண்டிலன்' மு ப. 'கண்டிலேன்.' ப-ப.

50. புருஷோத்தமன் ஊர் விடுத்ததும் போர் தொடுத்ததும் தன்னைவருத்திக்கொண்டிருந்த கனவையகற்றும்பொருட்டே. இதனால் பாண்டிநாட்டைக் கைக்கொள்வது அவன் கருத்தன்று என்பது வெளியாயிற்று. இது குடிலனுக்கு அநுகூலம்.

52. எண்ணிய-நான் எண்ணிய.

69. [இப்புவி = பாண்டிநாடு.]

79. மு-ப-வில் 'வெல்லிடம் வெல்லாவிடமும் யாவும்' என்றிருக்கிறது; ப-ப-வில் மாற்றப்பட்டது.

84. மயக்கா-மயக்காத.

87. [அறமேயாயினும்-எழுவாய் காய்தல்.]

88. [பிழைக்காய்-பிழைக்காக.]

104. 'நொந்தநூற் காதலர்' மு-ப ப ப-வில் மாற்றப்பட்டது.

108. செயிருற = வலிமையாக.

115. [குறியாய்-குறியாக.]

,, குறியாக்கொண்டிலன் என்க. குறி-லக்ஷியம்.

121. ஆவ-இரக்கச்சொல்

133-35. [பாண்டிநாடு பரம்பரையாக அரசர் ஆண்டுவந்த பூமியாதலினால், நாட்டார் திருப்திக்காக எனக்கு அரசன் என்ற ஒரு வெறும்பட்டம் மாத்திரம் நீ தருவையாயின்.]

133 'இங்ஙனம்' ப ப. 'ஈண்டுளதைவை' மு-ப.

142-3. கதை பிரசித்தம்.

162. 'பிழைப்பில்' ப-ப. 'பிசகில்' மு-ப.

164. [உறுதி = பாண்டிக்கு அரசனாக்குவேன் என்ற உறுதிமொழி]

165. 'மூடிநின்வாய்' மு-ப; 'மூடிநின்பாழ்வாய்' ப-ப.

169. 'பிழைப்பினும்' ப ப; 'பிசகினும்' மு ப.

[இக்களத்தில் புருஷோத்தமனுடைய காமநிலைமையும் குடிலன் அகப்பட்

டுக்கொண்ட கதையும் கூறப்படுகின்றன.]

## ரு-ம் அங்கம் : உ-ம் களம்.

9.[ இது ஒரு கிராமியப்பழமொழி. அப்படியே வரி 33.]

15. [இவர்களுக்குள் நடந்த சம்பாஷணைத்தொடர்ச்சி.]

30. இது ஒரு பழமொழி.

43-31. [மனோன்மணிக்கும் பலதேவனுக்கும் மணவினை நடத்துவிக்க ஜீவகன் துணிந்துகொண்டு அச்செய்தியை மனோன்மணிக்கு அறிவிக்க அதற்கு அவள் கூறிய மறுமொழிகளை யிங்ஙனம் க-ம் தோழி உ-ம் தோழிக்குத் தெரிவிக்கின்றாள்.]

71. [அன்று—கனுக் கண்டு காமங்கொண்ட அன்று.]

90. [இது—வாணிக்கும் நடேசனுக்கும் மனோன்மணி வேண்டிக்கொண்ட மணவினை.]

101. [பொருக்கீர்.—எழுவாய் நீயும் பலதேவனும்.]

125. செக்தீயைக்து—பஞ்சாக்கினி: அவை நான்குதிசையிலும் நான்குதீக் குண்டமும் மேலே சூரியனும்.

150. ‘வெள்ளிலாக மெள்ள விழுங்கி’ யென்க.

164-5. ‘உடம்பே யுள்ளது; உயிரொன்பதில்லை: விழியேயுள்ளது; அறிவென்பதில்லை : ஜடப்பொருள்களே யுள்ளன ; கடவுளென்பதில்லை : இவை மூன்றும் ஒருநாளும் உண்மையாகா. இவைஉண்மையாக முடியுமானல்’ என்பது பொருள். தெய்வமென்பதொன்று உலகில் இல்லாமற்போய்விடுமானல் என்பது முடிந்த கருத்து.

165. ‘கடபடம்’ *Cf.* தாயுமானவர். (நாவலர் பதிப்பு) பக்கம் *234*.

[இக்களத்தில் மனோன்மணியின்பரிபக்குவ நிலைமையும் உத்தமதபசின் இலக்கணமும் ஒருவாறு கூறப்பட்டன.]

## ரு-ம் அங்கம் : ந-ம் களம்.

19. ‘சமதரு மன்னை’ மு-ப; ‘பொய்யறுமன்னை’ பரீக்ஷைப்பகுதி.

22. காட்டல்—பாவனை செய்தல்.

32. ‘வெகுதிறசாலி’ மு-ப; ‘வெகுதிறமுடையான்’ ப-ப.

38. [பிழைத்தல்—உய்தல்— குற்றப்படுதல்.]

‘இம்முறை தப்பிக்கொண்டீர்’ என்று கூற ஒருமுறையும் பிழைசெய்யவில்லை என்று மறுமொழி சொல்லுகின்றான்.

40.[பழமொழி.]

52. [பாடு—உழைப்பு. நாராயணன் ‘பாடு’ என்பதற்கு கேடு எனப்பொருட்படுத்தி விடை கூறுகிறான்.]

83. ‘விதைபடும் ஆல்’- வித்தினுள்ளே அடங்கியிருக்கும் ஆலமரம்; பாண்டியவம்ச விருக்ஷத்திற்கு வித்து.

88. ‘ஒருகுலத்தொருவன்’ என்றது தன்னை நோக்கி.

93. [பெரியள்-வயதிற்பெரியள்—பக்குவவதி.]

100. கொற்றவை=கொற்ற அவை.

127. ‘தமதருமுயிர்போற் றுநினைந்திதுவரை’ மு ப; ப-ப வில் மாற்றப்பட்டது.

134. ‘இசைவேனுமக்கும்’- ‘உமக்கும் இசைவு ஏன்-உங்கள் சம்மதமும் யாது?’ என்பர் பண்டிதர்-சடகோபராமாநுஜாச்சாரியார்.

150. ‘அரசர் குலமல’ மு-ப. ப-ப. வில் மாற்றப்பட்டது.

155. செய-செய்க. இப்படைஞன் மன்னனது திருவுளக்கருத்தையொட்டிப்பாவனை செய்கிறான் (மேல் வரி-21-2 நோக்குக.)

167. தினமணி-சூரியன்.

170. [நம்மணி – மனோன்மணி. பிறந்தநாள்—ஜன்மநக்ஷத்திரம்.]

கொச்சகக்கலிப்பா.

1. இதில் கஜேந்திரமோக்ஷ வரலாறு குறிப்பிக்கப்படுகிறது.

2. இதில் திரௌபதியின் வஸ்திராபஹரணவரலாறுகுறிப்பிக்கப்படுகிறது.

3. இதில் மார்க்கண்டேய சரித்திரம் குறிப்பிக்கப்படுகிறது.

இம்மூன்றிலும் பேர், ஊர், அடையும்நெறி என்ற மூன்றும் அறிதல் கூடாமை கூறப்பட்டது.

[கொச்சகக்கலிப்பா மூன்றும் பொதுவான பிரார்த்தனை யாகவும் மனோன்மணியின் கனாக்காட்சிக்கும் காமநிலைக்கும்ஏற்றதாகவும் நிற்பதுகாண்க.]

183-8. இவ்வரிகள் மனோன்மணியின் நிலையை வெளிப்படுத்துவன.

183. இவ்வரியை 'தலையிடப்பட்ட குடிலனது இந்தத் தோற்றத்தைப்பார்த்து 'மனம்பொறேன் மனம்பொறேன்' என்று கூறுவதாகக் கொள்வர் சடகோபராமாநுஜாச்சாரியார்.

185. அமையா—ஒன்றினும்அமைதி பெறாது தத்தளிக்கின்ற.

193. [மூன்றாம் அங்கம், ச-ம் களத்துள் நடந்த சம்பாஷணைப்படி 'கருணாவிலாசம் கண்டேன்' என்பது பொருள்.]

202. 'உன் சொல்'-'அநீதி' (199) 'சூது' (200) என்பன. 'உழிஞை யங்குளதெனில் பழுதின்றெச்சியும்உளது' (IV.iii.242-3)என்று நீ சொல்லியனுப்பின வார்த்தை அச்சந்தருவதாயிருந்தது என்பர் பண்டிதர்- சடகோபராமாநுஜாச்சாரியார்.

218. விருப்பமானால் நாளைக்கும் போரில் நமது வலிமையைப் பார்ப்போம்.

223. *Cf.* 'All is well that ends well.'

225. [தாராய்-தாராக ; மணமாலையாகத் தன் கையிரண்டும்சூட்டி.]

227. 'இருமனதேனினி' முப்பப வில் மாற்றப்பட்டது.

233. [திடுக்கிட்டு விழித்ததைப்பிரிவிற்கஞ்சி நடுங்கினதாகக் கருதி ஜீவகன் கூறியமொழி.]

வாழ்த்து மருட்பா: 'பள்ளத்துப் பாயும் நன்னீரனையவர்'-கம்பர்.

[இக்களத்தில் மனோன்மணி தெய்வவருளால் புருடோத்தமனைச் சந்தித்து மாலைசூடினதும் அஃதுடன் இந்நாடகத்துள் எடுத்துக்கொண்ட கதை யுபகதை முதலியன முடிவு பெறுவதும் காண்க.]

[இவ்வங்க முடிவில் வரும் கலித்துறை தற்சுதந்தரம் விடுத்து அருள்வழி நின்றபோதம் அதீதப்படு முறையை விளக்குகின்றது. கலித்துறை ஐந்தும் அந்தாதித் தொடர்.]

அநுபந்தம் முற்றிற்று.

குருசுந்தர சரணாலயம்.

# APPENDIX II.

## GLOSSARY.

## அநுபந்தம் II.

## அரும்பத விளக்கம்.

[ பெ-பெயர்ச்சொல் ; வி-வினைச்சொல்.]

### அ

அகண்ட—கூறுபடுத்தமுடியாத, பூரணமான.
அகல்-நீங்கு, விரி.
அகம்-மனம்.
அகழ்- கோட்டைமதிலைச் சுற்றியுள்ள நீர்க்கிடங்கு.
அகிலம்-எல்லாம்.
அகோராத்திரம்- பகலிரவு. ( அஹஸ்-பகல், ராத்ரம்-இரவு).
அக்கரம்—அக்ஷரம், எழுத்து.
அக்கினி—தீ, நெருப்பு.
அங்கணம்-முற்றம்.
அங்கம்-உறுப்பு, அவயவம்.
அங்காடி— கடைவீதி.
அங்காந்து-வாய்திறந்து.
அங்கி-தீ, நெருப்பு.
அங்கை—அகங்கை, உள்ளங்கை.
அசலம்-மலை.
அசாத்தியம்-முடியாமற்போவது, கூடாதது.
அசை-உடையுடு, ஆட்டு, வீசு, கட்டு.
அஞர்-வருத்தம், துன்பம்.
அஞ்சனம்-கண்ணுக்கிடும் மை.
அஞ்சு—1. பயப்படு.
2. வணங்கு(சி-ச-49.)
அடக்கலை-அடக்காதே.
அடங்கலும்-முற்றும், முழுவதும்.
அடம்பு-நெய்தல்நிலத்திற்காணப்படுவதொருகொடி.
அடர்த்து—நெரித்து.
அடல்—வலி, வலிமை, வீரம்.
அடவி—காடு.
அடிகள்—1. முனிவர். 2. பாதங்கள்.
அடியிறை—பாதகாணிக்கை.
அடியேம்—நாங்கள்அடிமை.
அடு—1. கொல், அடக்கு.
2. சமையல்செய், காய்ச்சு.
3. பொருந்து, நெருங்கு.
(அடுத்தது—பொருத்தமானது)
அடையலர்—பகைவர்.
அடையவும்—முழுவதும்.
அணங்கு-1. தேவமாதர். 2. பெண். 3. வருத்தம்.
அணி—1. தரித்துக்கொள் (வி)
2. ஆபரணம்.
3. சேனைநிரை.
அணிதாய் - அருகாய், பக்கமாய்.
அணுகு -நெருங்கு. (அணுகலை-நெருங்காதே)
அணை—1. சேர், பொருந்து.
2. தலையணை, மெத்தை.
அண்டம்—உலகம்; உலகத்திற்குக்காரணமாகப் பௌராணிகர்கூறும் முட்டை.
அண்டயோனி—சூரியன்.
அண்மை -பக்கம், சமீபம்.
அதிபர்—தலைவர், நாயகர்.
அதிர்—சப்தமிடுகிற, ஒலிசெய்கிற.
அத்தன்—தந்தை, தகப்பன்.
அநுராகம் - அன்பு, பக்தி.
அந்தணர்-பிராமணர்.
அந்தம்—முடிவு.

அந்தரங்கம்—ரகசியம்.
அந்தரம்—வானம், ஆகாயம்.
அந்தி—மாலைக்காலம்.
அந்நியோந்நிய—ஒருவரோடொருவர்க்குள்ள.
அபஜயம்—தோல்வி.
அபாயம்—கேடு, ஆபத்து.
அபிமானம்—பற்று, விருப்பம்.
அமர்—யுத்தம், போர்.
அமளி—படுக்கை, மெத்தை.
அமை—பொருந்து, நிலைபெறு, இயற்று, செய், அடங்கு.
அமைச்சு—மந்திரி.
அமையம்—சமயம்.
அம்பலம்—1. பலர்கூடும்பொதுஇடம். 2. சிதம்பரத்திலிருக்கும் நடராஜரது திருச்சபை.
அம்பிகாபதி—பார்வதி மணாளன், சிவபெருமான்.
அம்புயம்—தாமரை.
அம்புலி—சந்திரன்.
அயர்—மறந்துவிடு.
அயர்ச்சி, அயர்வு, அயர்ப்பு — தளர்ச்சி, மறதி
அயம்—1. ஆடு (அஜம்). 2. குதிரை (ஹயம்).
அயிராவதத்தன்—ஐராவதம் என்ற யானையையுடையதேவேந்திரன்.
அயிர்—சந்தேகங்கொள், ஐயப்படு.
அயினி—ஆலத்தி.
அரசி—இராணி.
அரசு—1. அரசன். 2. அரசாட்சி.
அரண்—1. கோட்டை. 2. காடு. 3. காவல்.
அரந்தை—துன்பம்.
அரவம்—சப்தம், ஒலி.
அரவு—பாம்பு. அரவினரசு—ஆதிசேஷன்.
அரற்று—சப்தமிடு, அழு.
அரன்—சிவன்.
அரா—பாம்பு.
அரி—1. சிங்கம். அரியணை—சிங்காதனம். அரியேறு—ஆண்சிங்கம். 2. பகைவர்.
அரிது — சுருக்கம், பெரும்பாலும்இல்லை. அருமையானது.
அரியது—அருமையானது.
அரிவை—பெண்.
அருக்கன்—சூரியன்.
அருச்சனை—பூஜை.
அருணோதயம்—சூரியோதயம். (அருண + உதயம்)
அருத்து—ஊட்டு.
அருந்ததி—வசிஷ்டரது பத்தினி: கற்பிற் சிறந்தவள்.
அருந்தவர்—அரியதவஞ்செய்தவர்கள்.
அருந்து—உண்.
அருள்—கிருபை.
அலகு—1. பறவையின்மூக்கு. 2. எண், எண்ணிக்கை.
அலகை—பேய்.
அலக்கண்—துன்பம், துக்கம்.
அலமரு—வருந்து, துன்பமுறு.
அலமாக்க—கலங்கிவருந்த.
அலம்—கலப்பை. அலமுகம்—கலப்பையின் கொழுமுனை.
அலர்—1. மலர், பூ (பெ) 2. விரி (வி)
அலவன்—நண்டு.
அலறு—சத்தமிடு.
அல்—ராத்திரி, இருள்.
அல்லல்—துன்பம்.
அவத்தை—நிலைமை, நிலை.
அவம்—வீண்.
அவா—ஆசை, விருப்பம்.
அவாவு—விரும்பு, ஆசைப்படு.
அவிசு—1. யாகத்தில் தேவர்களுக்குக் கொடுக்கும் உணவு 2. நெய்.
அவித்தல்—கெடுத்தல்.
அவை—சபை.
அழல்—தீ.

அழலாடுக்தேவர்–சிவபெருமான்.
அழுக்காறு–பொறாமை.
அழுங்கு–துன்பமுறு (அழுங்கலை–துன்புறாதே)
அளக்கர்–சமுத்திரம், கடல்.
அளவளாவு–கலந்து உறவாடு.
அளவை–தன்மை, பிரமாணம்.
அளி–1. வண்டு. 2. கொடு, தா, காப்பாற்று. 3. கிருபை.
அறம்-தருமம். அறத்தாறு–தருமவழி.
அறவோர்–தருமஞ்செய்பவர், முனிவர்
அரு–நீங்காத (அறு–பகுதி).
அறிஞர்–கற்றறிந்தவர், அறிவாளர்
அறை–1. சொல் (வி) 2. மோது. 3. வீட்டின் ஒருபகுதி (பெ)
அற்புதம்–ஆச்சரியம்.
அற்றம்–1. சமயம். 2. அச்சம் (III. i. 114). 3. முடிவு.
அற்று–அத்தன்மையது.
அனந்த–முடிவில்லாத.
அனந்தை–திருவனந்தபுரம்.
அனல்–தீ.
அனவரதம்–எப்பொழுதும், இடைவிடாமல்.
அனாதி–இன்னகாலத்தில் தோன்றியதெனக்கூறமுடியாதபடி தொன்றுதொட்டேயுள்ளது.
அனிச்சம்–ஒருவகைமரம். இம்மரத்தின்பூவைக்காட்டிலும் மென்மையிற்சிறந்ததுவேறில்லையென்று கவிஞர் கூறுவர்.
அனுதினம்–தினந்தோறும்.
அனுபூதி–தானேகண்டறிந்தும்பிறர்க்குச்சொல்லமுடியாததான அறிவு.
அனுமதி–உத்தரவு, கட்டளை, ஆணை
அனுமானம்-தர்க்கசாஸ்திரத்திற் சொல்லப்பட்டபிரமாணங்களுள் ஒன்றாகியகருதலளவை. புகையைக்கண்டு காணப்படாதநெருப்பையுண்டென்று உணர்தல் இப்பிரமாணத்திற்கு உதாரணம்.
அனுமானித்தல்–ஊகித்தல்.
அனைத்து–1. போல்வது. 2 எல்லாம்.
அனைய–போல, போல்வ.
அன்றில்-ஒருபறவை. இது தன் துணையைப்பிரிந்தால் மிகவும் வருந்தி யிறந்துபடுமென்பது கவிமரபு.
அன்ன–போல.
அன்னம்–1.சோறு. 2. அன்னப்பக்ஷி.
அன்னை, அனை – தாய்.

## ஆ

ஆ–பசு.
ஆகருஷணம்–நீங்கவிடாது இழுத்து நிற்கும் சக்தி.
ஆகுலம்–ஆரவாரம்.
ஆக்கம்–செல்வம்.
ஆங்கு–அவ்விடத்தில், அப்படி.
ஆசாரம்–ஒழுக்கம்.
ஆசி–வாழ்த்து.
ஆசிரமம்–துறவிகள்தங்கும் இடம்.
ஆசு–குற்றம்.
ஆஞ்சனேயன்–அஞ்சனாதேவியின்புத்திரனான அநுமான்.
ஆஞ்ஞை–ஆணை, கட்டளை.
ஆடகம்–பொன்.
ஆடவர்-புருஷர், ஆண்மக்கள்.
ஆடி–கண்ணாடி.
ஆடை–வஸ்திரம்.
ஆணவம்–நான்என்கிறஅகங்கார குணம். சைவசித்தாந்தத்திற் கூறப்படும் மும்மலங்களுள் ஒன்று: அதுசெம்பிற்களிம்புபோலஆன்மாக்களில் அநாதியேயுடன் கலந்துநிற்பதாய்ஒன்றேயாய் ஆன்மாக்கள்தோறும்வெவ்வேறாய்அவற்றின் அறிவையும்தொழிலையும் மறைத்துவிடுவது.
ஆணை–உத்தரவு, கட்டளை
ஆண்டகை–புருஷர்களிற் சிறந்தவன்.
ஆதரவு–அன்பு, துணை.
ஆதனம்–ஆசனம், இருப்பிடம்,பீடம்

ஆதித்தவாரம்–ஞாயிற்றுக்கிழமை.
ஆதியர்–முதலானவர்கள், முக்கியமானவர்கள்.
ஆபதம்-ஆபத்து.
ஆமலகம்–நெல்லிப்பழம்.
ஆமைப்பலகை– ஆமை வடிவத்தில் செய்தபீடப்பலகை,ஆசனப்பலகை
ஆயத்தம்-தயார்.
ஆயம்-தோழிகள்கூட்டம், பெண்கள் கூட்டம்.
ஆயிழை-தெரிந்தெடுத்தணிந்த ஆபரணங்களையுடைய பெண்.
ஆயுள்-ஆயுசு, வயது.
ஆய்தல்–ஆராய்தல்.
ஆரணம்–வேதம்.
ஆரம்-சந்தனமரம்.
ஆரியம்-ஸம்ஸ்கிருத பாஷை.
ஆர்-பொருந்து, நிறை.
ஆர்த்தல் } ஆரவாரித்தல், குதூகலித்
ஆர்ப்பு } தல், வருந்தியிரைத்தல்.
ஆர்வம் – தொடர்பில்லாதவரிடத்துக் காட்டும் அன்பு.
ஆலயம்-கோயில்.
ஆலவாய்-மதுரை.
ஆல்-ஆலமரம்.
ஆவல்-ஆசை.
ஆவி-உயிர்.
ஆழி-கடல்.
ஆறலை-வழிப்பறி (ஆறு + அலை : வழியில் துன்பஞ்செய்).
ஆற்றல்-திறம், சக்தி.
ஆற்றவும்-மிகவும் (ஆற்றவுமொக்கும்)
ஆற்று- 1. பொறு, சகி (ஆற்றேன்)
2. செய்துமுடி (ஆற்றுவர்)
3. கோதியுலர்த்து.
ஆன-ஆயின.
ஆன்றவர்-நற்குணங்கள்நிரம்பியவர்.

## இ

இகம்–இவ்வுலகம்.
இக்கு–கரும்பு.
இசித்து–இணுங்கி, சிறிதுசிறிதாகப் பிடுங்கி.
இசை–1. கீதம் } (பெ)
2. புகழ் }
3. பொருந்து } (வி)
4. சொல் }
இச்சை–விருப்பம், ஆசை.
இஞ்சி–மதில்.
இடுக்கண் } துன்பம்.
இடும்பை }
இடையூறு–துன்பம், தடை.
இணங்கு–பொருந்து.
இணை–ஒப்பு, ஜோடி, துணையாகவுள்ளது, இரண்டு.
இதம்–சௌகரியம்.
இதயம்–இருதயம், நெஞ்சு.
இத்தகை–இப்படிப்பட்ட.
இந்தனம்–விறகு.
இந்திரஜாலம்-கண்கட்டுவித்தை, மாயவித்தை
இந்திரியம் – ஐம்பொறிகள். அவையாவன:-மெய், வாய், கண், மூக்கு, செவி.
இந்து–சந்திரன்.
இமைப்பறு - கண்ணிமைத்தலில்லாத.
இமையவர்–தேவர்கள்.
இம்மை-இப்பிறப்பு.
இயக்கு-செலுத்து.
இயங்கு–விளங்கு, ஒளிவிடு.
இயம்பு-சொல்(வி); இயம்புகோ–சொல்லுவேன்; இயம்பலை-சொல்லாதே.
இயல்–1. லக்ஷணம், தன்மை; 2. பொருந்து.
இயற்று–செய் (வி)
இயை-பொருந்து.
இர–யாசகஞ்சேள்.
இரங்கல்–வருத்தம், துன்பம்.
இரங்கு–இரக்கங்கொள்.
இரவல்–கடன், யாசகம்.
இரவி–சூரியன்.

இரா—ராத்திரி, இருட்டு.
இராஜ்யதந்திரம் - இராஜ்யகாரியம்.
இரிதல் - ஒழிதல், ஓடுதல்.
இருடிகள் - ரிஷிகள், முனிவர்கள்.
இருப்பு - 1. இரும்பு. 2. நிலைமை.
இரும் - கரிய, பெரிய.
இலகு - விளங்கு.
இலக்கம் - எண். இலக்கமில் - எண்ணுக்கடங்காத.
இலக்கு - லக்ஷ்யம், குறி, நோக்கம்.
இலக்குமி - லட்சுமி.
இலவு - இலவமரம்.
இலீலை — லீலை, இன்பம், விநோதம்.
இலீலைச்சோலை - உத்தியானம்.
இல் - வீடு. இல்லவர்—வீட்டிலுள்ளவர், மனைவியர். இல்லாள்-மனைவி. இல்லறம்-மனைவியோடுவாழும் வாழ்க்கை நிலை.
இல்லம்-வீடு.
இவண்—இங்கே.
இவர்வாள் - ஏறியிருப்பாள்.
இவுளி - குதிரை.
இழி—இறங்கு.
இழுக்கு—குறை, குற்றம்.
இழுது—செய்.
இழைத்தல்—செய்தல்.
இளைஞர்—இளமைப்பருவத்தில் உள்ளவர், குமாரர்.
இற—மரணமடை, செத்துப்போ, கட.
இறக்கதோட்டக்கது—உயிரைவிட்டாயினும் பெற்றுக்கொள்ளத்தக்கது.
இறினும்—முறிந்தாலும் (இறு-பகுதி)
இறுதி—மரணம், முடிவு.
இறுத்து—தங்கியிருந்து.
இறுமாப்பு—திமிர், பெருமிதம், கர்வம்.
இறும்பூது—ஆச்சரியம்.
இறை—(1) அரசன். (2) திறை, கப்பம்.
இறைஞ்சு—வணங்கு (இறைஞ்சுவல்—வணங்குவேன்)
இறைவன்—அரசன், தலைவன், கடவுள்.
இறைவி—அரசி, இராணி.
இனம்—கூட்டம்.
இன்மையால்—இல்லாததால்.
இன்னல்—கேடு, துன்பம்.
இன்னார்-பகைவர்.

ஈ

ஈ—கொடு.
ஈட்டம் - கூட்டம்.
ஈட்டு-கூட்டு, சேகரி.
ஈண்டு-1. இங்கே. 2. நெருங்கு, வந்து சேர்.
ஈரம்—அன்பு, இரக்கம்.
ஈர்த்து—இழுத்து.
ஈறு—முடிவு.
ஈனன்—இழிந்தவன்.

உ

உகம்—யுகம்.
உகுத்து-கைநெகிழவிட்டு, உதிர்த்துவிட்டு.
உசாவி-கேட்டு. (உசாவு-பகுதி)
உசிதம்-மேன்மை, பொருத்தம்.
உசிதன்-பாண்டியன்.
உச்சம்-உயர்ந்தஸ்வரம் (உச்சத்தொனி)
உஞற்று-செய்.
உடன்படு-ஒத்துக்கொள்.
உடை-1. வஸ்திரம்.
2. தோற்றுப்போ (உடைந்தான்), இடி, அழி.
உட்பகை-புறப்பகைக்கு இடனுக்கிக்கொடுத்து அது வெல்லுந்துணையும் உள்ளாய்நிற்கும் பகை.
உணர்வு-அறிவு.
உண்மை-1. சத்தியம்.
2. உளதாகுந்தன்மை.
உதயன்-சூரியன்.
உதரம்-வயிறு.
உதாரம்-கொடுக்குங்குணம்.
உதி-தோன்று (உதித்து).
உதியன்-சேரன்.

உதிரம்-இரத்தம்.
உதும்பாதரு-அத்திமரம்.
உத்தம-உயர்தரமான, தன்னில்சிறந்த தொன்றில்லாத.
உக்தி-கொப்பூழ்.
உந்து-அடித்துவீசு, தள்ளு.
உந்தை-உனது தந்தை.
உபகாரம்-உதவி, நன்மை.
உபாயம்—தந்திரம், வழி, சூழ்ச்சி.
உமிழ்-கக்கு.
உம்பல்-யானை.
உயிர்ப்பது-ஜீவிப்பது.
உயிர்ப்பு-சுவாசம், மூச்சு (நெட்டுயிர்ப்பு-பெருமூச்சு.)
உய்-1. பிழை (உய்குவன்).
2. செலுத்து (உய்ப்பினும்).
3. காப்பாற்று (உய்ப்பையேல்).
உரம் / உரன் — 1. மார்பு.
2. பலம், வலிமை. (உரவோர்-மனவலியுடையார்)
உரித்து / உரியது — உரிமையானது, சொந்தமானது.
உருமு-இடி.
உரை-சொல்.
உலகவழக்கு-பேச்சில் வழங்குதலாகிய லக்ஷணம்.
உலண்டு - பட்டுநூலை யுண்டாக்குங் கோற்புழு.
உலப்பு-முடிவு.
உலவாது-குறையாது, கெடாது.
உலாவு-திரி.
உலைமூக்கு கொல்லனுலையில் துவாரம்
உவகை-சந்தோஷம்.
உவமை-ஒப்பு, சமம்.
உவர்த்து-வெறுத்து.
உவாமதி-பூர்ணசந்திரன்.
உழந்து-வருந்தி.
உழல்-சுற்று, கலங்கு.
உழி-பொழுது, இடம்.
உழிஞை-பகைவருடைய அரணைவளைப்பவன் சூடும் பூமாலை.
உழுவல்-எழுமையுந்தொடர்ந்த அன்பு.
உழுவை-புலி.
உழை-1. பக்கம்.
2. வருந்திவேலைசெய்.
உளம்—மனம்.
உளை—1. பிடரிமயிர். (கொய்யுளை—ஒழுங்குபடக்கத்தரித்தபிடரிமயிர்)
2. (வி)உள்ளாய், இருக்கிறாய்.
உள்—மனம்.
உள்ளான்—ஒருவகைப்பறவை.
உள்ளு—நினை.
உறவினர்—பந்துக்கள்.
உறழ்—ஒப்பு.
உறு—1. மிக்க.
2. பொருந்து, அடை, இரு.
உறுகண்—துன்பம், இடையூறு.
உறுத்து—வருத்தஞ்செய்.
உறுப்பு—அவயவம், அங்கம்.
உறை—வசி, வாசஞ்செய். உறையுள்—வசிக்குமிடம், வீடு.
உற்சவம்—திருவிழா.
உற்பவம்—தோற்றம், ஆரம்பம்.
உற்றார்-பந்துக்கள்.
உற்று—ஆராய்ந்து. (உறு—பகுதி)
உன்-நினை (உன்னுபு-நினைந்து)
உன்மத்தன்- பைத்தியம்பிடித்தவன்.

## ஊ

ஊகம்—ஊகித்தறியும் அறிவு.
ஊக்கம்—உத்ஸாகம், மனவெழுச்சி.
ஊடல்-காதற்பிணக்கம், பிரணயகலகம்
ஊர்கோள்—பரிவேடம், சந்திரனைச்சுற்றியிருக்கும் ஒளிவட்டம்.
ஊழி—யுகத்தின் முடிவு.
ஊழிக்கனல்-யுகாந்தகாலத்தில்உண்டாகும் நெருப்பு.
ஊழ்வினை — முற்பிறப்புகளிற் செய்த கருமங்கள் பலனைத்தரும் நியதி.
ஊன்-உடம்பு.(ஊன்உரு பெருநோய்-பிறவிப்பிணி.)
ஊன்று—தங்கியிரு.

எ

எஞ்சல்-குறைதல்.
எஞ்ஞான்றும்-எப்பொழுதும்.
எட்டி-எட்டிமரம்.
எட்டுமோ-நீண்டுசெல்லுமோ.
எட்பூ-எள்ளின்பூ.
எண்-நினைப்பு, கணக்கு.
எதிர்-1. ஒப்பு, 2. மாறுபாடு.
எதிர்ச்சையாய்-நினைத்திராதபடி.
எத்திறம்-எவ்வகை, எப்படி.
எத்துணையும்-எவ்வளவும், சிறிதும்.
எந்தை-எனதுதந்தை.
எம்மனீர்-என்போன்றவர்களே.
எயில்-மதில்.
எய்து-அடை, சேர்.
எய்ப்பினில்வைப்பு - இளைத்தகாலத்தே உதவுவதற்கு வைக்கப்பட்ட பொருள், க்ஷேமநிதி.
எய்யாது-ஒழியாது.
எரி-தீ.
எருது-காளை.
எல்லை-பொழுது, வரம்பு, முடிவு.
எவண்-எங்கே.
எவன்-என்ன.
எவ்வும்-எழுந்துதுள்ளுகின்ற.
எழிலி-மேகம்.
எழில்-அழகு.
எளியை-ஏழை.
எறி-மோது.
எற்பாடு-மாலை, சாயங்காலம்.
எற்று-1. தாக்கு.
2. எத்தன்மையது.
எனது-என்னுடைய.
எனை-1. என்னை.
2. எவ்வளவு.
எனைத்து-எவ்வளவு.
என்-1. என்னுடைய.
2. என்ன.
என்றேற்கு-என்ற எனக்கு.
என்பவோ-என்றுசொல்லுவார்களோ
என்பு-எலும்பு.

ஏ

ஏகாந்தம் - தனித்த இடம்.
ஏகு-செல், போ.
ஏசிய-பழித்த.
ஏதம்-குற்றம்
ஏதிலன்-அன்னியன், அயலான்.
ஏது-காரணம்.
ஏத்து-வணங்கு, புகழ்.
ஏந்தல்-பெருமான், மக்களிற் சிறந்தவன், அரசன்.
ஏந்திழையார்-தரித்த ஆபரணங்களுடையார் (பெண்கள்).
ஏமாப்பு-இறுமாப்பு, செருக்கு.
ஏயும்-பொருந்தும், ஒக்கும்.
ஏய்த்தல்-ஒப்பாதல்; வஞ்சித்தல்.
ஏலும்-முடியும், இயலும்.
ஏவலர்-வேலைக்காரர்கள்.
ஏழையர்-பெண்கள்.
ஏறு-1. இடி. இடியேறு-பேரிடி.
2. ஆண்சிங்கம்.

ஐ

ஐயம்-சந்தேகம்.
ஐயுறேல்-சந்தேகப்படாதே.

ஒ

ஒட்டார்-பகைவர்.
ஒண்ணு-முடியாத.
ஒத்தறு-தாளமிடு.
ஒப்புரவு-சமாதானம் ('ஒப்புரவுமொழி மாறுவோலை' யென்பதுகாஞ்சிநாட்டு வழக்கு)
ஒருங்கு-ஒன்றாக, முழுவதும். ஒருங்காரநிறை-ஒன்றாகஅடர்ந்து நிறைந்துள்ள.
ஒருதலை-1. ஒரு ஓரத்தில்,ஒருபுறமாக.
2. நிச்சயம், தீர்மானம்.
ஒருப்படு-1. தொடங்கு, தயாராகு.
2. சம்மதி.
ஒலி-சப்தம்.

ஒல்கு-தளர்ந்து ஒடுங்கு.
ஒல்லு-பொருந்து.
ஒல்லே-விரைவில் சீக்கிரம்.
ஒவ்வு-1. உடன்படு, சம்மதி 2. ஒப்பாகு 3. இசை, பொருந்து.
ஒழுங்கு-முறை.
ஒளிக்கலே-மறையாதே.
ஒள்ளிய-பிரகாசமான.
ஒறுத்தல்- தண்டித்தல், வருத்துதல், மெலிவித்தல்.
ஒன்று-சேர், பொருந்து
ஒன்ருக-ஒருபொருளாக.
ஒன்ருர்-பொருந்தார்.
ஒன்னலர் } - பகைவர்.
ஒன்ஞர் }

ஓ

ஓதிமம்-அன்னம்.
ஓது-சொல், படி (வி).
ஓதை-ஓசை.
ஓம்புதல்- பாதுகாத்தல் (ஓம்புபு-பாதுகாத்து).
ஓர்-ஆராய்ந்துணர்ந்துகொள்.
ஓவல் } தவிர்தல், நீங்குதல்.
ஓவு }
ஓவா-ஒழியாத.
ஓவியம்-சித்திரம்.
ஓவிறந்து-ஒழியாமல், ஓயாமல்.

க

ககனம்-வெளியிடம், வெளி.
கங்குல்-இராத்திரி.
கசடர்-குற்றம் நிரம்பியவர்கள்.
கஞ்சம்-தாமரை.
கஞ்சனம்-கண்ணடி.
கடக்கரும்-தாண்டமுடியாத.
கடபடசடம் - (கடம்-குடம்; படம்-துணி, சீலே; சடம் உடம்பு; இம்மூன்றும் நமது இந்திய தத்துவசாஸ்திர தருக்கமுறையில் அடிக்கடிவழங்கும் வார்த்தைகள்.) பலவகை ஜடப்பொருள்கள்.
கடம்-மதம்.
கடம்பாடு } -கடமை.
கடன் }
கடாவி-செலுத்தி.
கடி-1. வாசனை. (கடிமலர்)
2. கூர்மை. (கடிவாள்)
3. காவல். (கடிபுரி)
4. புதுமை. (கடிமணம்,
கடிஞை-பிக்ஷையெடுக்கும் மண்டையோடு.
கடு-விஷம். கடுவுண்டகண்டர்-விஷத்தையுண்டு கறுத்தகழுத்தினையுடையவர், சிவன்.
கடுகி-விரைந்து, வேகமாய்.
கடை-கடைசி.
கடைக்கண்சாத்து- கிருபையோடு சிறிதுநோக்கு.
கடைசியர்-இழிந்த இனத்தாராகிய பள்ளியர்கள்.
கடைப்பிடி-உறுதிக்கொள்கை.
கடையர்-அதமர்.
கடையூழி- உலகமுடிவு உண்டாகும் காலம்.
கடையேன்-அதமனுகிய நான்.
கட்செவி-பாம்பு.
கட்டளை-உத்தரவு, ஆணை.
கட்டம்-கஷ்டம், வருத்தம்.
கட்டுரை-மெய்யுரை, உறுதிச்சொல்.
கணக்கா-கணக்காக, தன்மையாக, முறையாக.
கணம்-1. கூட்டம். 2. க்ஷணம்.
கணிசம்-கண்ணியம், கௌரவம் (நாஞ்சிஞட்டுவழக்கு)
கணிதசங்கேதம்-கணித சாஸ்திரத்தில் வழங்கும் பேர்.
கணை-1. திரட்சி, 2. அம்பு.
கணைக்கால்-முழந்தாளிற்குக்கீழும் பாட்டிற்குமேலுமுள்ள பாகம்.
கண்-1. இடம். 2. கண்என்ற உறுப்பு.
கண்டனன்-ஸ்தாபித்தேன் (II.i.152.)

கண்டு-1. கற்கண்டு 2. பார்த்து.
கண்ணி-கண்ணையுடையவள் (மை திகழ் கண்ணி)
கண்ணுதல் - நெற்றிக்கண் : அதனையுடைய சிவபெருமான்.
கண்ணே-கண்ணையுடைய நீ.
கண்படு-உறங்கு.
கண்பனிப்ப-1. கண்குளிர.
2. கண்ணீர் துளிக்க.
கதி-பதவி ; அதிருஷ்டம்.
கதித்து-மிகுத்து, ஒலித்து, சிறந்து.
கதிர்க்கடுங்கடவுள்-சூரியன்.
கதுப்பு-கன்னம்.
கதுவு-பற்று, பொருந்து,உண்டாகு.
கந்தம்-கிழங்கு.
கபடம்-வஞ்சகம்.
கபந்தம்-தலையற்ற உடற்குறை.
கபோலம்-கன்னம்.
கமலை-லட்சுமி.
கமழ்-வாசனைவீசு.
கம்புள்-சம்பங்கோழி.
கம்மியன்-கொல்லன், பொன்வினைக் கம்மியன் - பொன்தொழில் செய்யும் ஆசாரி.
கயம்-1. யானை. 2. ஆழம்.
கயவன்-இழிந்தகுணமுடையவன், தீயவன்.
கர-மறை, ஒளித்துவை.
கரணம்-1. கருவி.
2. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்றஅகக்கருவிகள்.
கரம்-கை. கரதலாமலகம்- (கர+தல+ஆமலகம்) கையிடத்திலுள்ளநெல்லிக்கனி.
கரா-முதலை.
கரி-யானை.
கரு-1. கருப்பம், கருப்பத்திலுள்ளது.
2. பொன்முதலியவற்றையுருக்கி வார்க்கும் கரு. (mould)
கருது-நினை,ஆலோசித்துவை. (கருத்து-நினைப்பு.)
கருப்பு-கரும்பு.
கருமம்-செய்கை, தொழில்.
கருமருந்து-வெடிமருந்து.
கருவி-ஆயுதம்.
கலன்-1. ஆபரணம், அணிகலன்.
2. பாத்திரம்.
3. கப்பல்.
கலினம்-கடிவாளம்.
கலுழு-அழு. (கலுழுநள்-அழுகின்றவள்)
கலை-1. கலைஞானம், சாஸ்திரங்கள்.
2. ஆண்மான்.
3. சந்திரகலை (கலைமதி)
கலைமகள்-சரஸ்வதி.
கல்லறை-சுருங்கை.
கல்வி-படிப்பு.
கவடி-சோகி.
கவின்-அழகு.
கழகம்-சங்கம், சபை.
கழல்-1 வீரக்கழல். 2. கழற்சிக்காய்
கழறு-சொல் (முதலில் இடித்துச் சொல் என்று பொருள்பட்டுப்பிற்பாடு பொதுப்படச் சொல்லுதலுக்காயிற்று.)
கழுமி-நிறைந்து.
கழை-கரும்பு.
களங்கம்-மறு, மாசு ; வஞ்சனை.
களம்-1. போர்க்களம், 2. இடம்.
3. கழுத்து.
களி. } மகிழ்ச்சி, சந்தோஷம்.
களிப்பு. }
களி-மகிழ்ச்சியடை.
களிறு-ஆண்யானை.
கள்ளலம்-திருடமாட்டோம், அபகரியோம்.
கறங்கு-1. கைக்காற்றாடி.
2. ஒலியிடு, சப்தமிடு.
கறி-மிளகு. (வி)
கறுவி-கோபித்து.
கறையடி - யானை. (உரல்போன்ற காலை யுடையது.)

கற்படை—சுருங்கை.
கற்பனை-1. கட்டளை, ஆணை.
2. அலங்காரம்.
3. உண்மையல்லாத நிர்மிதம்.
சரணம் - 1. வேதம் ஓதுதலில் ஒருவகை. (உரைக்குறிப்பு நோக்க.)
2. நிறைவு.
கனல் - தீ.
கனி—பழம்.
கனிவு-உருக்கம்.
கனை—ஒலிசெய்கிற.
கன்றும் — கொதித்தெழும்; மிக்கெழும்; கோபிக்கும்.
கன்னி-கலியாணமாகாத பெண்.
காசினி—உலகம், பூமி.
காண்—1 அழகு.
2. பார்.
காதகர்-கொலைகாரர்.
காதல்-அன்பு. (காதலர்-அன்பினர்)
காந்தம்-ஊசிக்காந்தம்.
காந்தள்—கார்த்திகைப்பூ.
காப்பு-பாதுகாப்பு, காவல்.
காம்பு-மூங்கில்.
காயம்—1. சரீரம். 2. புண்.
காய்-கோபித்துக்கொள்.
காரா—எருமை.
காரிகை-1. அழகு. 2 பெண்.
காருண்ணியம்-கருணையுடையனாயிருக்குந் தன்மை. (கருணை-அருள்)
கார்-மேகம்.
கார்முகம்-வில்.
காலும்-கக்கும், பொழியும்.
கால்-காற்று, தென்றற்காற்று.
காவலர்-அரசர்.
காவி—குவளைப்பூ, நீலோற்பலம்.
காழ்-மரத்திலுள்ள வைரம்.
காற்படையாளர் - சதுரங்க சேனையின் பகுதியாகிய பதாதி.
கானகம்-காடு.
கானகதி-காட்டாறு

கானல்-பேய்த்தேர், வெப்பமிகுதியால் ஜலமிருப்பதுபோல் தோன்றுந் தோற்றம்.
கிடந்த-வேரூன்றி நிலைபெற்ற (அறங்கிடந்த சிந்தை.)
கிணைப்பறை-நெல்லரியும்போதுமுழக்கும் பறை.
கிரகி - உணர்ந்துகொள், ஊகித்துக்கொள்.
கிருபணன்-உலோபி, பொருளாசைபிடித்தவன்.
கிருபாநிதே - அருளாகிய செல்வமுடையவனே. (கிருபாநிதி என்றதன் விளிவேற்றுமை).
கிருபை-அருள்.
கிழமை-உரிமை.
கிழி-துண்டு, கீறல். (நீவியக்கிழி- சீலைத்துண்டு, a piece of canvas.)
கிள-சொல். (வி)
கிளர்-எழு, மேலோங்கு.
கிளைஞர்—சுற்றத்தார், பந்துக்கள்.
கிறி-வஞ்சகவழி.
கீண்டல்-பிளக்கல், கிழித்தல், கிண்டல்.
கீர்த்தி-புகழ்.
குகு-அமாவாசை.
குக்கன்—நாய்.
குங்குமம்-ஒருஜாதிமரம்.
குடகன்-சேரன்.
குடங்கை-உள்ளங்கை.
குடமுனி- குடத்தினின்றும்பிறந்தவராகிய அகஸ்தியரிஷி.
குடம்பை—முட்டை.
குடா—தரையால்நெருக்கப்பட்ட சிறு கடற்பகுதி. (gulf.)
குடிலன்—வஞ்சகன்.
குடில்—சிறுவீடு, குடிசை.
குணதிசை—கீழ்த்திசை.
குணப்பிரதம் - நன்மைதருவது.
(குணம்-நன்மை, பிரதம்-தருவது)

குண்டு - ஆழமான, குழிந்த, (குண்டு கண்).
குமுதம்-ஆம்பல்மலர்.
கும்பம்-குடம்.
குயிற்று-இயற்று, செய்
குரம்-குதிரையின் காற்குளம்பு.
குரல்-இசை, சாரீரம்
குரவன்-ஆசிரியன்.
குரவை-பெண்கள் கைகோத்துப் பாடி யாடுதல்.
குரு-1. ஆசிரியன்.
2. டில்லிநகரத்தை யடுத்துள்ள தேசத்தைப் பாரதகாலத்தில் ஆண்டுவந்த அரசவமிசம். துரியோதனன்முதலியோர் இந்தவமிசத்தில் வந்தவர்கள்; இதனால் இவர்கள் கௌரவர் எனப்படுவார்கள். (குருகுலவிசயன்).
குருகு-பக்ஷி, பறவை.
குருதி-இரத்தம்.
குரூரம்-கொடுமை.
குரோதம்-கோபம், விரோதம்.
குவலயம்-உலகம்.
குழல்-பெண்கள்தலைமுடி.
குழவி-குழந்தை.
குழாம்-கூட்டம்.
குழூஉ-இனம், கூட்டம் குழூஉக்குரல்-இனங்களை யழைக்கும் ஒலி.
குழை-குண்டலம். [யாளம்.
குறி-1. காட்டு. 2. நோக்கம், அடை
குறிப்பு-மனப்பாங்கு, நோக்கம்.
குறு-சிறிய.
குறுகு-நெருங்கிப்போ, போ.
குறுமுனி-அகஸ்தியர்.
குறும்பர்-குறுநிலமன்னர்.
குறும்பு-சேஷ்டை.
கூஉய்-கூவி, கூப்பிட்டு.
கூடமாய்-மறைவாய், ரகசியமாய்.
கூடல்-மதுரை.
கூந்தல்-பெண்கள்தலைமுடி.
கூம்பிய-குவிந்த.
கூரிய-கூர்மையான; நுட்பமான.
கூவலை-கோழிபோற் கூவாதே.
கூவினன்-அழைத்தான்.
கூறு-1. பங்கு. 2. சொல். (வி)
கூற்று } யமன்.
கூற்றுவன் }
கூன்-வளைவு.
கெழுமு-நிறை, நெருங்கு.
கேண்மை-உரிமை; நட்பு; அன்பு.
கேதகை-தாழை.
கேள்-1. சுற்றம்.
2. கேள். (வி)
கேள்வன்-துணைவன், கணவன்.
கேள்வி-கல்வி.
கைதவன்-பாண்டியன்.
கைப்பது-கசப்பது.
கைம்மாறு-பிரதிபலன்.
கையறு-செயலற்ற.
கைரவம்-ஆம்பல்மலர்.
கைவிட்டு-ஒழித்துவிட்டு, உதறிவிட்டு
கொங்கன்-சேரன்.
கொங்கை முலை.
கொடிஞ்சி-தாமரைப் பூப்போற் செய்து தேர்த்தட்டின்முன்னே வைக்கப்படுவது.
கொடுபோய்-கொண்டுபோய்.
கொண்மூ-மேகம்.
கொய்-கத்திரி (வி)
சொல்-1. அசைச்சொல். ஐயம்வினா முதலியபொருள்களில்வரும்.
2. சொல். (வி)
கொற்றவன்-அரசன்.
கொற்றவை-இராஜசபை.
கொன்னே-வீணாக.
கோடிய-வளைந்த, தவறிய (கோடு-பகுதி.)
கோடற்கது-கொள்ளத்தகுந்தது.
கோட்டம்-கோணல்.
கோட்டி-வளைத்து, சரித்து.
கோண்-கோணல், குற்றம்.

கோது-குற்றம், களங்கம்.
கோதையர்-பூமாலையணிந்தவர், பெண்கள்.
கோலம்-1. அழகு.
2. வேஷம்.
கோல்-ஆட்சி. செங்கோல் - நியாயந்தவறாத செம்மையான ஆட்சி.
கோவில்-அரண்மனை.
கோழையர்-பயம்கொண்டவர்கள்.
கோள்-கொள்ளுதல்.
கோற்றொடியார் - திரண்டவளையல் அணிந்தவர், பெண்கள்.
கோன்-அரசன்.
கௌசலம்-சாமர்த்தியம்.
கௌசிகன் - குசிகனது வம்சத்தில் வந்தவராகிய விசுவாமித்திரர்.
கௌவை-துன்பம்.

ச

சகம்-உலகம்.
சகலம்-எல்லாம்.
சகித்தல்-பொறுத்தல், தாங்குதல்.
சக்கரம்-மந்திரச்சக்கரம், யந்திரம்.
சங்கதி-வரலாறு, தொடர்பு.
சங்கேதம்-குறியீடு, குழூஉக்குறி. (Technical term)
சச்சரவு-சண்டை.
சஞ்சலம்-துன்பம்.
சஞ்சித-கூட்டிவைத்த, சேகரித்துவைத்த; விசேஷமா யெண்ணப்பட்ட.
சடை-வேதம் ஓதுதலில் ஒருவகை. (உரைக்குறிப்பு நோக்க.)
சண்டி-வம்பன்.
சதம்-தஞ்சம், அடைக்கலம்.
சதா-எப்பொழுதும்.
சதி-வஞ்சனை.
சது-(சதுர்) நான்கு.
சந்ததம்-எப்பொழுதும்.
சந்தம்-அழகு, வாசனை.
சந்தி-1. காலம், நிலைமை.
2. கூடு, சேர்.
சந்து-ஓரரசன் பெயர். (உரைக்குறிப்பு நோக்க.)
சபதம்-ஆணை.
சமயிகள்-மதபேதங்களைச் சேர்ந்தவர்கள். மதப்பற்று மிகுதியாயுடையவர்கள்.
சமர்-யுத்தம், போர்.
சமழ்ப்பு-குற்றம்; நாணம்.
சமாதி-பிரமத்தோடு ஐக்கியப்பட்டு நிற்கும் நிலை.
சமுசயம்-சந்தேகம்.
சமை-தயாராகு, தொடங்கு; சமையல் செய்.
சம்பவம்-நேரிடுவது, உண்டாவது.
சயனம்-படுக்கை, மெத்தை.
சரதம்-உண்மை, சத்தியம்.
சரணம்-அடைக்கலம்.
சரம்-கணை, அம்பு.
சரிதம்-சரித்திரம், கதை.
சருவம்-எல்லாம்.
சலனம்-நிலையற்றுத் ததளித்தல்.
சலிப்பற-ஓய்வு ஒழிவின்றி.
சழக்கு-குற்றம்.
சாகரம்-கடல்.
சாகஸம்-துணிவுச் செயல், சாமர்த்தியம்.
சாக்கி / சாக்கியம் } சாக்ஷி, ருசு.
சாடு- 1. அழி, முறி. 2. பாய். (வி)
சாத்தியம்-முடியக்கூடியது.
சாத்திரி-சாஸ்திரி.
சாந்தம்-1. சந்தனம். 2. அமைதி.
சார்-பக்கம், புறம்.
சார்தல்-சேருதல், அடைதல்.
சார்பு-பக்கம்; பற்று, துணை (சார்பிலர்-துணையில்லாதவர்)
சாலமாய்-ஜாலமாய், ஏமாற்றாய்.
சாலவும்-மிகவும்.
சாலி-நெற்பயிர்.
சாலிபுரம்-திருநெல்வேலி.
சாற்று-சொல் (வி)

சான்று—சாக்ஷி.
சான்றோர் - அறிவினால் நிறைந்தவர்கள்.
சிகரம்-மலையுச்சி; உச்சி.
சிகை-உச்சி, முடி.
சிட்ட-கற்றறிவுடைய.
சித்-அறிவு (சித்கனம்-அறிவுமயம்).
சித்தம்-மனம்.
சித்தி-1. ஜயம், பயன்பெறுதல்.
2. மோக்ஷம்; நித்தியயோகத்தில் ஒருவகை.
சித்திரரேகை-உஷையின் தோழி. (உரைக்குறிப்பு நோக்குக).
சிந்தி-நினை, சிந்தனைசெய்.
சிந்துரம்—சிவப்பு.
சிந்தை } ஆலோசனை, நினைப்பு, மனம்.
சிந்தனை }
சிரம்-தலை, சிரசு.
சிருஷ்டி-படைப்பு.
சிலாக்கியன்-புகழ்படைத்தவன்.
சிலை-வில்.
சிவிகை-பல்லக்கு, தண்டிகை.
சிறகர்-இறக்கை, சிறகு.
சிறந்து-மேற்பட்டு, மேம்பட்டு.
சிறுமியர்-சிறுபெண்கள்.
சிறுமுறுவலித்தாள்- புன்சிரிப்புச் செய்தாள்.
சிறுமையர்-அற்பர்.
சிறை-1. சிறகு.
2. அணை, அணைக்கட்டு.
சிற்சாயை - லேசான ஒப்புமை.
சிற்றுடி-சிறுகண்ணாடி (Hand-lens.)
சிற்றில்—சிறுவீடு.
சினகரம்—கோயில். (முதலில் ஜினன் கோயிலை யுணர்த்திநின்று பின்னர்ப் பொதுப்படக் கோயிலையுணர்த்துவதாயிற்று).
சினம்—கோபம்.
சினை—1. கொம்பு,மரத்தின் சிறுகிளை.
2. கர்ப்பம், கரு.
சின்னம்—1. எக்காளம். 2. அறிகுறி.
சீதம்—குளிர், குளிர்ச்சி.
சீரிய—1. சிறந்த.
2. நுண்ணிய. (சீரிய தூளி—fine dust.).
சீலம்—ஒழுக்கம்.
சுகம்-1. கிளி. 2. இன்பம்.
சுக்கான்-நினைத்த திசை நோக்கிக் கப்பலைச்செலுத்துவதற்கு ஏற்படுத்தப்பட்ட கருவி. (rudder).
சுடிகை-உச்சி, முடி, தலை.
சுணங்கு-தேமல்.
சுதம்—தானே உண்டாகிற.
சுதேசாநுராகம் (சுதேச + அநுராகம்) தன் தேசத்தின் மீதுள்ள அன்பு.
சுத்தன்-கள்ளங்கபடில்லாதவன்.
சுந்தரம்-அழகு.
சும்மை-ஒலி.
சுயம்—தானேயுணர்ச்சி.
சுரத்தல்—தருதல், அருளுதல்.
சுரம்-காய்ச்சல்.
சுரர்—தேவர்கள் (சுரகுரு—தேவகுருவாகிய பிருஹஸ்பதி.)
சுருங்கை—பூமிக்குள் குடைந்து தோண்டிய வழி (underground passage)
சுருதி—வேதம்.
சுரும்பு—வண்டு.
சுரை—பால் சுரக்கும் பசுவின் முலைக்காம்பு.
சுலபம்—எளிதில் அடையக் கூடியது.
சுலபசாத்தியம்—எளிதல் முடியக்கூடியது.
சுவானம்—நாய்.
சுவை—ருசி.
சூட்டு—உச்சிக்கொண்டை.
சூதகம்—தீட்டு, அசுத்தம்.
சூது—கபடம், வஞ்சகம்.
சூத்திரம்-தந்திரம், யந்திரம்.
சூழ்-வளை, பற்றிப்பிடி.
சூழ் } ஆலோசனை.
சூழ்ச்சி }

சூள்-சபதம்.
சூறை-சூறுவளிக்காற்று.
செகம்-ஜகம், உலகம்.
செகுத்தல்-அழித்தல், கொல்லுதல்.
செக்கர்-செவ்வானம்.
செப்பு-சொல். (வி)
செமித்தருள்வை-(க்ஷமித்தருள்வாய்) பொறுத்தருளுவாய்
செம்புனல்-இரத்தம்.
செம்மல்-அரசன்.
செம்மை-நேர்மை, நன்மை.
செயிர்-1. குற்றம். 2. துன்பம்.
செய்கோ-(செய்கு+ஓ)-செய்வேனோ.
செருக்கு-தற்பெருமை.
செருநர்-போர்வீரர் (செரு-போர்)
செருமுகம்-போர்முனை.
செல்லலை-செல்லாதே.
செவிலி-வளர்ப்புத்தாய்.
செவ்விது-செம்மை; செவ்விதிற்படுத்து-நல்வழிப்படுத்து; செவ்விதின்-நன்றாய்.
செழியன்-பாண்டியன்.
செறி-நெருங்கு; அடக்கு.
செறிவு-அடுக்கு, அடர்ச்சி.
செற்று-அழித்து, கெடுத்து
சேக்கை-படுக்கை.
சேடி-பணிப்பெண், தோழி.
சேண்-ஆகாயம்; தூரம்.
சேதம்-வெட்டுதல், கொய்தல்
சேமம்-க்ஷேமம், சௌக்கியம்.
சேய்-குழந்தை.
சேய்மை-தூரம். (சேயது-தூரத்திலுள்ளது)
சேவகம்-சூரத்தனம்.
சொர்ணம்-பொன்.
சோதனை-பரீக்ஷை (சோதி-புடம்போடு, சுத்திபண்ணு)
சோரன்-கள்வன்.
சோரி-இரத்தம்.
சோர்வு-தளர்ச்சி, வருத்தம்.
சௌரியம்-வீரம்.

## ஜ

ஜகம்-உலகம்.
ஜயமாது-ஜயலக்ஷ்மி.
ஜனார்த்தனம்-வற்கலையென்று வழங்கும் விஷ்ணு க்ஷேத்திரம்.
ஜனிக்கும்-உண்டாகும்.

## ஞ

ஞாட்பு-போர்க்களம்.
ஞாலம்-உலகம்.

## த

தகை-1. உயர்குடிப் பிறப்புக்கு வலியாக நிற்கும் மானம் (IV-iii-51.)
2. தகுதி, தன்மை; தகைத்து-தகுதியுடையது.
தகைமை-பெருமை.
தக்ஷணம்-(தத்க்ஷணம்) இப்பொழுதே, உடன்தானே.
தடம்-அகன்ற, விசாலமான.
தடாகம்-குளம்.
தண்ணுமை-முழவு, மத்தளம்.
ததையும்-அடரும்; நிறையும்.
தந்தாவளி-(தந்த+ஆவளி) பல் வரிசை.
தந்தை-தகப்பன்.
தப்பிலி-போக்கிலி. பிழையில்லாதவன்
தமர்-சுற்றத்தார்.
தமியள்-ஒன்றியாயிருப்பவள்.
தயா-அருள்
தயாநிதே-அருட்செல்வனே.
தாணி-பூமி.
தாளம்-முத்து.
தரித்து-அணிந்து, உடுத்து.
தரு-மரம்.
தருணம்-சமயம்.
தலம்-ஸ்தலம், க்ஷேத்திரம்; இடம்.
தலை-பக்கம்.
தலைநகர்-இராஜதானி.
தலைவன்-நாயகன்,

தவசி }
தவர் } —துறவிகள்.
தவராஜேந்திரன்—துறவிகளில் சிறந்தவன்,
தவழ் — நகர்ந்துபோ.
தவிர்—தவறு, நீங்கு, ஒழி.
தழல்—தீ.
தள்ளாமுயற்சி—விடாமுயற்சி.
தற்பிரதிமை-அவனுடையசாயை அல்லது பிரதிரூபம்.
தனி—ஒப்பற்ற.
தனு—உடம்பு.
தனையள் }
தனையை } மகள்
தனையன்—மகன்.
தா—வருத்தம்.
தாதா—தகப்பன், தந்தை.
தாதான்மியம்— சேர்க்கையினுல் ஏற்படும் ஒற்றுமை, சேர்க்கைவாசனை.
தாது—மகரந்தப்பொடி.
தாதையர்—தந்தைகள்.
தாபம்—வருத்தம், துன்பம்.
தாபனம்—வைத்தல், நிலையிடுதல்.
தாரணி-பூமி.
தாரகைகள்—நக்ஷத்திரங்கள்.
தாரா—தாராக்கோழி ; வாத்து.
தாரு-மரம்.
தார்-மாலை.
தாவரும்— கெடுதலில்லாத.
தாழ்த்தாது-கேவலப் படுத்தாது ; தாமதப்படுத்தாது.
திகழ்—விளங்கு.
திகிரி—ஆக்ஞாசக்கரம்.
திங்கள்—சந்திரன்.
திண்ணம்-உறுதி, நிச்சயம்.
திண்மை—மனவலி, பலம்.
திமில்-மரக்கலம், தோணி.
திரணம்-புல்.
திராவிடநாடு—தமிழ்நாடு.
திரள்-செருங்கு, குவி.
திரு-லட்சுமி, செல்வம், அழகு.
திருக்கு-குற்றம்.
திருத்திட-முற்றுவித்திட.
திருந்த-நன்ருக.
திருந்தலீர்-பகைவர்களே.
திருமகள்-லட்சுமி.
திருமால்-விஷ்ணு.
திருமுகம்—அரசன் அனுப்பும்ஓலை.
திருவாழ்கோடு-சேர தேசத்திற்குரிய பெயர் : திருவிதாங்கூர் என இக்காலத்து மருவி வழங்கும். லட்சுமி வாசஞ்செய்யும் மலைநாடு என்பது பொருள்
திரை—1. அலை.
2. திரைச்சீலை.
திரைத்தது-சுருக்கு விழுந்தது, மடிப்பு விழுந்தது.
திலகம்-பொட்டு.
திவலை—துளி.
திளைப்பர்-நிரம்ப அநுபவிப்பர்.
திறம் - தன்மை; சக்தி, வலிமை.
திறல் - வல்லமை.
தினமணி—சூரியன்.
தினவு-சொறி.
தீ-செருப்பு, கொடுமையான.
தீட்டு—எழுது( தீட்டு-எழுதுவதற்கு)
தீண்டு—தொடு, எட்டு. (தீண்டன் மின் தொட்டு விடாதேயுங்கள்).
தீம்—இனிய ( தீம்புனல்)
தீயர்—கொடியர்.
தீரம்—தைரியம்.
தீர்த்தகுலம்-புண்ணியநதி அருவிமுதலிய தீர்த்த இனங்கள். (குலம்-இனம், வகை.)
தீனன்—எளியவன்.
துகிர்-பவளம்.
துகில்-புடவை, சீலை.
துச்சம் - இகழத்தக்கது, ஸாரமற்றது.
துஞ்சு-உறங்கு, சா, இற.
துடைத்தல்-அழித்தல்.
துட்டர்-துஷ்டர்.
துணிவு-1. நிச்சயம்.

2. தைரியம். (துணிந்து-தேறி, தைரியத்தோடு)

துணுக்கு-பயம்.

துணை-1. இரட்டை.
2. பேடை.
3. சகாயம் (துணைமை).
4. சிநேகன்.

துண்டம்-மூக்கு.

துண்ணென-திடுக்கென, விரைவாக.

துதி-புகழ். (துதிக்கலம் - புகழமாட்டோம்.)

துப்பு-பவளம்.

துயில்-உறக்கம், உறங்கு (வி).

துய்ப்ப-அநுபவிக்க.

துய்ய - வெண்மையான, பரிசுத்தமான.

துலை-தராசு.

துவக்கி-தொடங்கி.

துவக்கிந்திரியம்-ஸ்பரிச இந்திரியம், தொட்டறியுமுணர்வு.

துவரை-துவாரகாபதி, கிருஷ்ண பகவானுடைய வாசஸ்தலம்.

துவாதசாந்தத்துறை-மதுரை நகரத்திற்குரிய பெயர்களுள் ஒன்று.

துறத்தல்-1. சந்நியாசியாதல், உலகப் பற்று நீங்குதல்.
2. நீங்குதல், ஒழிதல்.

துறை-நீராடுமிடம்.

துனி-வருத்தம், துன்பம். (துனிபடு நெருக்கு-இடம்பெறாது வருத்தம் விளைக்கிற நெருக்கம்)

துன்னு-நெருங்கு (துன்னலர்-பகைவர்.)

துன்று-திணிந்த, அடர்ந்த, நெருங்கிய.

தூக்கிய-வரையறுத்துச் சொல்லிய.

தூக்கு-உறி, (மயிர்த்தூக்கு-மயிருறி)

தூங்கு-உறங்கு, தாழ், தொங்கு.

தூசு-வஸ்திரம், உடை.

தூணி-அம்புக்கூடு.

தூமம்-புகை.

தூய்மை, தூ } பரிசுத்தம்.

தூரியம்-சித்திரம் எழுதுகோல்.

தூர்ப்பவன்-முற்றும்போக்குபவன்.

தெக்கணம்-தெற்கு; தென்னிந்தியா.

தெண்ணீர்-தெளிந்த ஜலம்.

தெத்து-ஸ்வீகாரம் எடுத்தல்.

தெரிக்க-சொல்ல.

தெரியல்-பூமாலை.

தெரிவை-மாது, பெண்.

தெருள்-தெளிவு (தெருட்டிட-தெளிவாய் விளக்கிட)

தெவ்வர்-பகைவர் (தெவ்வீர்-பகைவர்களே)

தென்மொழி-தமிழ்.

தென்னவன்-பாண்டியன்.

தேக்கு-1. நிரம்பித்ததும்பு.
2. ஒருஜாதிமரம்.

தேசிகன்-குரு.

தேசிகம்-ஒளி.

தேமொழி-இனியசொல்.

தேயம்-தேசம்.

தேர்-தெரி, அறி, (தேர்குவன்-தெரிந்துகொள்வன்)

தேறு-ஆராய்.

தேற்றம்-1. தேறுதற்பொருட்டுச் சொல்லும் வார்த்தை. 2. தெளிவு.

தையல்-பெண் (தையால்-பெண்ணே)

தொகை-எண், எண்ணிக்கை.

தொகுதி-கூட்டம்.

தொடர்பு-சம்பந்தம்.

தொடரியல்-பின்பற்றும் ராஜ்யதந்திரம்.

தொடி-வளையல்.

தொடு-தோண்டு; தீண்டு.

தொடை-மாலை.

தொண்டு-அடிமை.

தொலைய-முற்ற, முடிய.

தொல், தொல்லை } பழைமை.

தொல்மொழி-பழமொழி.

தொழுதி-கூட்டம்.
தொழும்பு-ஏவல்; அடிமைத்தொழில்.
தோகை-மயில்போன்ற பெண்.
தோடம்-தோஷம், குற்றம்.
தோட்டி-துரட்டி.

### ந

நகு-சிரி, நகை-சிரிப்பு, இகழ்ச்சி.
நங்கூரம்-கப்பலைக்கடலிலே ஒருநிலையாய் நிறுத்துவதற்கு உபயோகிக்கும் கருவி (anchor).
நங்கை-பெண்ணிற் சிறந்தவள்.
நச்சு-விரும்பு, அன்புகூர்.
நடம்-நடனம், நிருத்தம்.
நடித்தல்-வேஷம்போடுதல், பாசாங்கு பண்ணுதல்.
நட்டல்-சிநேகித்தல்.
நணுகு-நெருங்கு, வா.
நண்ணலர்-பகைவர்.
நண்ணல்-நெருங்குதல், அடைதல்.
நண்ணார்-1. பகைவர் (பெ)
2. சேராமாட்டார் (வி)
நந்தா-கெடாது; விருத்தியடைந்து.
நமர்காள்-நம்முடையவர்களே.
நமன்-யமன்.
நயப்பு-அன்பு, பரிவு, வசீகரம்.
நயனம்-கண்.
நலிதல்-வருத்துதல்.
நல்கல்-கொடுத்தல்.
நவில்-சொல். (வி)
நவ்வி-அழகு.
நளி-1. பெருமை 2. தேள்.
நளினம்-தாமரை.
நள்-செறிந்த, அடர்ந்த (நள்ளிருள்)
நறு-வாசனை; மணம்.
நறை-வாசனை, தேன்.
நற்றாய்-பெற்றெடுத்த தாய்.
நனவு-விழிப்பாக இருக்கும் நிலை.
நனி-மிகவும்.
நாடு-1. தேசம். 2. ஆராய். 3. விரும்பு.
நாட்பு-வலிமை, பலம், சக்தி.

நாண்-கயிறு; வில்லிற் பூட்டுங்கயிறு.
நாதம்-சப்தம்.
நாப்பண்-மத்தி, நடு.
நாயனார்-திருவள்ளுவர்.
நாலி-முத்து.
நாற்கவி-நான்குவகைப்பாட்டு. அவை: ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்.
நாற்படை-சதுரங்கசேனை.
நாற்றிய-தூக்கியிருக்கிற.
நான்முகன்-பிரமன்.
நிகழ்-நேரிடு, உண்டாகு.
நிகழ்த்து-சொல். (வி)
நிகாதர்-வஞ்சகர்.
நிசி-இராத்திரி.
நிசிதம்-கூர்மையான; அடர்ந்த.
நிணம்-கொழுப்பு.
நிண்ணயம்-வரையறை.
நிதனம்-அழிவு, நாசம்.
நிதி-செல்வம்.
நித்தா / நித்தை } இகழ்ச்சி, கேவலம்.
நிமல-அழுக்கற்ற, வெண்மையான.
நிமித்தம்-குறி.
நிமித்திகர்-ஜோஷியர்.
நிம்பம்-வேம்பு.
நிரந்தரம்-இடைவிடாது, எப்பொழுதும்.
நிருபன்-அரசன்.
நிருபாதிகம்-காலதேச விவகாரங்களைக்கடந்துநிற்கும் நிலை.
நிரை-கூட்டம்.
நிலவு-ஒளிவிடு, விளங்கு.
நிவாதம்-(நிவாஸம்) தங்குமிடம்.
நிறுவு-நேர்நிறுத்து.
நிறை-கற்பு.
நின்மலம்-பரிசுத்தம்.
நீத்தம்-வெள்ளம்.
நீத்து-கைவிட்டு, நீங்கி.
நீவிடில்-தடவினால். (நீவு-பகுதி)
நுண்-பொடியான, நுண்மை-கூர்மை.
நுதல்-நெற்றி.
நுதி-கூர்மை.

நுவல்-சொல். (நுவன்று-சொல்லி.)
நுளைச்சியர்-பரதவப்பெண்கள், அளத்திகள்.
நூல்-சாஸ்திரம்.
நெடுந்தகை-1. மிக்கதகுதி.
2. அதனையுடையவன்.
நெய்தல்-கடலும்கடல்சார்ந்தஇடமும்.
நெருஞ்சில்-ஒருவகை முட்செடி.
நெல்லை-திருநெல்வேலி.
நெறி-ஒழுக்கம், வழி.
நேர்-உண்டாகு ; பொருந்து ; உடன்படு; ஏற்றுக்கொள்; எதிர்.
நொச்சி-பகைவரால் வளைக்கப்பட்ட மதிலைக்காப்பவர் சூடும் பூமாலை.
நோ-வருத்தம், துன்பம்.
நோற்று-தவஞ்செய்து.

## ப

பஃறி-தோணி.
பகடி-பரிஹாஸம், கேலி.
பகர்-சொல் (லி)
பகழி-அம்பு, கணை.
பங்கம்-குற்றம், இடையூறு.
பங்கயம்-தாமரை.
பங்கர்-இல்லாதவர். (சுதந்தரபங்கர்).
பசுபதே- உயிர்களுக்கு நாயகனே, சிவனே.
பசை-ஈரம், இரக்கம்.
பச்சாத்தாபம் - செய்தபிழைக்கு இரங்குதல்.
பஞ்சவன்-பாண்டியன்.
பஞ்ச-ஐந்து; பஞ்சாசத்-ஐம்பது.
படர்-போ, பரவு, விரி.
படாம்-திரைச்சீலை.
படி-பூமி, உலகம்; அடங்குதல்.
படித்து-தன்மையுடையது.
படிறு-வஞ்சகம், பொய்.
பணி-ஆபரணம், அலங்காரம்; ஏவல், தொழில், கடமை; அடங்கி நட.
பணை-(பண்ணை)நீர்வளமுள்ள இடம்.
பணைத்து-கொழுத்து, தடித்து.
பண்-இசை, ராகம்.
பண்பு-குணம், தன்மை; நெறிமுறை.
பதடி-பதர் போன்றவன்
பதாகை-கொடி.
பதி-1. நகரம். 2. தலைவன், நாயகன்.
பதுமம்-தாமரை.
பந்தம்- தொடர்பு, உலகப்பற்று.
பயத்தல்-பெற்றெடுத்தல், பிரயோஜனந்தருதல்.
பயில்-பழகு. பயிற்று-கற்றுக்கொடு.
பரசியம் - ரகசியத்திற்கு எதிர்மறைச்சொல்: விளம்பரம்.
பரணம்-ஆளுதல், (இராஜ்யபரணம்)
பரதம்-பரதகண்டம்,இந்தியா தேசம்.
பரம-பெருமையான.
பரம்-மேலுலகம்.
பரல்-கூழாங்கல்.
பரவு-1. அகல், விரி. 2. வணங்கு.
பரவை-கடல்.
பராகம்-மகரந்தப்பொடி.
பரி-குதிரை.
பரிசு-தன்மை, விதம்.
பரிணமித்து-மாறி.
பரிதபி-வருந்து, துன்பமுறு.
பரிபுரம்-பாதகிங்கிணி.
பரிவு-அன்பு.(பரிந்து-அன்புகூர்ந்து.)
பருகு-குடி, உண்.
பருதி-1. சூரியன். 2. ஒளி.
பலம்-பழம்.
பலிதம்-பயன்தரக்கூடியது.
பவம்-பிறப்பு(பவபாசம்-பிறவித்தளை).
பழனம்-விளைநிலம், கழனி.
பள்ளி, பள்ளிச்சாலை } பள்ளிக்கூடம்.
பள்ளு-ஒருவகைப் பிரபந்தம்.
பற்று-சகாயம், துணை.
பனி-குளிர், வருத்தம்.
பனித்தல்-நீர் துளித்தல்.
பனிவரை-இமயமலை, மேருமலை.
பனிப்பு-வருத்தம்.

பாங்கு–தகுதி (பாங்காந் தரு.)
பாசம்–பந்தம், கட்டு, தளை.
பாசறை–போர்மேற் சென்ற அரசன் தங்குதற்கு அமைக்கப்பட்ட விடுதி.
பாடு-காரியம் ; வருத்தம்.
பாடை-(பாஷை)மொழி.
பாணர்–பாடுவோர்.
பாண்டில்–வண்டி.
பாத்திரம்–தகுதி.
பாய்–பரந்த.
பாரதி–சரஸ்வதிதேவி.
பாரிசாதம்–பவளமல்லிகை.
பார்-பூமி.
பார்க்கவி-லட்சுமிதேவி.
பார்த்திபன்-அரசன்.
பாலை–வனாந்தரம்.
பாவனை-நினைப்பு.
பாவை–பொம்மை.
பாறு-பருந்து.
பாற்று-தன்மையுடையது.
பிகம்-குயில்.
பிசிதம்–வேம்பு.
பிச்சி-பைத்தியம்பிடித்தவள்.
பிடி–பெண்யானை; அதுபோன்ற நடையுடையவள்.
பிணி–கட்டு, நோய்.
பிணைதல்–கூடுதல், புணர்தல்.
பிதிர்-பிதுர்க்கள், மூதாதையர்கள்.
பிரசுரன்–சுக்கிராசாரியார்.
பிரதிபந்தம்–இடையூறு.
பிரத்தியக் - பூர்வத்திலுள்ள; உள்முகமான.
பிரபோதம்– மெய்ஞ்ஞானம்,
பிராந்தி-மயக்கம்; ஆசை.
பிழைத்தல்–1. தப்பித்துக்கொள்ளல். 2. தப்பிதஞ்செய்தல்.
பிளிறு–குமுறிச்சத்தமிடு.
பிறகிடல்–வாராதிருத்தல், பின் வாங்கல்.
பிறங்கும்-1. விளங்கும். 2. மிக்கு நிறையும் 3. ஒலிக்கும்
பீடு-பெருமை.
பீடை-துன்பம்.
புகட்டு–அறியச்செய்.
புகர்–கபிலநிறம், மங்கிய செந்நிறம்.
புகல்–சொல் (வி); அடைக்கலம்.
புங்கவர்–(துறவிகளிற்) சிறந்தவர்.
புடை–1. பக்கம். 2. ஓங்கியடி.
புணரி-கடல்.
புதர்–செடிக்காடு.
புதல்வன்-மகன். (புதல்வி–மகள்)
புந்தி-(புத்தி) அறிவு.
புயல்-மேகம்.
புரந்தரன்–இந்திரன்.
புரந்து–பாதுகாத்து.
புரம்-நகரம்.
புரவலன்–அரசன்.
புரவி-குதிரை.
புராணம்–பழங்கதை.
புரி-1. நகரம். 2. செய் (வி)
புரிசை-மதில்.
புரை-1. குற்றம், கீறல், 2. ஒத்திரு.
புரோகிதன்-ஜோஸியன்.
புலப்படு–தெளிவாகத்தோன்று.
புலமை-கல்வி, பாண்டித்தியம்.
புலம்,புலன்–1. பொறிகளின் வழியாக விஷயங்களையறியும் அகப்பகுதி. அறிவு. 2. இடம்.
புலம்புறல்-அழுதல்.
புலர்-வெய்யிலிற் காய்.
புலால்-மாமிசம்.
புலை-இழிவு.
புல்–இழிந்த, தாழ்ந்த. (புல்லியர்)
புல்லார்–பகைவர்.
புவனம்–உலகம்.
புளகம்-மயிர்க்கூச்சு.
புள்–பறவை ; வண்டு.
புறம்–1. முதுகு, புறங்கொடுத்தல்-முதுகு காட்டியோடுதல். 2. பக்கம்.
புற்புதம்-நீர்க்குமிழி.
புனல்-நீர், வெள்ளம்.
புனிதர்–பரிசுத்தர்.

புனை—அணி, அலங்கரி.
புன்மையோர் — இழிந்தோர்.
பூதப்பொருள்—பஞ்சபூதங்களின் சேர்க்கையாலாகிய பொருள், இயற்கைப்பொருள்.
பூதம்-பஞ்சபூதம், (மண், புனல், தீ, காற்று, ஆகாசம் என்பன.)
பூதலம்—பூமி.
பூதி—விபூதி, திருநீறு
பூபதி-உலகத்திற்குத் தலைவன்.
பூவை-நாகணவாய்ப்பக்ஷி.
பூவையர் } பெண்கள்.
பூவைமார் }
பூரணம்-முழுமுதற்பொருள்.
பூரிய-எழையான.
பூர்வதிசை—கீழ்த்திசை.
பெட்பு—அன்பு, காதல்.
பெண்ணை—பனை.
பெத்த-கட்டுப்பட்ட.
பெயர்-1. திரும்பு. 2. நட.
பெய்-இடப்பட்ட
பெற்றி-தன்மை.
பேதமற-வேற்றுமையில்லாமல்.
பேதை—சிறுமி, பெண்.
பேதைமை-மடமை.
பேய்த்தேர்—கானல்நீர்.
பேழ்-பெரிய.
பேறு—லாபம், பாக்கியம்.
பைத்த-பசுமையான.
பொதியில்-பொதியமலை.
பொய்யாப்புள்—சலாங்கு என்ற பக்ஷி.
பொரு—சண்டை செய்,மோது,தாக்கு
பொருக்கென-விரைவாய்,சட்டென்று
பொருட்டு-பொருளுடையது.
பொருநர்-யுத்தவீரர்.
பொருந்தலர்—பகைவர்.
பொருப்பு-மலை.
பொருவு-ஒப்பு.
பொருனை - தண்பொருனைநதி.
பொருனைத்துறைவன்—சேரன்.
பொலம்,பொலன்-1.பொன்.2.அழகு.
பொலி-விளங்கு.
பொலிவு-அழகு.
பொழில்-சோலை.
பொறி-1. வரி, ரேகை. 2. தீப்பொறி 3. யந்திரம். 4. ஐம்பொறி. 5. தெறி, அடையாளமிடு.
பொறை-பொறுமை.
பொறையன்—சேரன்.
பொற்பு-அழகு.
பொன்னேர்-நாட்கொண்டுபூட்டும்ஏர்
பொன்வரை—மேருமலை.
பொன்று-செத்துப்போ, இற.
பொன்னகர்-இந்திரனது நகரம்.
பொன்னி—காவிரிநதி.
போதகம்-யானை.
போதகயூதபம்—யானைக்கூட்டத்தில் தலைவனாயிருக்கும் யானை.
போது—1. பூ, தாமரைப்பூ. 2. சமயம்.
போத்து-ஆண்மயில்.
போந்தை-பனை.
போர்-குவியல், நெற்போர்; யுத்தம்.
போழ்து-சமயம்.
போற்று—கொள்; துதி, புகழ்.
போனகம்—ஊண்.
போன்ம்—போலும்.
பௌவம்—கடல்.

## ம

மகவு-பிள்ளை, குழந்தை.
மகுடம்-கிரீடம்.
மகோததி- (மகா+உததி) பெருங்கடல்.
மங்குல்—மேகம்.
மசகம்-கொதுகு.
மஞ்சு-மேகம்.
மஞ்சுளம்—அழகு.
மடந்தை-பெண்.
மடம்—1. துறவிகள்தங்குமிடம். 2. அறியாமை. 3. இளமை.
மடு—நீர்நிலை; பெய், இடு. (வி)
மட்பரி—பசுமண்ணாற்செய்தகுதிரை.
மண்ணாள்- கழுவமாட்டாள்.

மதனன்-மன்மதன்.
மதி-1. சந்திரன். (மதிமுகிழ் -இளம்பிறை.) 2. அறிவு, புத்தி. 3. ஆராய்ந்தறிந்துகொள். 4. முன்னிலையசை (கொண்மதி)
மந்தகாசம்-புன்சிரிப்பு.
மந்திரம்—1. ஆலோசனை, சூழ்ச்சி. 2. வீடு.
மம்மர்-மயக்கம்.
மரக்கலம்-கப்பல்.
மரபு—முறை.
மருங்கு—இடம்.
மருங்குல்—இடை.
மருட்டு—மயக்கு.
மருதம்-வயலும் வயல்சார்ந்தஇடமும்.
மருப்பு-யானைக்கொம்பு.
மருமான் - மருகன்.
மருவு-நெருங்கு, பொருந்து.
மருள்—மயங்கு.
மலம்—அழுக்கு, மும்மலம்.
மலயம்-ஒரு மலையின்பெயர்.
மலயமன்னவன் } சேரன்.
மலையன் }
மலைமகள்-பார்வதிதேவி.
மலைவு—கலக்கம்.
மல்கு-நிரம்பு (மல்கிய)
மழை—மேகம்.
மள்ளர்-வீரர்.
மறலி—யமன்.
மறு-குற்றம்.
மறுகு—மயக்கம்; வருத்தம்.
மறை—வேதம்,
மனக்கோள்—குறிப்பு, நோக்கம்.
மனம்பற்றினர்—உணர்ந்தவர்.
மனுமுறை—மனுதர்மசாஸ்திரத்திற்கூறிய நியாயம்.
மனோகரம்—மனத்தை வசீகரித்தல்.
மன்—1. நிலைபெற்ற 2. அரசன்.
மன்பதை—மக்கள்வகுப்பு.
மன்றல்-கலியாணம்.
மன்று-கூட்டம், சபை.
மன்னன்—அரசன்.
மா—மிருகம்; பெரிய.
மாகுலம்-மிருகக்கூட்டம்.
மாக்கள்—மக்களில் தாழ்ந்தோர், மிருகம்.
மாசு—குற்றம், அழுக்கு, கறை.
மாடு-ஓரம், பக்கம்.
மாண்டோர்கள்-1. மாட்சிமைப்பட்டவர்கள். 2. இறந்தோர்கள். 3. தற்போதமிழந்து நிற்பவர்கள்.
மாந்தர்-மக்கள்.
மாய்ப்பேன்—கொல்வேன்.
மாருதம்- காற்று (மலயமாருதம்-தென்றற்காற்று)
மாலை—1. சாயங்காலம். 2. பூமாலை.
மால்-1. மயக்கம். 2. விஷ்ணு.
மாள்—சா.
மாறன்—பாண்டியன்.
மாறாய்-தவறாய்.
மாறு—கைம்மாறு.
மாற்றம்-சொல்.
மாற்றலர்—பகைவர்.
மாற்றொலி—எதிரொலி. (echo)
மானு-ஒப்பாகு.
மிசை—1. துன்பம். 2. அளவுக்கு அதிகமாயுள்ளது.
மிசை-மேல்.
மிடி-வறுமை, தரித்திரம்.
மிண்டலை-பேசாதே. (மலையாளம்)
மிழற்று—இனிமைபெறச் சொல்.
மீக்கொள்—அதிகரி, அதிகப்படு.
மீட்க—திரும்பவும் பெற்றுக்கொள்ள
மீனம்-மீன்
மீன்—1. மீன். 2. நக்ஷத்திரம்.
மீன்கோட்பறை-நெய்தல் நிலத்திலே மீன்பிடித்துக்கொட்டும் பறை.
முகடு—சிகரம், உச்சி.
முகமன்-முகஸ்துதி.
முகில்—மேகம்.
முகிழ்—அரும்பு.
முகை- அரும்பு,மொட்டு.

முசிப்பு-முடிவு (முசிப்பிலா).
முடிய-1. முற்றும். 2. அழிந்தொழிய.
முதிய-வயதுசென்ற.
முது-பழைய.
முத்தம்-முத்து.
முந்நீர்-கடல்.
மும்மை-மூன்று.
முயக்கம்-புணர்ச்சி, ஆலிங்கனம்.
முயல்-பிரயத்தனம்செய்.
முயற்கொம்பு-உலகத்தில் எக்காலத்திலுமில்லாததற்கு உதாரணம்.
முரண்-வலி.
முருகு-வாசனை, மணம்.
முருக்கு-முள்முருக்கம்பூ.
முளரி-1. முள்மரம்; காடு.
2. தாமரை.
முளை-மூங்கில்.
முறி-அறை. (மலையாளவழக்கு)
முறுவல்-புன்சிரிப்பு.
முறைமை-நியாயம்.
முனிவரர்-ரிஷிகளில்மேலானவர்.
முன்னோர்-நினைக்கமாட்டார்.
மூதுருவம்-பழையவடிவம்.
மூர்த்திதலம் – மூர்த்திவிசேஷமுள்ள க்ஷேத்திரங்கள்.
மூலம்-கிழங்கு.
மெய்-உண்மை; உடல், சரீரம்.
மெழுகினும்-மெழுகைப் பார்க்கிலும்.
மேதினி-உலகம்.
மேதை-அறிவு.
மேவரு-1. ஆசையுண்டாகக் கூடிய.
2. அடைதற்கரிய.
மேவலர்-பகைவர்.
மேவு-பொருந்து.
மை-கறுத்த.
மைந்தர்-1. புருஷர். 2. புத்திரர்.
மொழி-1. பாஷை. 2. சொல் (வி)
மொய்-வலிமை, திரட்சி, நெருக்கம்.
மோனம்-மௌனம்.
மௌலி-கிரீடம்.

ய

யதி-முனிவன்.
யத்தனம்-முயற்சி.
யாக்கை-உடம்பு.
யாண்டும்-எல்லாவிடங்களிலும்.
யாப்புற்று-கட்டப்பெற்று.
யாமம்-இராத்திரி.
யூதபம்-(யானைக்) கூட்டத்தைக் காக்கும் தலைவன் யானை.

ர

ரதம்-தேர்.
ராஜேந்திரன் – அரசர்களுக்குள் தலைமை பெற்றவன்.

வ

வகித்தான்-தாங்கினான், ஆண்டான்.
வகுத்தல்-பிரித்தல்,விவரமாகச்சொல்லுதல்.
வஞ்சம்-வஞ்சகம், கபடம்.
வஞ்சி-1. சேரனது இராஜதானி.
2. பூங்கொடி போன்றவள்; பெண்.
3. பகைவர்மேற் படையெடுத்துச்செல்லுதல். வஞ்சித்தொடை–அவ்வாறு செல்லும்போது அடையாளமாகச் சூடப்படும் மாலை.
வஞ்சியர்-சேரநாட்டார்.
வஞ்சியன்-சேரன்.
வஞ்சியான்-1. சேரன். 2. வஞ்சிக்கமாட்டான்.
வஞ்சைக்களம்-திருவஞ்சைக்களம் என்ற நகரம்.
வடக்குநோக்கி-கப்பலோட்டிகள் திசையறிதற்கு உபயோகிக்குங் கருவி. இது மின்ஸார சக்தியின் இயக்கத்தால் வடக்குத் திசையையே காட்டி யசைந்து நிற்கும்.
வடதளம்-ஆலிலை (வடம் - ஆலமரம், தளம்-இலை.)
வடமொழி-சம்ஸ்கிருதம்.
வடி-கூர்மை (வடிவேல்).

வடிவு-அழகு.
வண்-வளமுள்ள.
வண்டானம்-நாரை.
வதனம்-முகம்.
வதிதல்-இருத்தல்.
வதுவை-கலியாணம்.
வயங்கு-நிறை.
வயம்-வலிமை, ஜயம்.
வயவர்-வீரர்.
வயின்-இடம்.
வரை-1. மலை. 2. எல்லை. 3. கோடு.
வரைப்பு-இடம், எல்லை.
வலம்வர-சுற்றிவர.
வலி-1. வல்லமை.2. பெருமை. (மலையாளவழக்கு.)
வல்லை-விரைவில்.
வழங்கு-1. தா. 2. கூறு.
வழிஞர்-யாத்திரை போவோர். மாகிதி வழிஞர்-திரவியம் தேடுதற்பொருட்டு அந்நிய தேசங்களுக்குக் கப்பல் யாத்திரை செய்வோர்.
வழுதி-பாண்டியன்.
வளை-வளையல், சங்கு.
வள்ளல்-யாதும் யார்க்கும் இல்லையென்னுமற் கொடுப்பவன்.
வள்ளை-ஒருவகைக் கொடி.
வறிது-வீண்; பொருளில்லாமை.
வற்கலை-மரவுரி.
வனம்-காடு.
வன்னி-தீ, நெருப்பு.
வாகு-தோள்.
வாசகம்-திருவாசகம் என்ற நூல்.
வாசிட்டம் - ஞானவாசிட்டம் என்ற நூல்.
வாஞ்சாவசம்-அன்பின்வழிப்பட்டது, விருப்பம் சென்றவழியேபோவது.
வாஞ்சை-அன்பு, விருப்பம்.
வாணிபம்-வியாபாரம்.
வாதம்-தருக்கம்.
வாதவூரர்-திருவாதவூரிற் பிறந்தவராகிய மாணிக்கவாசக சுவாமிகள்.
வாதியர்-தருக்கம் செய்வோர்.
வாம்-(வாவும்)-பாய்ந்து செல்லுகிற.
வாயசம்-காக்கை.
வாயில்-வாசல்; வழி; உபாயம்.
வாய்-1. இடம் (பெ) 2. (வி) தகுதியாய்ப் பொருந்து.
வாய்மை-சத்தியம்.
வாரணம்-யானை.
வாரம்-பக்கம்; நீர்க்கரை.
வாரலை-வாராதே.
வாரி-கடல்.
வாரிசம்-தாமரை.
வார்-நீண்ட.
வால்-வெண்மையான.
வாவல்-வௌவால்.
வாளா-சும்மா.
வானவன்-1. கந்தருவன். 2. சேரன்.
வானம், வான்-ஆகாயம்.
விகாரம் -இயற்கைக்கு மாறுபட்டது.
விசயை-ஜயலட்சுமி.
விசும்பு-ஆகாயம்.
விசுவாசகாதகர்-செய்ந்நன்றி கொன்றவர்.
விசைத்து -வேகத்துடன்.
விஜயம் வெற்றி.
விஜயன்-அருச்சுனன்.
விஜயீபவ-ஜயவான் ஆகுக: இது ஒரு வாழ்த்துமுறை.
விடம்-விஷம், நஞ்சு.
விடயம்-விஷயம், பொருள்.
விடை-விடுதலை; உத்தரம். பதில்.
விண்-1. ஆகாயம். 2. தேவலோகம்; விண்ணணங்கு-தேவமாதர். [கி.
விண்டு- திறந்து, உடைந்து, விட்டுநீங்
விதிர்த்து - நடுங்கி (விதிர் விதிர்த்து-நடுநடுங்கி).
விது-சந்திரன்.
விநோதம்-ஆச்சரியம்.
விந்தம்-விந்தியமலை. விந்தமடக்கினோன்-அகஸ்தியர்.
விந்தை-விநோதக்காட்சி.

விபத்து-ஆபத்து.
விபூதி-திருநீறு.
விமலன்-அழுக்கற்றவன், பரிசுத்தன்.
வியஞ்சனம்-அறிகுறி.
வியந்தவை - அதிசயித்து ஏற்றுக்கொண்டவை.
வியப்பு-ஆச்சரியம்.
வியர்த்தம்-பாழ், வீண், பயனற்றது.
வியாகுலம்-துக்கம்.
வியாசன்-ஒரு ரிஷி. இவர் வேதம் வகுத்தவர்.
விரகம்-காதலர்க்குள் ஏற்படும் பிரிவு.
விரசம்-ரசமில்லாமை, அதிருப்தி.
விரவு-சேர், பொருந்து.
விராகம்-வைராக்கியம், பற்றொழிவு, வெறுப்பு.
விரிதலை-அகன்ற இடம்.
விருத்தம்-எதிரிடை, பகை.
விரூபம்-அவலக்ஷண வடிவம்
விரை-1. வாசனை. மணம். 2. துரிதப்படு.
விலங்கு-மிருகம்.
விலோதனம்-துகிற்கொடி.
விழவு-திருவிழா.
விழுமம்-சிறப்பு, துன்பம்.
விழை-ஆசைப்படு, விரும்பு.
விளம்பனம்-தாமதம்.
விளர்-வெளுத்த.
விளி-1. சப்தம். 2. கூப்பிடு, அழை.
விள்-விடு.
வினயமாய்-மரியாதையாய்
வினை-தொழில், காரியம்.
வீக்கிய-கட்டிய.
வீங்கு-பரந்த, அடர்ந்த
வீடு-மோக்ஷம்.
வீதல்-சாதல், அழிதல்.
வீறு-பெருமை, வலி.
வெகுளி-கோபம்.
வெங்-முதுகு.
வெம்-கொடிய.
வெய்துயிர்த்தல் - வருத்தத்தால் உஷ்ணமாய் மூச்சுவிடுதல்.
வெய்யோன்-சூரியன்.
வெருவு-பயப்படு.
வெள்ளி-சுக்கிரன்; நக்ஷத்திரம்.
வெள்ளியது-வெள்ளியினாற் செய்யப்பட்டது; அற்பமானது.
வெள்ளில்-விளாங்காய்.
வெறுக்கை-செல்வம்.
வெற்றுரை-வீண்வார்த்தை.
வென்றி-வெற்றி, ஜயம்.
வேகவதி-வைகையாறு.
வேட்டல்-1. கலியாணஞ் செய்தல். 2. விரும்புதல்.
வேட்டையார்-வேட்டையாடுபவர்.
வேணி-சடைமுடி.
வேதசிகை-வேதங்களுக்குச் சிரஸ்தானமாகவுள்ள உபநிஷத்துக்கள்.
வேதித்து-மாற்றி
வேய்-மூங்கில். சூடு, அணி. (வி)
வேலை-கடல்; பிரவிருத்தி.
வேழம்-யானை.
வேள்வி-யாகம்.
வேற்றுமை-மாறுபாடு.
வை-1. கூர்மை. 2. வைக்கோல்.
வைகறை-விடியற்காலம்.
வைக்கம்-ஒருமுக்கிய சிவக்ஷேத்திரம்; திருவிதாங்கூரிலுள்ளது.
வைபவம்-பெருமை.
வைப்பு-நிதி, செல்வம்.
வைராக்கியநூல்-உலகப்பற்றொழித்தலைப் போதிக்கும் நூல்.
வௌவு-களவுசெய், திருடு.

அநுபந்தம் முற்றிற்று.

